வெளியீடு எண் 18.



உ
சிவமயம்

# அரனாரின் அருளாடல்

இது

திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்தொன்றாவது குருமகாசந்நிதானம்
**ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்**
கட்டளையிட்டருளியபடி
வெளியிடப்பெற்றது.

திருவிடைமருதூர் ஸ்ரீ மகாலிங்கசுவாமி தேவஸ்தானம்
**வைகாசி வசந்தோத்ஸவ வெளியீடு.**

1963

உ
சிவமயம்

# முகவுரை

---

" அன்னல் ஆலவாய், நண்ணி னன்றனை
எண்ணி யேதொழத், திண்ணம் இன்பமே "

சொக்கன் என்ருல் அழகன் என்று ஒரு பொருள். அழகனை நாம் சுந்தரன் என்று அழைக்கிருேம். சுந்தரனுகிய கடவுளை அழகின் நிறைவு என்று எண்ணி வழி படுவது நம் தமிழ்நாட்டின் மரபு. ஆனுல் நாம் இன்று அழகுக்கு அழகுசெய்து வழிபடஎண்ணி ஆண்டவனை அணிகளாலும் மணிகளாலும் அலங்கரித்து வழிபடப் பழகிவிட்டோம். அழகுதான் கடவுள் என்ற முடிவும் வந்துவிட்டது.

திரு ஆலவாயழகராகிய இறைவனது திருப்பெயர் சொக்கன் என்பது. சொக்கத்தங்கம் என்னும் வழக்கு உண்மையும் உய்த்தறிக. ஆலவாய் இறைவனையே நாம் சுந்தரர் என்று பெயரிட்டழைக்கின்ருேம்.

சொக்கரது திருவிளையாடல்களைக் கூறும் நூல்கள் பலவாம். இறைவனது முத்தொழிலும், ஐந்தொழிலும் விளையாட்டே. ஆயினும் இவ்விளையாட்டு மதுரையில் தான் ஏற்றம்பெற்று விளங்கிற்று. தமிழ்நாட்டில் திரு விளையாடல் என்று ஒருவர் கூறினுல் உடன் அதனைக் கேட்பவர்களுக்கு மதுரையின் நினைவுதானுண்டாகும். திருவிளையாடலை நமக்கு ஆக்கித் தந்தவர் திருமறைக் காட்டில் தோன்றிய பரஞ்சோதி முனிவர் ஆவர்.

பரஞ்சோதிமுனிவரையன்றி, செல்லிநகர்ப் பெரும் பற்றப்புலியூர் நம்பியும் திருவாலவாயுடையார் திரு விளையாடற்புராணம் என்ற ஒருநூல் பாடியுள்ளார். அவர் அந்நூலுள் இறைவனைச் சொக்கன் என்றே குறிப்பிடுகிறார். விமநாதபண்டிதர் பாடிய கடம்பவன புராணத்துள் இலிலா சங்கிரக அத்தியாயம் என்ற ஒரு அத்தியாயம் உள்ளது. அனதாரியப்பரால் பாடப் பட்ட சுந்தரபாண்டியமும் திருவிளையாடல்களையே கூறுகின்றது. விரபத்திரக்கம்பர் என்பார் எழுதிய திரு விளையாடற் பயகர மாலையும் அதனையே கூறுகின்றது. இவ்வளவு நூல்கள் இறைவனுடைய ஆடல்களை எடுத் துக் கூறினும், திருவிளையாடல் என்று கூறியவுடனே இன்று நம் தமிழ்நாட்டவருக்குப் பரஞ்சோதியாரின் நினைவே எழுகின்றது. காரணம் புலவர் திருவிளை யாடலைத் தமிழ்மொழியோடு இணைத்து, தமிழ்ச்சுவை மலியப் பாடியுள்ளமையே. இவரது பாடல்களிலுள்ள தமிழ் ஓசை தனிச்சிறப்பினையுடையது. தமிழ்ப்பற்றும் அளவிட்டுரைக்கக் கூடியதன்று. இதனைக் "கண்ணு தற்பெருங் கடவுளும் கழகமோடு அமர்ந்து, பண்ணு றத்தெரிந் தாய்ந்தஇப் பசுந்தமிழ்" என்னும் பாடல் அடிகள்கொண்டே அறிந்துகொள்ளலாம்.

புராணம் என்பது பழைய வரலாறு என்ற பொரு ளினைத் தரும் ஒரு சொல்லாகும். புராணங்கள் கூறும் உண்மைகளைத் தத்துவம் அறிந்தோர் நன்குணர்வர். அதனால் நாம் புராணங்கள் கூறும் வரலாற்றினைத் தள்ளுவதற்கு இல்லை. திருவிளையாடலில் ஒருவாறு பாண்டிய நாட்டு வரலாறு கூறப்பட்டுள்ளமையினை உணரலாம். இவ்வரலாற்றினை, உண்மைக்கு மாறு பாடானது என்று மறுப்போரும் சிலர் உளர். அவர் கூற்றினையெல்லாம் அவர்களுடைய நூலைக்கொண்டு உணர்க. அவ்வாறு ஆராய்ந்தவர் தஞ்சைவழக்கறிஞர்

சினிவாசம் பிள்ளை ஆவார். இறைவனது அருளாடல் களைக் கூறுகின்ற நூலினை அறிஞர்கள் அருட்கண் கொண்டே ஆய்வார்களாக.

நூலினுள் இறைவனது அருளாடலோடிணைத்து அரசர்களது வரலாறுகள், தமிழ்ச்சங்கப் புலவர்களது சிறப்புக்கள், அவற்றுள்ளும் சிறப்பாக இடைக்காடர், நக்கீரர் இவர்களது வரலாறுகள் இணைத்துக் கூறப் பட்டுள்ளன. அவற்ேறாடு பாண்டியநாட்டுத் தனித்தவ அமைச்சராகிய வாதவூரர் வரலாறும் ஏற்றமுறையில் எடுத்து விளக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு நிலையிலும் இந்த நூலின் சிறப்பை உய்த்து உணர்ந்தோமானல் அது நமக்குப் பெரிய அமிர்தமாக நின்று இனிக்கும். இப்பெற்றியைத் தமிழ்ச்சுவையறிந்தோர் அறிவர்.

இறைவனின் முச்சுடர்கள் போன்று விளங்குவன திருத்தொண்டர் புராணம், திருவிளையாடற்புராணம், கந்தபுராணம் என்னும் மூன்றுமாம். இம்மூன்றனுள் திருவிளையாடற் புராணம், இறைவன் ஆன்மாக்கள் பொருட்டு ஆடிய அறுபான் நான்கு அருளாடல்களை விளக்கும் சிறந்த தமிழ்நூல். இப்புராணத்தை அகத் தியர் முருகக்கடவுளர்பால் அறிந்து முனிவர்களுக்கு உபதேசித்தார் என்பது பழைய வரலாறு.

மதுரை மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய மூன்றுனும் விசேடமாய தலம்; மேலும் விராட்புருடனுக்குத் துவாத சாந்தத் தலமாக விளங்குவது. இத்தலச் சிறப்பைப் பாடிய திருவிளையாடற்புராண நூலைச் சைவ மக்கள் இன்றும் தமது சிவபூசையின் முடிவில் முறையாகப் பாராயணம் செய்து வருகின்றமையைக் கண்கூடாக நாம் காணலாம். திருத்தொண்டர்புராணம் போன்று இப்புராணத்திலும் கயிறுசாத்திப் பார்த்து உண்மை யுணரும் பெருவழக்கு நம்மிடை நிலவிவருகிறது.

இப்புராணத்தை முறையாகக் கற்ருேர், கற்ருேர் சொல்லக் கேட்டோராகிய அனைவரும் நல்ல அறிவும், நல்ல ஞானமும் உடையவராய் முடிவில் முத்தியினையும் பெறுவர். சகலசித்தியும் கற்போர்க்கும் கேட்போர்க்கும் எளிதில் கிட்டும்.

இத்தகைய அருள்நூலின் சிறப்பினையும், ஆன்ற சிவஞான உண்மையினையும் நன்கு அறிந்த திருவாவடுதுறை ஆதினத்து 21-வது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் பெருங்கருணையோடு அடியேனை 'அரனாரின் அருளாடல்' என்ற தலைப்பில் இனிய எளிய உரை நடையில் ஆக்குமாறு ஆணையிட்டார்கள். அவர்களது அருளாணையை எண்ணி எளியேன் வந்தித்து வழிபடுவதைத் தவிர வேறு என்செயவல்லேன்.

திருவிளையாடற் புராணத்தை உரைநடை முறையில் முன்பே பலர் வெளியிட்டுள்ளார்கள். இருப்பினும் சைவ நன்மக்கள் அனைவரும் எளிதில் பெற்றுப் பயன் பெறவேண்டுமென்ற பெருநோக்கினாலேயே இந்நூல் இப்பொழுது ஆதினத்துக்குச் சொந்தமான திருவிடைமருதூர் ஸ்ரீமகாலிங்கசுவாமி தேவஸ்தானத்தில் நிகழும் வைகாசி வசந்தோத்ஸவ வெளியிடாக வெளியிடப்படுகிறது. அன்பர்கள் படித்துப் பயன்பெறுவார்களாக.

இங்ஙனம்,

திருவிடைமருதூர்
30—5—1963

பொன். சுப்பிரமணியபிள்ளை,
தலைமைத்தமிழாசிரியர்.
திருவாவடுதுறைஆதின உயர்நிலைப்பள்ளி.



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்தொன்றுவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்

# பொருளடக்கம்

அ

திருச்சிற்றம்பலம்

கறையிலங்கு கண்டனே கருத்திலாக் கருங்கடல்
துறையிலங்கை மன்னனைத் தோளடர வூன்றினுய்
மறையிலங்கு பாடலாய் மதுரையால வாயிலாய்
நிறையிலங்கு நெஞ்சினுல் நினைப்பதே நியமமே.

—திருஞானசம்பந்தர்.

வழுவிலா துன்னை வாழ்த்தி
வழிபடுந் தொண்ட னேனுன்
செழுமலர்ப் பாதங் காணத்
தெண்டிரை நஞ்ச முண்ட
குழகனே கோல வில்லி
கூத்தனே மாத்தா யுள்ள
அழகனே ஆல வாயில்
அப்பனே அருள்செ யாயே.

—திருநாவுக்கரசர்.

பருவரை மங்கைதன் பங்கரைப்
பாண்டியற் காரமுதாம்
ஒருவரை யொன்றுமி லாதவ
ரைக்கழற் போதிறைஞ்சித்
தெரிவர நின்றுருக் கிப்பரி
மேற்கொண்ட சேவகனர்
ஒருவரை யன்றி யுருவறி
யாதென்றன் உள்ளமதே.

—மாணிக்கவாசகர்.

திருச்சிற்றம்பலம்

உ
சிவமயம்

# அரனாரின் அருளாடல்

---

## தோத்திரப்பாடல்கள்

### சொக்கநாதர்

பூவின் நாயகன் பூமகள் நாயகன்
காவின் நாயக னாதிக் கடவுளர்க்(கு)
ஆவி நாயகன் அங்கயற் கண்ணிமா
தேவி நாயகன் சேவடி ஏத்துவாம். 1

### அங்கயற்கணம்மை

பங்கயற்க ணரியபரம் பரனுருவே
தனக்குரிய படிவ மாகி
இங்கயற்க ணகனுலகம் எண்ணிறந்த
சராசரங்கள் ஈன்றும் தாழாக்
கொங்கயற்கண் மலர்க்கூந்தற் குமரிபாண்
டியன்மகள்போல் கோலங் கொண்ட
அங்கயற்க ணம்மையிரு பாதப்போ(து)
எப்போதும் அகத்துள் வைப்பாம். 2

### சபாபதி

உண்மையறி வானந்த உருவாகி
எவ்வுயிர்க்கும் உயிராய் நீரின்
தண்மையனல் வெம்மையெனத் தனையகலா(து)
இருந்துசரா சரங்கள் ஈன்ற

பெண்மையுரு வாகியதன் னனந்தக்
கொடிமகிழ்ச்சி பெருக யார்க்கும்
அண்மையதா யம்பலத்து ளாடியருள்
பேரொளியை அகத்துள் வைப்பாம். 3

சோமசுந்தரக்கடவுள்

சடைமறைத்துக் கதிர்மகுடந் தரித்துநறுங்
கொன்றையந்தார் தணந்து வேப்பந்
தொடைமுடித்து விடநாகக் கலனகற்றி
மாணிக்கச் சுடர்ப்பூண் ஏந்தி
விடைநிறுத்திக் கயலெடுத்து வழுதிமரு
மகனுகி மீன நோக்கின்
மடவரலை மணந்துலக முழுதாண்ட
சுந்தரனை வணக்கம் செய்வாம். 4

தடாதகைப்பிராட்டியார்

செழியர்பிரான் திருமகளாய்க் கலைபயின்று
முடிபுனைந்து செங்கோ லோச்சி
முழுதுலகும் சயங்கொண்டு திறைகொண்டு
நந்திகண முனைப்போர் சாய்த்துத்
தொழுகணவற் கணிமணமா லிகைசூட்டித்
தன்மகுடம் சூட்டிச் செல்வந்
தழைவுறுதன் அரசளித்த பெண்ணரசி
அடிக்கமலம் தலைமேல் வைப்பாம். 5

வெள்ளியம்பலவாணர்

பொருமாறிற் கிளர்தடந்தோ ளொருமாறன்
மனங்கிடந்த புழுக்கம் மாற
வருமாறிற் கண்ணருவி மாறுது
களிப்படைய மண்ணும் விண்ணும்

உருமாறிப் பவக்கடல்வீழ்ந் தூசலெனத்
தடுமாறி யுழலு மாக்கள்
கருமாறிக் கதியடையக் கான்மாறி
நடித்தவரைக் கருத்துள் வைப்பாம். 6

தட்சிணாமூர்த்தி

கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா
றங்கமுதற் கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த
பூரணமாய் மறைக்கப் பாலாய்
எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை
இருந்தபடி இருந்து காட்டிச்
சொல்லாமற் சொன்னவரை நினையாமல்
நினைந்துபவத் தொடக்கை வெல்வாம். 7

சித்திவிநாயகர்

உள்ளமெனுங் கூடத்தில் ஊக்கமெனுந்
தறிநிறுவி யுறுதி யாகத்
தள்ளரிய அன்பெனுந் தொடர்பூட்டி
யிடைப்படுத்தித் தறுகட் பாசக்
கள்ளவினைப் பசுபோதக் கவளமிடக்
களித்துண்டு கருணை யென்னும்
வெள்ளமதம் பொழிசித்தி வேழத்தை
நினைந்துவரு வினைகள் தீர்ப்பாம். 8

முருகக்கடவுள்

கறங்குதிரைக் கருங்கடலும் காரவுணப்
பெருங்கடலும் கலங்கக் கார்வந்(து)
உறங்குசிகைப் பொருப்புஞ்சூ ருரப்பொருப்பும்
பிளப்பமறை யுணர்ந்தோ ராற்றும்

அறங்குலவு மகத்தழலும் அவுணமட
　　வார்வயிற்றின் அழலும் மூள
மறங்குலவு வேலெடுத்த குமரவேள்
　　சேவடிகள் வணக்கம் செய்வாம். 9

நாமகள்

பழுதகன்ற நால்வகைச்சொன் மலரெடுத்துப்
　　பத்திபடப் பரப்பித் திக்கு
முழுதகன்று மணந்துசுவை யொழுகியணி
　　பெறமுக்கண் மூர்த்தி தாளில்
தொழுதகன்ற அன்பெனுநார் தொடுத்தலங்கல்
　　சூட்டவரிச் சுரும்புந் தேனும்
கொழுதகன்ற வெண்டோட்டு முண்டகத்தாள்
　　அடிமுடிமேல் கொண்டு வாழ்வாம். 10

திருநந்திதேவர்

வந்திறை யடியில் தாழும் வானவர் மகுட கோடி
பந்தியின் மணிகள் சிந்த வேத்திரப் படையாற் றுக்கி
அந்தியும் பகலுந் தொண்ட ரலகிடும் குப்பை யாக்கும்
நந்தியெம் பெருமான் பாத நகைமலர் முடிமேல்
　　　　　　　　　　　　　　　　　வைப்பாம். 11

திருஞானசம்பந்தர்

கடியவிழ் கடுக்கை வேணித்
　　தாதைபோல் கனற்கண் மீனக்
கொடியனை வேவ நோக்கிக்
　　குறையிரந் தனையான் கற்பிற்
பிடியன நடையாள் வேண்டப்
　　பின்னுயிர் அளித்துக் காத்த
முடியணி மாடக் காழி
　　முனிவனை வணக்கம் செய்வாம். 12

திருநாவுக்கரசர்

அறப்பெருஞ் செல்வி பாகத் தண்ணலஞ் செழுத்தா
மறப்பெருஞ் செய்கை மாரு வஞ்சக ரிட்ட நீல [லஞ்சா
நிறப்பெருங் கடலும் யார்க்கும் நீந்துதற் கரிய ஏழு
பிறப்பெனுங்கடலுநீத்த பிரானடி வணக்கம்செய்வாம்.

சுந்தரர்

அரவக லல்கு லார்பால்
ஆசைநீத் தவர்க்கே விடு
தருவமென் றளவில் வேதஞ்
சாற்றிய தலைவன் தன்னைப்
பரவைதன் புலவி தீர்ப்பான்
கழுதுகண் படுக்கும் பானாள்
இரவினில் தூது கொண்டோன்
இணையடி முடிமேல் வைப்பாம். 14

மாணிக்கவாசகர்

எழுதரு மறைகள் தேரு இறைவனை எல்லில் கங்குல்
பொழுதறு காலத் தென்றும் பூசனை விடாது செய்து
தொழுதகை தலைமீ தேறத் துளும்புகண் ணீருள் மூழ்கி
அழுதடியடைந்த அன்பனடியவர்க் கடிமைசெய்வாம்.

சண்டேசுரரும் - மற்றை அடியார்களும்

தந்தைதா ளொடும்பிறவித் தாளெறிந்து
நிருத்தரிரு தாளைச் சேர்ந்த
மைந்தர்தாள் வேதநெறி சைவநெறி
பத்திநெறி வழாது வாய்மெய்
சிந்தைதான் அரனடிக்கே செலுத்தினராய்ச்
சிவாநுபவச் செல்வ ராகிப்
பந்தமாந் தொடக்கறுத்த திருத்தொண்டர்
தாள்பரவிப் பணிதல் செய்வாம். 16

### நூற்பயன்

திங்களணி திருவால வாயெம் மண்ணல்
திருவிளையாட் டிவையன்பு செய்து கேட்போர்
சங்கநிதி பதுமநிதி செல்வம் ஓங்கித்
தகைமைதரு மகப்பெறுவர் பகையை வெல்வர்
மங்கலநன் மணம்பெறுவர் பிணிவந் தெய்தார்
வாழ்நாளும் நனிபெறுவர் வானு டெய்திப்
புங்கவராய் அங்குள்ள போகம் மூழ்கிப்
புண்ணியராய்ச் சிவனடிக்கீழ் நண்ணி வாழ்வார்.

### வாழ்த்து

மல்குக வேத வேள்வி வழங்குக சுரந்து வானம்
பல்குக வளங்க ளெங்கும் பரவுக அறங்க ளின்பம்
நல்குக உயிர்கட் கெல்லாம் நான்மறைச் சைவம் ஓங்கிப்
புல்குக உலக மெல்லாம் புரவலன் செங்கோல் வாழ்க.

# மதுரைக்காண்டம்

## நூல் வரலாறு

இறைவன் எண்குண வடிவமானவன் என்னும் உண்மையை எல்லா நூல்களும் எடுத்தியம்புகின்றன. அத்தகைய இறைவன் என்றும் அழிவில்லாது உலகி லுள்ள எல்லாப் பொருள்களினிடமும் கலந்து உறை கின்ருன். அவ்வாறு அப்பெருமான் எல்லாப் பொருள் களினிடமாகக் கலந்தினிது உறைந்தாலும், மக்களாகிய நம்பொருட்டு அவன் சில பல வடிவங்களை எடுத்து, அவ்வடிவங்களின் மூலமாக அருளும் செய்கின்ருன்.

ஒரு திருமுகத்தையுடைய ஒப்பற்ற இறைவன், அருக்கன் மதி அக்கினி என்னும் மூன்று கண்களைப் பெற்றிருக்கின்ருன். சடையில் கங்கையும், பிறையும், கொன்றை மாலையும் காணப்படும். காதிடை ஒருபுறம் சங்கும் மற்ருெருபுறம் தோடும் காணப்படும். நீலகண் டமும், மான் மழு ஏந்திய கரங்களும், திருநீறணிந்த செம்பொன் மேனியும் சிறப்புறத் தோன்றும். என்பு முதலாய மாலைகள் மார்பினிடை விளங்கும். புலித் தோல் உடுத்துள்ள இடையில் உடைவாளும் உண்டு. இத்தகைய திருவுருவத்தை உடைய இறைவனையே நூல்கள் மேலாம் பரம்பொருள் என்று கூறும்.

இத்தகைய இறைவன் இனிது வீற்றிருக்குமிடம் திருக்கயிலை எனப்பெறும் திருமலையாகும். இரத்தினக்

கால்கள் நட்டு வெள்ளி வேயப்பட்ட தன்மையினை உடையது. கயிலாயமலையின் ஒருபுறத்தே கணநாதர் களிப்புடன் இருப்பார்கள்; உள்ளன்புடன் இறைவனை வழிபடுவார்கள். தும்புரு நாரதர் முதலியோர் இனிய இசைபாட, கயிலையையடைந்த முனிவர்களெல்லாம் மனங்கசிந்து கண்கள் நீர்சொரிய இறைவனை மெய்யன் போடு வழிபட்டுக்கொண்டேயிருப்பார்கள். இவ்வாறு வழிபடுகின்ற கூட்டத்தினரையெல்லாம் நந்தியெம் பெருமான் கையில் பொற்பிரம்பு ஏந்தி விலக்கவும் விலகாது வழிபட்டுக்கொண்டே இருப்பார்கள். இறைவனே எண்ணற்ற சூரியன் ஒன்றுசேர்ந்தது போன்ற பேரொளியினைப் பெற்று உமையோடு கூடித் திருக் கயிலையிலே இனிது வீற்றிருந்தருளுவார்.

இறைவன் திருமுன்னர் ஆயிரக்கால் மண்டபம் ஒன்று உண்டு. அந்த மண்டபத்தில் வியாசமுனிவரின் மாணவராகிய சூதமுனிவர் புலித்தோலின்மேல் இனிது வீற்றிருந்தார். அவ்வமயம் சம்புபத்தர், சதானந்தர், உத்தமர், மகோதரர், உக்கிரவிரியர், பிரசண்டர் முதலிய முனிவர்களெல்லாம் இறைவனை வழிபட்டபின்னர், சூதமுனிவர் இருப்பிடத்தையடைந்தார்கள். அடைந்த முனிவர்கள் அனைவரும் சூதமுனிவரை முறையாக வழிபடலானார்கள். பின்னர் இறைவனே எல்லாம் என்பதை உணர்ந்த சூதமுனிவரை நோக்கி, எல்லாம் வல்ல இறைவன் இனிது வீற்றிருந்தருளும் ஒரு சிறந்த தலத்தை அடியேங்களுக்கு அறிவித்து அருள்செய்ய வேண்டும் என்று வேண்டிக்கொண்டார்கள்.

சூதமாமுனிவரால் முன்னரே மேருகிரி, மந்தரகிரி, கயிலாயமலை, ஸ்ரீ சைலம் முதலான பல தலங்களின்

சிறப்புக்கள்விளக்கிச்சொல்லப்பட்டுள்ளன. ஆயினும் முனிவர்கள் யாவரும் இத்தலங்களிலெல்லாம் மேலான சிறப்புடையதாய், மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றுனும் பெருஞ்சிறப்புற்று விளங்கும் தலம் ஒன்றனை அடியேங் களுக்குச் சொல்லியருளவேண்டும் என்று வேண்டிக் கொண்டார்கள்.

முனிவர்கள் வேண்டுகோளை ஏற்ற சூதமுனிவர், முன்னர் இறைவனை முறையாக வழிபட்டார். பின்பு தன் ஞானசிரியரை வழிபட்டார். அதன்பின் சற்று மனத்தில் இறைவனை நினைத்தார். முனிவர்களே! நாம் சொல்லுவதைக் கவனமாய்க் கேட்பீராக; பதினெண் புராணங்களில் கந்தபுராணம்மிகவும் உயர்வுபெற்றது. கந்தபுராணம் சனற்குமார சங்கிதை, சூதசங்கிதை, பிரம சங்கிதை, விட்டுணுசங்கிதை, சங்கரசங்கிதை, சூரிய சங்கிதை என்னும் ஆறு பிரிவுகளைப் பெற்றுள்ளது. அதில் சங்கரசங்கிதையின் உட்பொருளை இறைவன் உமாதேவிக்கு எடுத்து இயம்பினர். அக்காலை முருகப் பெருமான் மடியிடையமர்ந்து புராணப் பொருளினைக் கேட்டு உணர்ந்தார். உணர்ந்த அப்பொருளினை முருகப் பெருமான் தமது மாணுக்கராகிய அகத்தியருக்கு உப தேசித்தருளினுர். அதுமுதல் சங்கரசங்கிதை அகத்திய சங்கிதை என்னும் பெயரினைப் பெற்று வழங்கிவரலா யிற்று. அவற்றுள்ளே கேட்பவர்கட்கு முத்தியினைக் கொடுக்கும் சிறப்புடைய தலமாகத் திருவாலவாய் குறிப்பிடப்பட்டுள்ளது என்று கூறினுர்.

சூதமாமுனிவர் இவ்வாறு கூறியவுடன் ஏனைய முனிவர்களெல்லாம் அவரடி பணிந்து, பெருமானே! அந்தத் திருத்தலத்தின் பெருமையினை எளியோங்கள்

அறிந்துகொள்ளுமாறு அருள்செய்ய வேண்டுமென்று அன்போடு வேண்டிக்கொண்டனர். சூதமாமுனிவர் முனிவர்களது வேண்டுகோளையேற்று அத்தலத்தின் வரலாற்றைச் சொல்லத்தொடங்கினுர்:

முனிவர்களே! பிரமன் ஒருகால் அசுவமேதவேள்வி வேட்க எண்ணங்கொண்டான். அவ்வெண்ணத்தோடு அவன் காசியம்பதியை அடைந்தான். பிரமனுடன் அகத்தியர், வியாசர், நாரதர், சனகர், சனந்தர், சனு தனர், சனற்குமாரர், கௌதமர், பராசரர், வாமதேவர், வான்மீகர், வசிட்டர், சுகர் முதலாய முனிவர்களும் வந்தார்கள். அவர்களுடன் இருந்து பத்து அசுவமேத வேள்வியினை வேட்டு அம்முனிவர்கட்கு வேண்டுவன நல்கி, நான்முகன் சத்தியலோகத்தை அடைந்தான். நான்முகன் சென்றபின் முனிவர்கள் அனைவரும் காசி விசுவநாதரை அடைந்து வழிபட்டு, பின் முத்திமண்ட பத்தை அடையலானுர்கள். அங்கு, தென்முகக் கடவு ளரை வழிபட்டுநிற்கும் நாரத முனிவரைக் கண்டார் கள். கண்டவுடன் 'பெருமானே! எங்கட்கு மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய மூன்றுலும் சிறப்புற்று விளங்கும் ஒரு சிவதலத்தைச் சொல்லியருளும்' என்று கேட்டுக் கொண்டார்கள். நாரதர் வியாசமுனிவரைக் கேட்கு மாறு பணித்தார். வியாசமுனிவரோ அகத்தியமுனிவ ரிடம் கேட்குமாறு கூறினுர். பின்னர் முனிவர்களெல் லாரும் அகத்தியரை வணங்கி 'மூவகைச் சிறப்பையும் ஒருங்கே பெற்றுள்ள ஒரு தலத்தினை அடியேங்களுக்கு விளக்கியருளுங்கள்' என்று வேண்டினர்.

அதனைக்கேட்ட அகத்தியர் முத்திமண்டபத்தை அடைந்தார். ஆங்குள்ள, நான்கு கோழிகள், விநாயகர்,

முருகர், தட்சிணாமூர்த்தி ஆகிய இவர்களை வணங்கி, தம் மனத்திடை ஆலவாய்ப்பெருமானையும் அங்கயற் கண்ணியையும் எண்ணுவராயினர்.

பின் அகத்தியர் மனத்தெளிவடைந்து 'முனிவர் களே! இறைவன் இறைவிக்கு அருள்செய்த சங்கரசங் கிதையை முருகப்பெருமான் அடியேனுக்கு அருளிச் செய்துள்ளார். அந்தச் சங்கிதையில் நீங்கள் விரும்பிய வாறு மூவகைச் சிறப்பும் உடைய ஒரு தலம் கூறப் பட்டுள்ளது. அத்தலம் கேட்டார்க்கு முத்தியளிக்கும் தலம். அன்றியும் அரனார் அறுபத்துநான்கு ஆடல் நிகழ்த்திய திருத்தலம். அத்தகைய தலத்தின் பெயர் திருவாலவாய் என்பதாகும். அத்தலத்தின் மூவகைச் சிறப்பையும், அறுபத்துநான்கு திருவிளையாடல்களை யும் முருகப்பெருமான் நமக்கு அருளியவாறு நாமும் இப்பொழுது உங்கட்குச் சொல்லுகின்றோம்' என்று கூறுவாரானார்.

# தலச்சிறப்பு

---

அகத்தியர் சிவவழிபாட்டில் சிறப்புற்று விளங்கும் முனிவர்களை நோக்கிக் கூறுவாரானர். முனிவர்களே! நீங்கள் என்பால் விரும்பிக்கேட்ட மூவகைச் சிறப்பும் உடைய தலம் திருவாலவாயேயாகும். திருவாலவாயில் பொற்றாமரை என்னும் பெயரினை உடைய தடாகம் ஒன்று உளது. அவ்விடத்தே ஞானவடிவாய்த் தானே தோன்றிய சிவலிங்கம் ஒன்று உண்டு. "முளைத்தானை எல்லார்க்கும் முன்னே தோன்றி" என்ற தேவார அடி இங்கு நினைவுகூர்தற்கு உரியது. ஆகவே இப்பதிக்கு ஒப்பாகிய பதியும், இத்தீர்த்தத்திற்கு ஒப்பாகிய தீர்த்தமும், இம்மூர்த்திக்கு ஒப்பாகிய மூர்த்தியும் வேறு யாண்டும் காண்டலரிது. இம்மூவுலகங்களும் ஒருசேர உணர்ந்த உண்மை. அவ்வுண்மை மூன்றனுள் முன்னர் அத்தலத்தின் சிறப்பை உங்களுக்குக் கூறுகின்றேன் கேளுங்கள் என்று கூறலானர்.

எவ்வுலகங்களுள்ளும் புண்ணிய தலங்களே மிக்க சிறப்பினை உடையன. அவைகளுள்ளும் சிவதலங்கள் அளவிடமுடியாத சிறப்பினையுடையன. அத்தலங்களுள்ளும் அறுபத்தெட்டு சிவதலங்கள் மிகுந்த சிறப்பினைப் பெற்று விளங்குவன. அவைகளுள் பதினாறு சிவதலங்கள் பெருஞ்சிறப்பு உடையன. அப்பெருஞ் சிறப்பினைப்பெற்ற பதினாறு தலங்களுள்ளும் நான்கு சிவதலங்கள் மிகுந்த ஏற்றத்தினைப் பெற்று விளங்குவன. அந்நான்காவன சிதம்பரம், காசி, திருக்காளத்தி, திருவாலவாய் என்பனவாம். அந்த நான்கனுள்ளும்

சிதம்பரம் தரிசித்தவர்களுக்கும், காசி இறந்தவர்களுக்கும், திருக்காளத்தி வழிபாடு செய்தவர்களுக்கும் இன்பத்தையும் வீடுபேற்றினையும் அளிக்கும். ஆனால் திருவாலவாயோ கேட்டவர்களுக்கே இன்பத்தையும் வீடுபேற்றையும் கொடுக்கும். ஆகையால் இந்நான்கனுள்ளும் திருவாலவாயே ஏற்றமுடைய தலம் என்பது சொல்லாமலே விளங்கும்.

திருவாலவாய் என்று பிறர் சொல்லக் கேட்டவர்கள் எல்லா அறங்களையும் அடைவார்கள். திருவாலவாய் என்று மனத்தில் எண்ணியவர்கள் இம்மைக்கு வேண்டிய பொருளினை அடைவார்கள். சோமசுந்தரக் கடவுள் உறையும் திருவாலவாயை அடைந்து வழிபட்டவர்கள் இன்பங்களை அடைவர். திருவாலவாயில் எந்நாளும் இனிது உறைபவர் முத்தியின்பத்தைப் பெறுவர். இவைகள் உண்மையானவை.

காசி முதலிய சிவதலங்கள் நமது ஆன்ம முடிவு காலத்தில்தான் முத்தியை அருளும். ஆலவாய்ப்பதி தன்பால் உறைவோர்க்கு இம்மையிலே ஆன்மலாபப் பேற்றையும், பின்னர் பரமுத்தியையும் கொடுக்கும். அதனால் இதனைத் தனக்குத்தானே ஒப்பாகிய சீவன் முத்திபுரம் என்று கூறுவர். ஆகவே இத்திருத்தலத்தை விட்டு வேறு தலங்களில் தவஞ்செய்ய எண்ணுவோர் கையில் கிடைத்த கனியை நழுவவிட்டு, கிட்டாத கனிக்கு எண்ணங்கொள்பவர் ஆவர். அன்றியும் ஏனைய தலங்களில் அசுவமேதம், வாசபேயம், சோடசீ, அக்கினிட்டோமம், இராசசூயம் முதலிய வேள்விகளைச் செய்த பேறும், தரிசபூரணம் என்னும் சிவனுக்குப் பிரியமான கிரியையைச் செய்த பேறும், எள், நெய்,

அன்னம், கன்னிகை, குதிரை, தேர், யானை, வீடு, வெள்ளி, பசு, பொன், ஆபரணம், ஆடை, நிலம், அடிமை ஆகிய தானங்களைச் செய்த பேறும், காசி முதலிய தலங்களிலே தங்கியிருத்தலால் அடைகின்ற பேறும், கங்கை, காளிந்தி, சரசுவதி, காவிரி, கிருஷ்ணை, துங்கபத்திரை, பாலி முதலிய நதிகளில் நீராடியபேறும், திருவாலவாயிலே இடைவிடாது தங்கியவர்களுக்கு எளிதில் கிடைக்கும். அன்றியும் ஏனைய தலங்களில் செய்யப்பட்ட கொலை, களவு, கள்ளுண்டல், பிறர்மனை நயத்தல் முதலாய பாதகங்களெல்லாம் ஆலவாயில் உறைபவரிடை இல்லாது நீங்கும்.

ஏனைய தலங்களில் திங்கள்தோறும் சாந்திராயண விரதம் மேற்கொண்டு இருந்து அடைகின்ற பயனை திருவாலவாயில் இராக்காலங்களில் உணவுண்டலால் அடையலாம். ஏனைய தலங்களில் ஒரு திங்கள் உணவு இன்றி இருக்கும் நோன்பின்பயனை இத்தலத்தில் ஒரு நாள் உணவின்றி இருத்தலால் பெறலாம். மேலும், நான்கு திங்கள் உணவின்றி இருந்து அடையும் பயனை இத்தலத்தில் அட்டமிவிரதம் இருத்தலால் அடையலாகும். அன்றியும் பிற தலங்களில் ஆறு திங்கள் உணவின்றி இருந்து அடையும் பயனை இந்தத் தலத்திலே சோமவார விரதத்தினை மேற்கொள்வதால் அடையலாகும். மற்றைய தலங்களில் ஓராண்டு உணவின்றியிருந்து பெறும் பயனை, இத்தலத்தை அடைந்து சிவராத்திரி விரதத்தை மேற்கொள்வதால் அடையலாம். ஐம்பொறிகளை வென்ற சிவஞானி திருவாலவாயிலே முப்பொழுதும் உணவு உட்கொண்டு உறைந்தாலும், தவத்தினுல் அடையக்கூடிய பெரும்பயனைப் பெற்றே தீருவர். இது உண்மை.

எல்லாச் சிவதலங்களிலும் தங்கியபேறும், எல்லா நதிகளிலும் நீராடியபேறும், அல்லாமலும் தானங்கள், பூசைகள், தவங்கள், மந்திரங்கள், நூல்கள், யோக ஞானங்கள் ஆகிய அனைத்தும் இத்திருவாலவாயிடை உறைபவர்களுக்கு எளிதில் கிட்டும். ஆகையால் திரு வாலவாய்க்கு ஒத்ததாகிய தலம் வேறெங்கும் காண்ட லரிது. ஆதலால் முத்தியின்பமாய பேரின்பம் பெற விழைவோர் எந்நாளும் இடைவிடாது இத்தலத்தே தங்கி இன்புறுவர்.

பண்டு நான்முகன் திருக்கயிலை முதலாய தலங்களை ஒரு தட்டிடையும், இத்திருவாலவாயை மற்றைத் தட்டிடையும் ஆக இட்டுத் தூக்கியபோது, திருவால வாயே மிக்க கனத்தினை உடையதாக இருந்தது. அக் காரணம்பற்றி மூன்று உலகங்களினும் மேலான தலம் இதுவே என உறுதிப்படுத்தினர். இத்தலம் சிவநகரம், கடம்பவனம், சீவன்முத்திபுரம், கன்னியாபுரம், திரு வாலவாய், மதுரை, பூலோக சிவலோகம், சமட்டி வித்தியாபுரம், நான்மாடக்கூடல், துவாதசாந்தத்தலம் என்னும் பத்துத் திருப்பெயரினைப்பெற்று விளங்கும்.

## தீர்த்தச் சிறப்பு

இத்தலத்திலுள்ள பொற்றுமரை என்னுந்தீர்த்தம் எல்லாம்வல்ல இறைவன் கங்கை, காவிரி முதலாய நதிகளும், ஏழு கடல்களும், மேகங்களும் தோன்றுவதற்கு முன்பாகவே தம்முடைய திருமுழுக்கிற்காகத் தோற்றுவித்த பெருமையினை உடையதாகும். அதன் பெருமையை எடுத்துச் சொல்கிறேன் முனிவர்களே! கேளுங்கள் என்று அகத்தியர் சொல்லுகின்றுர்.

சோமசுந்தரப்பெருமான் பண்டைக் காலத்திலே ஒரு திருவிளையாடலை மனத்திடைக் கொள்வாரானுர். அருளே வடிவாகிய அம்மையோடு அறமே வடிவமாகிய இடபத்தின் மேற்கொண்டு, தமக்கு முன்னும் பின்னும் இரு பக்கங்களினும் நந்திதேவர் முதலாய தேவகணங்கள் சூழ்ந்துவர, எல்லா உலகங்களிடையும் சென்று விளையாடி ஆங்காங்கு உள்ளவர்கள் தம்மை வழிபட, அவர்கட்கெல்லாம் அருள்பாலித்து, முடிவில் திருவாலவாயை அடைந்து இனிது இருந்து தமது கணநாதர்மேல் கருணை காட்டுவாராயினுர்.

இறைவனது முழுக்கருணையையும் பெற்ற நந்திதேவர் முதலாய கணநாதர்கள் இறைவனை வணங்கித் துதித்துக் கூறலானுர்கள். கருணைக்கடலே! இங்குள்ள மூர்த்திக்குத் திருமுழுக்குச் செய்யவும், அடியேங்கள் எல்லாரும் நீராடவும் நதிகள் ஒன்றும் காணக்கூடவில்லை ஆதலால், அடியேங்களிடம் பெருங்கருணை கொண்டு இவ்விடத்திலேயே ஒரு தீர்த்தம் உண்டாக அருள்செய்யவேண்டும் என்று வேண்டலானுர்கள்.

உடனே வேண்டுவார் வேண்டுவனவெல்லாம் அருளும் சிவபிரான் சிவலிங்கமூர்த்திக்குத் தென்கிழ்த் திசையில் தமது சூலத்தை நாட்ட, சூலம் பூமியையும் பாதாள உலகத்தையும் கிழித்துக்கொண்டு மேலே எழுந்தது. அந்த இடத்தில் கடல்போல் நீர் பொங்கி எழுந்தது. இறைவன் அதனைத் தமது திருக்கரத்தால் அமைதிபெறச்செய்தார். பின்னர் தனது சடைமுடியி லுள்ள கங்கைநீரைத் தெளித்துப் புண்ணியதீர்த்தமாக ஆக்கினுர். கணநாதர்களை நோக்கி, 'இந்தத் தீர்த்தம் மற்றைய எல்லாத் தீர்த்தங்களைக் காட்டிலும், முன்ன மாகவே நம்மால் உண்டாக்கப்பட்டதால் பெருஞ் சிறப்பு உடையதாகும். அன்றியும் இத்தீர்த்தமானது தன்னிடை முழுகுபவர்க்கு மங்கலத்தையும், ஞானத் தையும், முத்தியையும் கொடுக்கும். அன்றியும் இதில் முழுகி, ஐந்தெழுத்தினை உச்சரிப்போர் பிறவிப்பயன் அனைத்தையும் பெறுவர்' எனக்கூறி, இறைவன் அத் தீர்த்தத்துள் முழுகிச் சிவலிங்கத்துள் மறைவாரானுர். கணநாதர்களும் இறைவன் ஆணைப்படி அத்தீர்த்தத் துள் ஆடி அதனைக்கொண்டு இறைவனையும் ஆட்டி வழிபட்டு வருவாராயினுர்கள்.

அந்தப் பொற்றாமரைத் தீர்த்தத்தைக் கண்ணுல் காண்போர் பாவநீக்கம் பெறுவர். அத்தீர்த்தமாடின் எல்லா நலங்களையும் எளிதில் பெறுவர். நெருப்பை நெருப்பென எண்ணுது தொட்டாலும் அது சுட்டே தீரும். அதுபோல இப்பொற்றாமரைத் தீர்த்தத்தை நினைவின்றித் தீண்டியோர் மலநீக்கம்பெற்று முத்திப் பேற்றை அடைவர். இதில் முறையாக ஆடினோர் சீவன்முத்தியை எளிதிற்பெறுவர். எண்வகை ஆட லின் பேறு இதனிடை ஆடுவதாலே கிடைத்தலாகும்.

அன்றியும் பரமுத்தி, சுவர்க்கம் ஆகியன இதனிடை முழுகுவதாலேயே கிடைக்கப் பெறலாம். விரதம், பூசை, தானம், ஒமம், தவம், செபம், தியானம் ஆகிய இவைகளைப் பொற்ருமரைக் கரையிலிருந்து ஒருவன் செய்யின், மற்றைய தலங்களிலிருந்து செய்த பயனைக்காட்டிலும் பன்மடங்கு அதிகமான பயனைக் கொடுக்கும்.

அன்றியும் இப்பொற்ருமரையில் ஒருவன் பிறந்த நாளன்று நீராடினுல், தன்னுடைய பிறவித் துன்பத்தைப் போக்கிக்கொள்ளலாம். சித்திரை, கார்த்திகை, மாசி ஆகிய திங்களில் இதில் நீராடி, பிதுர்க்காரியம் செய்வோர் பிறவித்துன்பம் நீங்கப்பெற்று முத்திப் பேற்றைப்பெறுவர். மூவுலகங்களிலுள்ள தீர்த்தங்கள் யாவும் நாடோறும் இத்தீர்த்தத்தில் வந்து படிவதால், இதனிடை எந்நாளும் நீராடிச் சிவபூசை செய்வோர் இப்பிறவியிலேயே முத்தியினை எளிதில் அடைவர்.

இறைவனுடைய எட்டு வடிவங்களுள் சலம் என்னும் வடிவமாகிய இப்பொற்ருமரையிலே, அமாவாசை, மாசப்பிறப்பு, கிரகணபுண்ணிய காலம், விதிபாதயோகம் ஆகிய இவைகளில் முறைப்படி நீராடித் தருப்பணம் முதலியன செய்வோர், அளவுக்கு அதிகமாக நற்பயனைத் தாங்கள் எண்ணியதற்குமேல் பல ஆயிரம் மடங்கு அடையப்பெறுவர். அல்லாமலும் சித்திரை ஐப்பசி மாதப்பிறப்பு, தை ஆடி மாதப் பிறப்பு ஆகிய நாட்களில் நீராடுவதால் பெரும் புண்ணியம் கிடைக்கப்பெறும். சோமவாரமும் அமாவாசையும் கூடிய புண்ணியகாலத்தில் நீராடுவதால் நாம் அடையும் பயன் அளவிடற்கரியது. ஓராண்டு காலம்

முறையாக நீராடி இறைவனையும் இறைவியையும் வழிபட்டுவரின் புத்திரப்பெற்றினை அடையப்பெறுவர். மேலும் இத்தீர்த்தத்தைப் பார்த்தலால் அறத்தையும், தொடுவதால் பொருளையும், உட்கொள்ளுவதனுல் இன்பத்தினையும், முழுகுவதால் முத்திப் பேற்றையும் அடையப்பெறுவர்.

இத்தீர்த்தத்துக்குச் சிவகங்கை, உத்தம தீர்த்தம், பொற்ருமரைவாவி, தருமதீர்த்தம் ஆகிய வேறு பெயர்களும் உண்டு.

## மூர்த்திச்சிறப்பு

முனிவர்களே! இம்மூர்த்தி மகாமேருமலை, திருக் கயிலாயமலை, மந்தரமலை, திருக்கேதாரம், காசி ஆகிய தலங்களில் சிவலிங்கங்கள் தோன்றுவதற்கு முன்னரே தானே தோன்றியருளிய தனிச் சிறப்பினைப் பெற்றவர். இவர் கடம்பமரத்தடியிலே தோன்றியதால் கடம்ப வனச் சொக்கர் என்னும் பெயரினைப் பெற்றவர். இதற்கு மூலலிங்கம் என்ற வேறு பெயரும் உண்டு. எல்லா இலக்கணங்களும் அமையப்பெற்ற இவ்விறை வனைத் தேவர்களனைவரும் சோமசுந்தரக்கடவுளென்று திருப்பெயர் இட்டு வழிபட்டு வரலானார்கள். இவர் எல்லா உலகங்களிலும் கலந்து நிற்கின்ற காரணத்தால் இவர் முதுகிலே பாண்டியன் கையால் பிரம்புபட்ட அடித் தழும்பு மூவுலகங்களினும் பட்டது. இத்தலத் திலுள்ள சிவலிங்கம் சமட்டிவடிவாக அமைந்தது. இதனைத் தரிசித்தோர் ஏனைய தலங்களிலுள்ள வியட்டி வடிவாகிய பல சிவலிங்கங்களைத் தரிசித்த பேற்றினைப் பெற்றவராவார்.

மக்களிடத்துள்ள அளவற்ற பெருங்கருணையாலே அறுபத்துநான்கு திருவிளையாடல்களைச் செய்தருளிய இவருக்கு இணை எவ்வுலகத்தினும் இல்லை. மலைக ளுள்ளே மேருவும், மரங்களுள்ளே தேவதாருவும், யாகங்களுள்ளே அசுவமேதமும், விரதங்களுள்ளே சோமவாரமும், மந்திரங்களுள்ளே பஞ்சாட்சரமும், இரத்தினங்களுள்ளே சிந்தாமணியும், தருமங்களுள்ளே சிவதருமமும், தீர்த்தங்களுள்ளே பொற்றாமரையும், மூர்த்திகளுள்ளே சோமசுந்தர மூர்த்தியும் மேலானது.

ஆதி நடு அந்தம் இன்றி எங்கும் பூரணமாக நிறைந்து ஆன்மாக்களுக்குப் பரமுத்தியைக் கொடுத்தருளுபவ ராகிற இம்மூர்த்தியே எல்லாமூர்த்தியினும் மேலான மூர்த்தியாகும்.

இவ்விறைவனை வழிபட்டோருடைய பாவங்கள் அனைத்தும், நெருப்பிடையிட்ட பஞ்சுத்துய்போலும், கோபத்திடையிட்ட தவம் போலும், மருந்திடைத் தீரும் நோய்போலும், சூரியன் தோன்ற இருள் ஒட் டெடுப்பது போலும், சிவஞானத்தினுல் அவித்தை அழிவதுபோலும் தாமாகவே அழிந்துவிடும்.

சோமசுந்தரக்கடவுளைப் பிராதக்காலத்தில் சென்று வழிபட்டோர் பூமியைத் தானம்செய்த பெரும்பயன் பெறுவர். உச்சிகாலத்திலே வழிபட்டோர் கோதானம் செய்த பயனைப் பெறுவர். சாயங்காலத்திலே வழிபாடு செய்தோர் எண்ணற்ற கோதானம் செய்த பயனைப் பெறுவர். அர்த்தயாமத்திலே வழிபட்டோர் அசுவ மேத வேள்விவேட்ட பெரும்பயன் பெறுவர். மேலே கூறிய இவ்வுண்மையை நன்குணர்ந்து முறைப்படி நான்கு காலமும் சென்று வலம்வந்து வழிபடும் மெய் யடியார்கள், பழவினை நீங்கிப் பரிசுத்தராகிக் கல்விப் பொருளையும், செல்வப்பொருளையும் பெற்று முடிவில் இறைவன் திருவடி நீழலில் இனிது வாழ்வர். இவ் விறைவனின் திருப்பெயரைக் கேட்டல், நினைத்தல், வணங்குதற்கு எழுதல் ஆகிய இவைகளால் அடையப் பெறும் நன்மைகள் அளவிடற்கு அரியன.

இவ்விறைவனை வழிபட்டோர் ஆயிரம் அசுவமேத வேள்விகளை வேட்ட பயனைப் பெறுவர். உருத்திர

சூக்தத்தினுலே வழிபட்டவர் ஆயிரம் இராசசூயயாகம் செய்த புண்ணியத்தினை அடைவர். மற்றைத் தலங்களில் சோடச உபசாரஞ்செய்து அடையப் பெறும் சிறப்பை இத்தலத்துள் உள்ளங்கையளவு தீர்த்தத்தால் அபிடேகம் செய்தோர் அடைவர். பஞ்சாமிர்தம் பஞ்சகவ்வியம், தேன், முப்பழம், சந்தனம் ஆகிய இவைகளால் ஆட்டி முறைப்படி வழிபட்டோர் பாவ நீக்கம் பெற்று, நால்வகைப் பயன்களையும் அடையப் பெறுவர். இவைகள் யாவும் முறைப்படி வழிபாடு செய்வோர் அடையும் பயன்களேயாம்.

ஏனைய தலங்களில் நூறு மலர்கொண்டு அருச்சனை செய்து அடைகின்ற பயனை, திருவாலவாயில் சோம சுந்தரக்கடவுளது திருமுடியில் ஒரு மலர் சாத்தி வழிபடுவதால் அடையலாகும். மனம், வாக்கு, காயம் ஆகிய இவற்றுல் செய்த பாவங்களனைத்தும் ஒருதரம் தூபம் கொடுத்தலால் நீங்கும். திருவமுது ஊட்டினேர் அடையும் பயனே அளவிடற்கரியது. தாம்பூலம் முதலியன கொடுத்தோர் அளவற்ற காலம் சிவலோகத்தே வாழ்வர். ஒருமுறை கருப்பூரதீபம் இட்டோர் சிவசாருப பதத்தைப் பெறுவர்.

திருமஞ்சனக் குடம், அபிடேக கலசம், தூபக்கால், தீபக்கால், மணி ஆகிய இவைகளைக் கொடுத்தோர் தாம் தாம் செய்த பாவங்களெல்லாம் நீங்கப் பெற்று, விரும்பிய பயன்களனைத்தையும் அடையப் பெற்று வாழ்வர். இவ்விறைவன் சந்நிதியிலே பல வகை வாத்தியங்களை ஒலிக்கச் செய்தவர்கள் உலகினை ஆளும் அரசர்களாய்ப் பிறந்து சிறப்புற வாழ்வார்கள். அன்றியும், அட்டாங்கமாகவோ பஞ்சாங்கமாகவோ

வழிபட்டவர் அரசபதவியில் தனிச்சிறப்புற்று வாழ்வர். இத்தகைய அரிய பெரிய சிறப்புடைய இவ்விறைவனுடைய சந்நிதியில் செய்யும் ஓமம், தவம், செபம், தானம் முதலாயின அளவால் சிறியனவாயினும் மேரு மலையைக் காட்டிலும் பெரியனவாம். உத்தமமாகிய இச்சிவலிங்கத்தின் பெருமையினை யாரே அளவிட்டு உரைக்கவல்லார்!

இத்திருவாலவாய்க்கு ஒத்த தலமும், பொற்றாமரை வாவிக்கு ஒப்பாகிய தடாகமும், இம்மூர்த்திக்கு ஒத்ததாகிய சிவலிங்கமும் எவ்வுலகங்களிலும் தேடினும் கிடைக்கப் பெறாத ஒன்றாம். இவ்விறைவற்குக் கருப்பூரசுந்தரர் முதலாய பல திருப்பெயர்கள் உண்டு. இதுகாறும் அச்சிவலிங்கத்தின் தனிப்பெருமையினைச் சொன்னோம். இனி, இறைவனின் அறுபத்துநான்கு திருவிளையாடல்களையும் அறிந்தவாறு சொல்லுவோம். அதனையும் கேளுங்கள்.

# 1. இந்திரன்பழி தீர்த்த படலம்

---

முற்காலத்தில் தேவேந்திரன், சுவர்க்கலோகத்தில், சுதர்மை என்னும் தேவசபையில் தேவர்களெல்லாம் வந்து சேவிப்ப இரத்தின சிங்காதனத்தில் இனிதாக விற்றிருந்தான். அவ்வமயம் தேவமாதர்களெல்லாரும் வழக்கம்போல் ஆடல் பாடல் நிகழ்த்தினர். தேவேந்திரனும் அவைகளைக் கண்டும் கேட்டும் பெருமகிழ்ச்சி எய்தினன். இந்நிலையில் வியாழபகவான் சபைநோக்கி வந்தார். பெண்களின் மையலுக்காட்பட்ட இந்திரன் கண்டும் காணாததுபோல் வாழிபாடுசெய்து வரவேற்காது வாளாவிருந்தான். வியாழபகவானே அவமானத்துக்கு ஆற்றாது வெளியேறிவிட்டார்.

வியாழபகவானது இச்செயலால் தேவேந்திரனது செல்வம் சிறிது சிறிதாகக் குறையத் தொடங்கிற்று. இந்திரன் செல்வம் குறைதலை அறிந்து, எனக்கு இத்தகைய கேடு குருவை வழிபடாமையால் ஏற்பட்டது என்று தெரிந்தான். துன்பமுற்றான். குருவைத் தேடலானான். தேடி யாண்டும் காணப்பெறாமல் மனம் மிகமாழ்கினான். பின்னர் ஒருவாறு தெளிந்து சத்திய லோகத்தை அடைந்து பிரமதேவனிடம் தன்னுடைய குறைகளை எடுத்துக் கூறினான்.

பிரமதேவர் குருநிந்தனையால் இந்திரனுக்கு ஏற்பட்ட இன்னலையறிந்து, இந்திரனுக்குப் பின்வருமாறு உறுதிகூறலானார். இந்திரனே! உன் குருவாகிய வியாழபகவானைக் காணுமளவும், அசுரகுலத்திற்பிறந்து அறிவு ஒழுக்கங்களில் மேம்பட்டு விளங்கும் துவட்டாவின்

மகனாகிய மூன்று தலைகளையுடைய விசுவரூபனை நீ குருவாக ஏற்றுக்கொள் என்று கூறினார். இந்திரனோ பிரமதேவனுடைய சூழ்ச்சியை அறியாமல், அதற்கு உடன்பட்டு, பிரமதேவனை வணங்கி விடைபெற்றுக் கொண்டு போய் விசுவரூபனைத் தன்குருவாக ஏற்றுக் கொண்டான்.

தேவேந்திரன் விசுவரூபனைத் தன்பொருட்டு ஒரு வேள்வி வேட்குமாறு வேண்டினான். விசுவரூபனும் உள்ளொன்று புறமொன்றாக எண்ணி வேள்வியினை வேட்டான். விசுவரூபனுடைய உள்ளுணர்வு அசுரர் களெல்லாம் உய்யவேண்டுமென்ற ஒரேகுறிக்கோளில் இருந்தது. விசுவரூபனின் வஞ்சகச்செயலை இந்திரன் தனது ஞான உணர்வினால் அறிந்தான். அறிந்தவுடன் தன்னுடைய குலிசத்தால் அந்த விசுவரூபனின் மூன்று தலைகளையும் வெட்டினான். அசுரனுடைய மூன்று தலை களும் முறையே காடையும், ஊர்க்குருவியும், சிச்சிலியு மாகப் பறந்தன. உடனே இந்திரனைக் கொலைப்பாவம் பற்றியது. அதனைக்கண்ட தேவர்கள் அப்பாவத்தை மரம், மண், பெண்கள், நீர் ஆகிய இவற்றிடைப் புகுத்தினார்கள்.

புகுத்தியபின்னர் அப்பாவமானது நீரிடை நுரை யாயும், மண்ணிடை உவராயும், பெண்ணிடைப் பூப் பாயும், மரத்திடைப் பிசினாயும் கழிந்துபோகும் என் றார்கள். இதனால் நாங்கள் அடையும் பயன்கள் யாவை என்று கேட்கலானார்கள். தேவர்கள், கருவுற்ற பெண் கள் கருவுயிர்க்கும்வரை கணவரோடு கூடி வாழ்வர்; மண்ணிடைத் தோண்டிய குழியின் வடு மண்ணாலே மாறும்; நீர் இறைக்குந்தோறும் ஊறும் இயல்பினைப்

பெறும்; மரத்தை வெட்டினுலும் தழைக்குந்தன்மை யைப் பெறும் என்று அடையப்பெறும் நன்மையை விளக்கிக் கூறினுர்கள். இந்திரனும் தன் பிரமபாவம் நீங்கப்பெற்றுச் சிறப்பினை அடைந்தான்.

விசுவரூபன் இந்திரனுல் கொல்லப்பட்டதை அவ னுடைய தந்தையாகிய துவட்டா அறிந்தான். உடனே துவட்டா கடுங்கோபங்கொண்டு வேள்விவேட்டான். அவ்வேள்வியில் விருத்திராசுரன் என்பவன் தோன்றி னுன். துவட்டா சொற்படி விருத்திராசுரன் சென்று இந்திரனேடு போரிட்டான். இந்திரன் விருத்திராசுர னேடு போர்செய்ய ஆற்ருது சத்தியலோகம் அடைந்து பிரமனை வழிபட்டுத் தன் துன்பத்தைக் கூறினுன்.

பிரமதேவரும் இந்திரனேடு வைகுண்டத்தை அடைந்து திருமாலிடம் விண்ணப்பம் செய்தனர். திருமால் இந்திரனை நோக்கி, இந்திரனே! உன்கையில் உள்ள குலிசம் பழமையாகிவிட்டது; அதனுல் வேறு புதிய குலிசத்தை நீ பெறவேண்டும்; அதனை அடையும் வழியினை நாம் சொல்லுகின்ருேம்; திருப்பாற்கடல் கடையும்பொழுது தேவர்களும் அசுரர்களும் தங்கள் தங்கள் ஆயுதங்களை, ததீசிமுனிவரிடம் ஒப்படைத்துச் சென்ருர்கள்: பின்னை எவரும் அத்ததீசிமுனிவரிடம் அவ்வாயுதங்களைக் கேட்டுப்பெறவில்லை; அதனுல் அம் முனிவர் அவ்வாயுதங்களையெல்லாம் விழுங்கிவிட்டார்; அவைகளெல்லாம் அம்முனிவரது முதுகந்தண்டைப் பொருந்தியுள்ளன; அது குலிசாயுதமாகும்; நீ அந்த முனிவரை அடைந்து அவ்வாயுதத்தைக் கேட்டால் அறமே வடிவான அம்முனிவர் அவற்றை உனக்குக் கொடுத்தருளுவார் என்று கூறினுர்.

இந்திரன் திருமாலை வணங்கி விடைபெற்றுத் தேவர்களோடு ததீசிமுனிவரை அடைந்தான். அவரை முறைப்படி வழிபட்டான். உடன் முனிவர் தேவர்களது மெலிவிற்குக் காரணம் என்ன என்று இந்திரனை வினவினார். இந்திரன் முனிவர் பெருமானே! உம்பால் நீர் மறுத்துச் சொல்லாத ஒரு பொருளை விரும்பி வந்துள்ளோம்; அப்பொருள் பகைவர்களை அழித்து ஒழிக்கும் ஆற்றலுடையது; அப்பொருளும் உமது உடலிடை உள்ளது என்று கூறினான்.

இந்திரனது சொற்களைக் கேட்ட ததீசிமுனிவர் முகமலர்ச்சியுற்றவராய், யாக்கையின் நிலையாமையை எடுத்தியம்புவாரானார். 'மக்களது யாக்கையை நாய்கள் நம்முடையது என்று கூறும்; நரிகள், தாய் தந்தையர்கள், இயமன், பிணிகள், பேய்கள் ஆகிய இவைகள் யாவும் தம்முடையது என்று சாற்றும்; அதுபோல் நாமும் இதனை நம்முடையது என்று கூறுகின்றோம்; ஆதலின் ஒன்றுக்கும் பற்றாத இவ்வுடலால் உங்கட்குப் பயன் ஏற்படுமாயின் அதுவே நான் அடையும் பேறு' என்று கூறிச் சமாதிகூடி உயிரைச் சுவர்க்கத்திடைப் புகுத்தினார்.

பின்னர் தேவதச்சன் ததீசிமுனிவரின் முதுகந்தண்டைக் குலிசமாகச் செய்துகொடுத்தான். இந்திரனும் அந்தப் புதிய ஆயுதத்துடன் அசுரர்களை எதிர்த்துக் கொன்றழித்தான். அசுரர்கள் பலரும் அழிவதைக் கண்ட விருத்திராசுரன் இந்திரனை எதிர்த்துப்போரிட்டு, போரிடை ஆற்றாது கடலிடைப் புகுந்து ஒளிந்தான். இந்திரன் எங்கும் தேடியும் காணாமல் மீட்டும் பிரமதேவரை அடைந்து வழிபட்டான்.

பிரமதேவர் மீட்டும் இந்திரனை அகத்தியரிடம் செல்லுமாறு ஆணையிட்டார். உடனே இந்திரனும் அகத்தியரை அடைந்து முறைப்படி வணங்கினான். இந்திரன் குறையை அறிந்த அகத்தியர் எல்லாம்வல்ல இறைவனை மனத்துட்கொண்டு கடல்நீரினையெல்லாம் உழுந்தளவினதாக்கி உட்கொண்டுவிட்டார். அறநெறியில் ஈட்டாதார் செல்வம் சுருங்குவதுபோலக் கடல் நீரும் வற்றியது. கடலிடையில் உள்ள ஒரு குன்றில் அவ்விருத்திராசுரன் தவம் செய்துகொண்டிருந்தான். அசுரனைக் கண்ட இந்திரன் அசுரனின் தலையினைக் கொய்துவிட்டான். கொய்தவுடன் மீட்டும் இந்திரனைக் கொலைப்பாவம் பற்றியது. அப்பாவம் உம்மென்னும்; வாயை மடிக்கும்; பற்களைக் கடிக்கும்; இதுபோன்ற பல தீமைகளைச் செய்யும். தீமைக்காற்றாத இந்திரன் குளத்திடை வீழ்ந்து தாமரைத்தண்டினுள் ஒளிந்து கொண்டான். அக்காரணத்தால் தேவலோகமும் தன் பொலிவினை இழந்தது.

தேவலோகம் அரசினை இல்லாது அவதியுற்றது. இத்தீமையையுணர்ந்த தேவர்கள் பூவுலகில் அசுவமேத வேள்வி வேட்ட நகுடன் என்பவனைக் கொணர்ந்து தங்கட்கு அரசனாக்கிக் கொண்டார்கள். அரசனாகிய நகுடன், உடன் இந்திராணியை அழைத்துவருமாறு கட்டளையிட்டான். நகுடன் கட்டளையை அறிந்த இந்திராணி செய்வது அறியாது, குருவை நாடித் தன் துயரத்தை உரைப்பாளாயினாள். குருபகவானும் ஏழு முனிவர்கள் சிவிகைதாங்கிவர எவன் வருகின்றானோ அவனே இந்திரன்; அவனே உன்கணவன் என்று கூறினார். இந்திராணியும் ஒருதூதுவன்மூலம் நகுடனுக்கு அச்செய்தியைச் சொல்லியனுப்பினாள். நகுடனோ தன்

சிவிகை தாங்கிவருபவர்கள் முனிவர்கள் என்பதையும் மதியாது 'விரைந்து செல்லுங்கள்' என்று உத்தரவிட்டான். முன்சென்ற அகத்தியர் 'நகுடனே! நீ சர்ப்பமாகக்கடவை' என்று சாபங்கொடுத்தார். நகுடனும் சர்ப்பமாகிவிட்டான்.

நகுடன் சாபமேற்றுச் சென்றபின்னர் தேவர்கள் குருவை வணங்கி அரசனை அடையும் வழியை எளியோங்கட்கு அருளவேண்டும் என்று வேண்டினார்கள். குருபகவான் குளத்தினை அடைந்து, மறைந்துகொண்டிருந்த இந்திரனை அழைத்தார். இந்திரனும் வெளிப்பட்டு வந்து குருவை வணங்கினான். வணங்கிய இந்திரன் குருவை நோக்கி, என்னைப்பற்றிய பழி நீங்கும் வழி யாது? என்று வினவினான். குருபகவான் இப்பழி பூவுலகத்திடை சென்று வழிபட்டால்தான் நீங்கப்பெறும் என்று அருள்செய்தார்.

இந்திரன் தனது குதிரைமேலேறிப் பூவுலகை நோக்கிப் புறப்பட்டான். திருக்கயிலாய மலையை அடைந்து வழிபட்டான். பின் தெற்குநோக்கிச்சென்று திருக்கேதாரம், காசி, காஞ்சி முதலிய தலங்களை வழிபட்டும் தன்னைப்பற்றிய பழி நீங்காமையால் முடிவில் மதுரை அடைந்தான். எல்லையை அடைந்தவுடனே இந்திரனைப்பற்றியுள்ள பழியும் நீங்கியது. குருவானவர் இந்திரனே! இங்கு நம்மையாளுகின்ற பரமன் எழுந்தருளியுள்ள இடத்தினைக்கண்டு வழிபடுவாயாக என்று கூறினார். இந்திரனும் கடம்பவனமெல்லாம் அலைந்து திரிந்து பொற்றாமரை வாவியின் கரையில் வதியும் இறைவனைத் தன் ஆயிரம் கண்களும் களிப்பக்கண்டு வழிபாடு செய்வானாயினான்.

பின் தேவேந்திரன் விருப்பப்படி எட்டு யானைகள் தாங்கிய இந்திரவிமானம் விண்ணினின்றிழிந்தது. அந்த விமானத்தை இறைவனுக்குச்சாத்தி வழிபாடுசெய்வானுயினுன். இறைவனின் பெருங்கருணையை மனத்திலெண்ணிப் பலவாறு தோத்திரிப்பானுயினுன்.

பாட்டுக்கிரங்கும் தமிழ்ச்சொக்கநாதர் உடனே இலிங்க உருவினின்றும் வெளிப்பட்டு இந்திரனுக்குக் காட்சி கொடுத்தார். இந்திரனும் இறைவனிடத்தில் வேண்டிய வரங்களைப் பெற்று, ஒவ்வொரு ஆண்டும் சித்திரைத்திங்கள் சித்திரைநாளில் வந்து வழிபடுவதாகவுங்கூறி விடைபெற்று விண்ணுலகு அடைந்தான். தேவர்கள்போற்ற சோமசுந்தரப் பெருமானின் இணையடி மறவாமல் அன்று தொடங்கி, தேவலோகத்தை ஆட்சிசெய்துகொண்டு வருகின்றுன்.

## 2. வெள்ளையானைசாபந்தீர்த்த படலம்

---

முனிவர்களுக்குள் சிறந்தவர் துருவாசர். அவர் காசியம்பதியில் தனது பெயரால் ஒரு சிவலிங்கத்தை உண்டாக்கி முறைப்படி சிவவழிபாடு ஆற்றிவந்தார். ஒருநாள் அவர் பூசைசெய்த தாமரை மலர் ஒன்று இறைவன் திருமுடியினின்று நழுவி விழுந்தது. அதனை எடுத்துக்கொண்டு மிக்க மகிழ்ச்சியோடு சுவர்க்க லோகத்தை அடைந்தார். அப்போது இந்திரன் அசுரர்களை வென்று வெற்றிமாலையுடன் வெள்ளையானை மீதேறி வந்துகொண்டிருந்தான். தேவர்களெல்லாம் சிறந்த பொருள்களை இந்திரனுக்குப் பரிசாக அளித்தார்கள். அது கண்ட துருவாச முனிவரும் இந்திரனுக்கு ஆசி சொல்லி, தன்கையில் இருந்த தாமரைப் பூவை நீட்டினர். செல்வச் செருக்குற்ற இந்திரன், அப்பூவை ஒருகையால் வாங்கி யானையின் தலையில் வைத்தான். யானையோ அப்பூவைக் கீழேதள்ளி தன் கால்களால் மிதித்து அழித்தது.

இந்நிலையைக்கண்ட துருவாசமுனிவர் அடங்காக் கோபத்தினை அடைந்து, இறைவனுடைய திருமுடியின் மேல் சாத்திய இம்மலரை நீ மதியாமல் சிதைத்தமையால், உன்னுடைய தலை பாண்டியன் ஒருவன் வளையால் சிதறக்கடவது; இந்த யானையும் காட்டானையாகக்கடவது என்று சாபம் கொடுத்தார். இதனை அறிந்த தேவர்கள் நடுநடுங்கி துருவாச முனிவரை அணுகிச் சாபநீக்கம் செய்யுமாறு வேண்டினர்கள். தேவர்களே! இந்தச் செயலுக்குத் தீர்வு ஏற்படாது;

ஆயினும் தலைக்கு வந்தது தலைப்பாகையோடு நீங்கி விடும்; இந்த யானையும் நூறு ஆண்டு அலைந்து திரிந்து அதன்பின் பண்டைய நிலையினைப் பெறும் என்று அருள்செய்வாரானார்.

சாபமேற்ற வெள்ளையானை அறிவு இழந்து காட்டானையாகி அலைந்து திரிந்து முடிவில் கடம்பவனத்தை யடைந்தது. பொற்றாமரையைக் கண்டவுடன் பழைய அறிவு தோன்றலாயிற்று. உடனே பொற்றாமரையில் நீராடி இறைவனை முறைப்படி வழிபட்டது. இறைவனும் யானையின் அன்புக்கிரங்கி வெளிப்பட்டு அது வேண்டும் வரங்களை நல்கினார்.

இவ்வாறு இறைவனை வழிபட்டு வரம் பெற்ற அந்த வெள்ளையானை கோயிலுக்கு மேற்றிசையிலே தன் பெயரால் ஒரு தீர்த்தத்தை உண்டுபண்ணிற்று. அத்தீர்த்தக் கரையில் விநாயகரையும், இறைவரையும் தோற்றுவித்து வழிபட்டுவரலாயிற்று. பின் இந்திரன் வெள்ளையானையை அழைக்க, அது கீழ்த்திசையிலே ஐராவதபுரம் என்று புதிய நகரொன்றை ஆக்கிற்று. ஆங்கு இந்திரேச்சுரர் என்னும் பெயருடன் இறைவனை அமைத்து வழிபட்டுவரலாயிற்று. பின்னரும் அழைப்பு விடுப்ப வெள்ளையானை இறைவனை வணங்கிச் சுவர்க்க லோகத்தை அடைந்தது.

இவ்வாறு ஐராவதத்தால் உண்டாக்கப்பட்ட அத் தீர்த்தத்தில் நீராடி இரண்டிடங்களிலுமுள்ள இறைவரை இடைவிடாது வழிபட்டோர் என்றும் மாறா இன்பத்தை அடைந்து ஏற்றமும் தோற்றமும் பெற்று வாழ்வார். முடிவில் அழிவேயில்லாத முத்தியையும் அடைவர்.

## 3. திருநகரங்கண்ட படலம்

---

பாண்டியநாட்டுப் பழம் பெரும் தலைநகர்களுள் ஒன்று மணவூர். இது மதுரைக்குக் கீழ்த்திசையில் உள்ளது. இதனைத் தலைநகரமாகக் கொண்டு அரசாண்டவன் குலசேகரபாண்டியன் என்னும் மன்னனுவன். அத்தலைநகருள் தனஞ்சயன் என்னும் ஒரு வணிகன் சிவபூசை முதலாய சிவபுண்ணியங்களைச்செய்து மேம்பாட்டுடன் வாழ்ந்துவந்தான். அவ்வணிகன் அருகிலுள்ள நகரங்களுக்குச் சென்று வாணிபம் செய்து பொருள் ஈட்டிவந்தான். ஒருநாள் அவன் வாணிபம் செய்து திரும்புங்கால் பொழுது சாயுங்காலம் கடம்பவனத்தை அடைந்து இறைவனை வழிபட்டிருந்தான்.

அன்று சோமவாரம். தேவர்களெல்லாம் கடம்பவனத்தையடைந்து நான்கு யாமங்களும் முறைப்படி இறைவனை வழிபடலானுர்கள். தனஞ்சயன் என்னும் வணிகனே சோமவார விரதத்தை முறையாக மேற்கொண்டு இருந்துவருபவன். இறைவன் அருளால் தேவர்கள் அனைவரும் அன்று வழிபாடாற்றவந்துள்ள முறையை அறிந்து, தானும் பொற்ருமரை வாவியில் நீராடி இறைவழிபாட்டுக்கு உரிய அனைத்துப் பொருளையும் எடுத்துச்சென்று தேவர்களிடம் நல்கினுன். வணிகனும் புறத்தே இறைவனை வழிபட்டு நான்கு யாமங்களிலும் முறையாகவந்து பெருமானை வணங்கிச் சென்ருன். பொழுது புலர்ந்தபின் தேவர்களில் எவரையும் தனஞ்சயன் அங்குக் காணவில்லை. இறைவன் மட்டும் தனித்திருக்கக் கண்டு வணங்கினுன்.

இத்தகைய அதிசய நிகழ்ச்சியைத் தனஞ்சயன் குலசேகரபாண்டியனிடம் சென்று கூறினன். இந்த நிகழ்ச்சியைக் கேட்ட பாண்டியன் அன்பு மேலெழ இறைவனை எண்ணி வழிபட்டு இருப்பானாயினன்.

அன்றிரவு பெருமான், ஒரு சித்தர்வடிவினராகப் பாண்டியன் கனவில் தோன்றி, தான் இருக்குமிடத்தையும் செய்யவேண்டிய பணியையும் குறிப்பிட்டுக் கூறினர். தனஞ்சயன் கூறிய நிகழ்ச்சியும், கனவிடை நிகழ்ச்சியும் ஒன்றாக இருக்கக்கண்ட பாண்டியன், வைகறையாமத்தே துயிலெழுந்து நித்திய கடன்களை முடித்துக்கொண்டு மந்திரிகளோடும் நடந்தவற்றைக் கூறிக் கடம்பவனத்தை அடைவானாயினன்.

அடைந்த பாண்டியன் மந்திரிகளோடும் இறைவனை வழிபட்டு ஒருபுறத்தே தங்குவானாயினன். அமைச்சர்களின் ஆணைப்படி ஏவலர்கள் காடுகளை எல்லாம் திருத்திப் பண்படுத்தலானார்கள். நிலத்தினையும் பண்படுத்தினர்கள். பின்னர், பாண்டியன் இங்கு நகரை எப்படி அமைப்பது? என்று மந்திரிகளோடு ஆலோசிக்கலானன்.

அந்நிலையில் சோமசுந்தரக்கடவுள் கனவில் வந்த சித்த உருவத்துடன் அங்கு எழுந்தருளினர். சித்தரைக் கண்ட பாண்டியன் தனது இருக்கைவிட்டு எழுந்து எதிர்கொண்டு வரவேற்று அவருடைய திருவடிகளில் விழ்ந்து வணங்கி ஓர் இருக்கையில் அமரச்செய்தான். சித்தரோ தாம் பண்டே அருளிய ஆகமத்தில் கண்ட முறைப்படி ஆலயம், மண்டபம், கோபுரம், நகரம் இவற்றை அமைக்குமாறு ஆணையிட்டு மறைந்தார்.

உடனே பாண்டியன் சிற்பநூலில் வல்லாரைக் கொணர்ந்து, சித்தர் அறிவுறுத்தியபடியே பதும மண்டபம், அர்த்தமண்டபம், நிருத்தமண்டபம், அறு காற்பீடம், யாகசாலை, திருமடைப்பள்ளி, பரிவார தெய்வங்கள் ஆலயம், இறைவனுக்கு வலப்புறமாக மீனாட்சியம்மை ஆலயம், திருமாளிகைப்பத்தி, அகழி முதலியவைகளை அமைத்தான். மற்றும் நகரங்கட்கு என்னென்ன தேவையோ அவைகளையும் அமைத்து, முடிவில் வடகீழ்த்திசையில் தனக்கு ஒருமாளிகையும் அமைத்துக்கொண்டான்.

பின்னர், தன்னால் ஆக்கப்பட்ட அந்நகரத்திற்கு ஆகமங்களில் கண்டுள்ளவாறு பெருஞ்சாந்தி கழிக்க எண்ணினான். இறைவன் சந்திரகலையின் அமிழ்தத் தோடு கங்கையையும் கலந்துவரச்செய்ததால் அந்நகரம் மதுராநகரம் என்னும் பெயரினைப் பெற்றது. இவை யன்றித் திருமால், காளி முதலிய தெய்வங்கட்கும் ஆலயம் அமைத்தான். இவ்வாலயங்களை நன்கு பரிபா லனம் செய்யும்வகையில் மலயத்துவசன் என்னும் நன்மகனிடம் ஒப்படைத்து இறைவனை வழிபட்டு இறைவனோடு இரண்டறக்கலந்துவிட்டான்.

# 4. தடாதகைப்பிராட்டியார் திருவவதாரப் படலம்

மலயத்துவசன் இருமொழிப்புலமை பெற்றவன். இவனுடைய ஆட்சியில் மக்கள் முறைவேண்டியும் குறைவேண்டியும் மிக எளிதில் சென்று காணலாம். காஞ்சனமாலை என்னும் நங்கை இம்மன்னனுக்கேற்ற மனையாளாக விளங்கிக்கொண்டிருந்தாள். இவ்விருவருடைய வாழ்க்கையும் இனிது விளங்க ஏற்ற மகப்பேறு இல்லாது விரதம் முதலாயின இருக்கத்தொடங்கினார்கள். பின்னர் பாண்டியமன்னன் பலவகையான தானங்களையும் மேற்கொண்டு செய்வானானான். தொண்ணூற்றொன்பது அசுவமேத வேள்விகளை வேட்டான். நூறாவது வேள்வி முடிப்பின் தன்னிலை மாறிவிடும் என்று எண்ணிய தேவேந்திரன் பாண்டியனை அணுகி, புத்திரகாமேட்டி யாகத்தைச் செய்தால் நற்புத்திரரைப் பெறலாகும் என்றுகூறிவிட்டுத் தன்னுடைய உலகினை அடைந்தான்.

தேவேந்திரன் கூறியவாறு மலயத்துவசன் சற்புத்திர காமேட்டி யாகத்தை முறைப்படி செய்தான். வேள்வியின் முடிவில் பாண்டிமாதேவியின் திருவயிற்றில் உலகமுய்யக் கருத்தோன்றாமல் உருவாகும் நிலையில், மலையரசன் மனையாள் நாணும்படி உமையம்மையானவள் மூன்று தனங்களையுடைய ஒரு பெண்ணின் வடிவமாகிக் காஞ்சனமாலையின் மடியில் வந்து அமர்ந்தாள். காஞ்சனமாலையோ கிடைத்தற்கு அரிய பேறு பெற்றதாக எண்ணி மகிழ்ந்தாள்.

ஞானமேவடிவாய அம்மை தன் அருந்தவமகளாக அவதரித்தும் பாண்டியனது மனம் அமைதிபெற வில்லை. நானே ஒரு ஆண்மகனை வேண்டிப் புத்திர காமேட்டி யாகத்தைச் செய்தேன்; ஆனால் எனக்குக் கிடைக்கப்பெற்றதோ ஒரு பெண்பிள்ளை; அந்த ஒரு பெண்ணோ உலகினர் நகைக்க மூன்று தனங்களை உடைய பிள்ளையாகப் பிறந்துள்ளது என்று எண்ணி வருந்தினான். இறைவன் அசரீரியாகப் பாண்டியனே! வருந்தாதே; இப்பெண் உலகாளும் பெண்ணாக விளங்கும்; மணமகன் எதிர்ப்படுங்கால் ஒருதனம் மறையும்; வருந்தற்க என்று கூறினார். பாண்டியன் மனமகிழ்ந்து சோமசுந்தரப்பெருமானுடைய திருவடிகளை எண்ணி, தன்னுடைய மாளிகையை அடைந்தான்.

அரசன் தன்னை அடைந்தோர் அனைவர்க்கும் எண்ணற்ற தானங்கள் செய்தான். எல்லா ஆலயங்களிலும் சிறப்பான வழிபாடு நடைபெறச்செய்தான். பகைவர்களையெல்லாம் சிறைவீடுசெய்தான். அன்று நகரமே ஆனந்தவெள்ளத்துள் அழுந்தியது.

பின்னர் மலையத்துவசன் மகளுக்கு முறைப்படி சாதகர்மம் முதலிய சடங்குகள் யாவும் செய்தான். இறைவன் ஆணைப்படி தடாதகை என்று பெயரும் இட்டான். அரசியற்கலைகள் யாவும் செவ்வனே கற்ற பின்னர், சுமந்தி என்னும் அமைச்சர் முடி சூட்டுவதற்குரிய மங்கல தினத்தை வரையறுத்துக் கூறினார். பின்னர் எல்லாவகை மங்கள வாத்தியங்கள் ஒலிக்க, நகரை வலம்வரச்செய்து முடியும் சூட்டினான். அசரீரி கூறிய அன்றினும் முடிசூட்டிய அன்று மன்னன் பெருமகிழ்வடைந்தான்.

சிலகாலங்கட்குப் பின் மலயத்துவசன் சுவர்க்கம் அடைந்தனன். தடாதகைப்பிராட்டியார் தந்தைக்கு ஆற்றவேண்டிய இறுதிக் கடன்களை முறைப்படி செய்து முடித்தாள்.

பின்னர் தடாதகாதேவியார் காலையில் எழுந்து முறைப்படி நித்திய கருமங்களைச் செய்து, ஆலயம் சென்று அரனை வழிபட்டுப் பலவகை அறங்களையும் செய்தபின்னர் அரியணையேறி அமர்ந்து ஆட்சி செலுத்துவாள். பிற்போதில் புராணங்கள் முதலான புண்ணிய நூல்களைப் பிறர் சொல்லச்சொல்லிக் கேட்பாள். இம் முறையில் கன்னிப் பெண்ணாகிய தடாதகைப்பிராட்டியார் செங்கோலோச்சி வந்தமையால் பாண்டியநாடு கன்னிநாடு என்னும் பெயரினைப்பெற்றது. அதன்மேல் அம்மையார் பாண்டியனுக்கு மகளாகவந்து தோன்றிய காரணத்தை அகத்தியர் முனிவர்களுக்கு விளக்கிக் கூறுவாரானார்.

முனிவர்களே! முன்னொரு காலத்தில் விசுவாவசு என்னும் வித்தியாதரனொருவன் வித்தியாவதி என்னும் பெண்ணைப் பெற்றான். வித்தியாவதி உமையிடம் பேரன்புகொண்டு உய்தி பெறும் வழி யாது? என்று தந்தையிடம் வினவினாள். தந்தையும் அவளுக்கு உமையின் மந்திரத்தை உபதேசித்தான். வித்தியாவதி பின் தந்தையின் சொற்படி மதுரையை அடைந்து முதற்சத்திபீடமாகிய அத்தலத்துள் தங்கி அம்மையை வழிபட்டுவருவாளாயினாள்.

இவ்வாறு மதுரையை அடைந்த வித்தியாவதி தைமாதம் முதல் ஒருவகை நோன்பினை மேற்கொண்டு ஒழுகுவாளாயினாள். தைமாதம் முழுதும் நடுப்பகலில்

உணவுண்டிருந்தாள். மாசி மாதத்தில் இரவில் மட்டும் உணவு உண்டாள். பங்குனி மாதத்திலே பிறர் உதவியதை மட்டும் உண்டு வாழ்ந்தாள். சித்திரை மாதத்தில் இலை முதலியவற்றை உணவாக உண்டாள். வைகாசி மாதத்தில் எள்ளுப்பொடியை உண்டாள். ஆனிமாதத்தில் சாந்திராயண விரதம் மேற்கொண்டாள். ஆடி மாதத்தில் பஞ்சகவ்யம் உண்டு வாழ்ந்தாள். ஆவணி மாதத்தில் பால்மட்டும் உண்டாள். புரட்டாசி மாதத்தில் தண்ணீரைமட்டும் உட்கொண்டு வாழ்ந்தாள். ஐப்பசி மாதத்தில் தருப்பை நுனி நீரை உண்டாள். கார்த்திகை மாதத்தில் காற்றைமட்டும் உட்கொண்டாள். இவ்வாறு பன்னிரண்டு மாதங்களும் முறைப்படி நோன்பிருந்து இறைவியை வழிபட்டு வருவாளாயினள். இடையிடையே இனிய இசையோடும் இறைவியை எண்ணிப் பாடுவாள்.

மேலே கூறியவாறு வித்தியாவதி இறைவியைத் துதித்து வழிபட்டு வருவாளாயினள். அவ்வித்தியாவதிக்கு முன் அம்மை மூன்று வயதுக் குழந்தையாக எதிர் நின்று காட்சி கொடுத்தாள். வித்தியாவதியும் உண்மையுணர்ந்து வழிபட்டு நின்றாள். இறைவியோ வித்தியாவதியைப் பார்த்து 'நீ வேண்டும் வரங்கேட்க' என்று கூறினாள். முடிவில் இறைவி வித்தியாவதிக்கு மதுரை நகரிலுள்ள மலயத்துவசனுக்கு நீ மனைவியாக வருக; நாம் அப்போது உனக்கு மகளாக வருகின்றோம் என்று அருள்செய்து மறைந்தாள்.

## 5. திருமணப் படலம்

தடாதகைப்பிராட்டி இளவரசுத்தன்மை நீங்கி, மணம்செய்யும் பருவத்தினை அடைந்தாள். காஞ்சன மாலையோ தன் மகளின் மணப்பருவத்தைக் கண்டு செய்வது அறியாது திகைத்தாள். இதனை உணர்ந்த பிராட்டி ‘அம்மையே! கவலற்க; எல்லாம் ஆகுங் காலத்து ஆம்; அது குறித்து வருந்தற்க; இப்போது நான் திக்கனைத்தும் சென்று வெற்றியுடன் திரும்பு வேன்; நீ இங்கே இரு’ என்று கூறிப் புறப்பட்டாள்.

தடாதகைப்பிராட்டி நால்வகைச் சேனைகளும் தன்னைப் புடைசூழ்ந்துவர, கையில் பிரம்பேந்தி வட திசை நோக்கிச் செல்லலானாள். அங்குள்ள கயபதி துரகபதி முதலிய அரசர்களைப் போரில் வென்றாள். பின் திருக்கயிலாயமலையை நோக்கிப் புறப்பட்டாள். கயிலைமலைக் காவலர்கள் திருநந்திதேவரிடம், போருக்கு வந்துள்ள தன்மையை எடுத்துக் கூறினார்கள். கேட்ட திருநந்திதேவர் பூதகணங்களை ஏவினார். பூதகணங்கள் போருக்கு ஆற்றாது தோற்றன.

இந்நிலையறிந்த திருநந்திதேவர் இறைவன் திருமுன் சென்று நிகழ்ந்த செயல்களை எடுத்துக்கூறினார். சிவ பெருமானும் போர்க்கோலங்கொண்டு தன்னை எதிர்க்க நிற்கும் தேவியாரின் எதிரே வந்தார். இறைவனுடைய திருக்கோலத்தைக்கண்ட இறைவி நாணத்தால் தலை கவிழ்ந்தாள். நடுவில் இருந்த தனமும் காணக்கூடாத தாயிற்று. முன்னரே அசரீரியின் கூற்றை அறிந்த சுமதி, தாயே! இக்கைலாசபதியே உனக்குரிய நாயகன்

என்று நினைவு படுத்தினர். இறைவியும் எதிர்நோக்கி நின்றாள். இறைவன், தேவியே! உன்னை இன்றைக்கு எட்டாம் நாள் சோமவாரத்தன்று மதுரையில் வந்து மணந்து கொள்கின்றோம்; நீ உடனே மதுரைக்குச் செல்க என்று அருள்செய்தார். அவரது கூற்றைக் கேட்ட இறைவியும் மதுரையை அடைந்து, தனது திருமாளிகையுள் உறைவாளானாள்.

உடனே அமைச்சர்கள் திருமணவோலை எழுதி எல்லாத்தேயங்கட்கும் ஆட்போக்கினர்கள். மதுரை நகரம் புத்தழகு பெற்றுப் பொலிந்தது. மணமுரசு ஒலிக்கக் கேட்ட நகரினர் நகரத்தை நன்முறையில் அலங்கரித்தார்கள். தடாதகைப் பிராட்டியாருடைய உறவினர் மணவினைக்கு ஏற்ற மண்டபமும், சிங்காதனமும், முனிவர் தேவர் ஆகியோர் தங்குவதற்குத் தனித்தனியே இடங்களும் ஏற்ற முறையில் அமைக்கலானர்கள். அந்த மண்டபத்தின் காட்சி அளவிட்டு உரைக்கற்பாலதன்று.

அரசியாரின் திருக்கல்யாணத் திருமுகம் கிடைக்க இருக்கும் எல்லா நாட்டு மன்னர்களும், எதிரேற்று வணங்கிப் பெறலானர்கள். அத்திருமணவோலையில் உள்ள வாசகத்தைப் படித்துணர்ந்து மகிழ்ந்தார்கள். திருமுகத்தைக் கொணர்ந்தோர்களுக்குப் பலவகைப் பரிசுகளை நல்கினர்கள். பின்னர், தங்களிடம் உள்ள உயர்ந்த பொருள்களைப் பரிசிலாகக்கொண்டு மதுரை நகருக்கு வந்து இறைவியை வணங்கி, தங்களுக்குரிய விடுதியில் தங்கலானர்கள்.

தடாதகைப்பிராட்டியார் மதுரைக்குத் திரும்பிய பின்னர் பரமேசுரன் படுகளத்தினின்றும் நீங்கி, திருக்

கயிலையை அடைவாராயினர். பின்னர், கணநாதர்கள் மூலம் திருக்கல்யாணச் சிறப்பினைத் தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் அறிவிக்குமாறு செய்தார். அறிவிப் பைக் கேட்டு மகிழ்வுற்றவராய் காலாக்கினிருத்திரர், கூர்மாண்டேசர், ஆடகேசர், வீரபத்திரர், ஐயனர் முதலிய உருத்திரர்களும், பிரமா, விட்டுணு, இந்திரன் முதலாய தேவர்களும், வியாக்கிரபாதர், பதஞ்சலி, அகத்தியர் முதலாய முனிவர்களும் ஏனையோரும் திருக்கயிலாய மலையினை அடைந்து திருக்கோயிலின் புறத்தே நிற்கலானர்கள். இவர்களது வருகையை அறிந்த திருநந்திதேவர் இறைவன் திருமுன் சென்று விண்ணப்பஞ்செய்தார். இறைவரும் அனுமதி தர திருநந்திதேவர் அனைவரும் உள்ளே செல்ல அனுமதி யருளினர். எல்லோரும் இறைவன்முன் சென்று இறைவனது திருவடியில் வழிபடலானர்கள். இறை வரும் அவர்களது வழிபாட்டினை ஏற்றுக்கொண்டு அருள்செய்வாராயினர். பின்னர், இறைவர் மணக் கோலம் கொள்ளும்பொருட்டு மண்டபம் ஒன்றனை அடைந்தார். இறைவனின் திருவுளக்குறிப்பு அறிந்த குபேரன் பேரன்புகொண்டு அம்மண்டபத்தினுள்ளே சென்றான். வேதங்கள் பிரம விட்டுணுக்கள் முனிவர் கள் ஆகிய இவர்களால் தீண்டுவதற்கரிய அருமைத் திருமேனியைத் தன்னுடைய கைகளாலே தீண்டித் திருமணக்கோலம் செய்வானயினன்.

அதன் பின்னர், இறைவன் குண்டோதரனுடைய முதுகின்மேல் திருவடி வைத்து இடபவாகனத்தின் மேல் ஏறி அமர்வாராயினர். அமர்ந்தவுடன் தேவர்கள் அனைவரும் மலர்மாரி சொரிந்து தேவ துந்துபியினை முழக்கலானர்கள். முனிவர்கள் கணநாதர்கள் ஆகிய

அனைவர்களும் கைகூப்பித் தொழுவாரானார்கள். பல வகைப் பணிகளையும் தேவர்கள் முறைப்படி செய்ய, வலப்பக்கத்தே பிரமனும், இடப்பக்கத்தே திருமாலும் கைகூப்பித் தொழுதுகொண்டே வர, சிவபெருமான் மதுரைநகர்ப்புறத்தை அடைவாராயினர்.

பெருமானது வருகையைக் கேட்ட தடாதகைப் பிராட்டியாருடைய மந்திரிமார்களும், சேனாதிபதிகளும், குறுநில மன்னர்களும் எதிர்சென்று வணங்கி வரவேற்கலானார்கள். சிவபெருமான் மதுரைநகருள் புகுவாரானார். மதுரைநகரமக்கள் அனைவரும் மங்கள வாத்தியங்கள் ஒலிக்கப் பெருமானை வரவேற்றார்கள். சிவபெருமான் தன்னுடைய பரிவாரங்கள் புடைசூழ, திருமாளிகையின்முன் சென்றார். தேவமாதர்கள் அனைவரும் எதிர்வந்து இறைவனை மூன்றுமுறை வலஞ் செய்வாரானார்கள்.

இறைவன் திருநந்திதேவருடைய கையைப்பற்றிக் கொண்டு இடபவாகனத்தினின்று கீழே இறங்கினார். உடன் பிரமாவும் விட்டுணுவும் இருபக்கங்களிலும் கைநீட்ட, அவர்களுடைய கைகளைப்பற்றிக்கொண்டு மலர்மாரி சொரிய அதன்மேல் நடந்து உள்ளெழுந்தருளினார். அவ்வமயம் காஞ்சனமாலை, பெண்கள் புடைசூழ வந்து அவர்களெல்லாம் தங்கள் தங்கள் கைகளிலுள்ள பொற்சொம்புகளில் உள்ள நீரை வார்க்க இறைவன் திருவடியை விளக்குவாளானாள். விளக்கிய நீரைத் தன் தலையில் தெளித்துக்கொண்டாள். பின், இறைவனை முறைப்படி உள்ளே அழைக்க இறைவனும் திருக்கல்யாணமண்டபத்தினையடைந்து இரத்தின சிம்மாதனத்தில் இனிது வீற்றிருப்பாராயினர்.

தடாதகைப் பிராட்டியாரைத் தேவமாதர்கள் எல்லாம் கூடித் திருமஞ்சனம் ஆட்டி அலங்கரிக்கலானார்கள். உடன் செய்யவேண்டிய தான தருமங்களையெல்லாம் செய்து முன்வர, இலக்குமியும் சரசுவதியும் இருபக்கங்களிலும் கைகளை நீட்டினார்கள். தேவியார் அவ்விருவரது கைகளையும் பற்றிக்கொண்டு, மலர்களாலாகிய நடைபாவாடையின் மேல் மெதுவாக நடந்துவந்து திருமண மண்டபத்தினை அடைந்தார். அடைந்த அம்மையார் அங்கே இறைவரைக் கண்டு நாணி ஒதுங்கி அவரது பக்கத்திலே சென்று அமர்ந்து இருப்பாராயினார். பெருமானும் பிராட்டியும் ஒருசேர இருந்த காட்சியை அனைவரும் கண்டு களித்தனர்.

அவ்வமயம் திருமால் இறைவனுடைய இரண்டு திருவடிகளையும் நீரினால் விளக்கி, சந்தனம் கலந்த மலர்களைக்கொண்டு அருச்சித்துத் தூபதீபம் காட்டியருளினார். பின்னர், இறைவியின் திருக்கரத்தைத் திருமால் பற்றி இறைவனது திருக்கரத்தில் பொருந்தச் செய்து, வேத மந்திரங்களைக் கூறித் தாரைவார்த்துக் கொடுப்பாராயினார். கூடியிருந்த தேவர்கள், முனிவர்கள், கணங்கள், அரசர்கள் ஆகிய அனைவரும் பலவகை இன்னியல் வாத்தியங்கள் ஒலிக்கப் பேராரவாரஞ் செய்து வழிபட்டு வாழ்த்தலானார்கள். தேவமாதர்கள் அனைவரும் மங்கலப்பாடல்கள் பாடி வழிபடுவாரானார்கள். பின், இறைவனும் இறைவியும் முறைப்படி அக்கினி காரியம் முதலிய அனைத்தையும் செய்வாரானார்கள். மணவினை நிகழ்ச்சிகள் யாவும் நிறைவேறிய பின்பு இறைவர் பிரமன் திருமால் முதலாய தேவர்கள் அனைவர்களுக்கும் அவரவர்களுக்கு ஏற்ற முறையில் விடைகொடுத்து அருள்செய்வாரானார்.

இறைவன் உலகினர்பொருட்டுத் தாமே அரசாள்வார்போல், இடபக்கொடியினைக் கயற்கொடியாக மாற்றியருளினார். அரவாபரணங்கள் பொன்னாபரணங்களாக மாற்றம் பெற்றது. கொன்றையாகிய மாலை பாண்டிய மன்னர்களுக்கு உரிய வேப்பம்பூமாலையாயிற்று. புலியுடை பொன்னுடையாக மாறிற்று. சடைமுடியோ இரத்தினமுடியாக ஏற்றம்பெற்றது. இறைவனது கணங்கள் யாவும் மானுடத் தன்மையினை அடைந்தன. இறைவரோ சௌந்தரபாண்டியர் என்ற பெயரினை ஏற்று அரசாட்சி செலுத்துவாராயினார். இறைவர் தாமே ஒரு சிவலிங்கத்தைத் தாபித்து அதனை முறைப்படி பூசையும் செய்து வருவாராயினார். இத்தகைய பெருமையினையுடைய நன்மையை நல்கும் இறைவனை அன்றுமுதல் இன்றுவரை பலர் வழிபட்டு நற்பயன் பெற்றுள்ளார்கள். அத்தகைய இறைவன் பெருமையை யாரே அளவிட்டுரைக்கவல்லார்.

பூவரும் அயன்மா லாதிப் புனிதரும் முனிவ ரேனோர்
யாவருந் தனையே பூசித் திகபர மடைய நின்ற
மூவருள் மேலா முக்கண் மூர்த்தியே பூசை செய்த
தாவர இலிங்க மேன்மைத் தகுதியா ரளக்க வல்லார்.

## 6. வெள்ளியம்பலத் திருக்கூத்தாடிய படலம்

பரமேசுரன் தடாதகைப் பிராட்டியாரைத் திரு மணஞ்செய்து கொண்டபின், மணவினைக்கு வந்திருந்த தேவர்கள் முனிவர்கள் அரசர்கள் அனைவரையும் உணவு உண்ணுமாறு கூறுவாராயினர். அனைவரும் பொற்றாமரை வாவியினை அடைந்து நீராடித் தங்கள் தங்கள் கடமைகளை முடித்துக்கொண்டு உணவுண்ண வருவாரானார்கள்.

மேலே கூறியவாறு எல்லோரும் இறைவரை வணங்கி உணவு உண்ணச் சித்தமாயிருக்கும்நிலையில், பதஞ்சலி வியாக்கிரபாதர் ஆகிய இரு முனிவர்களும் இறைவனைத் தனித்து வழிபட்டு விண்ணப்பஞ்செய்வா ரானார்கள். பெருமானே நாங்கள் நாள்தோறும் பொன் னம்பலத்தில் நடமாடும் இறைவனின் திருநடனத்தை வழிபட்டபின் உணவு உண்ணுவது என்னும் கடப் பாட்டினை மேற்கொண்டு வாழ்ந்து வருகின்றோம்; அதனைக்கான அருள்செய்யவேண்டும் என விண்ணப் பித்துக்கொண்டார்கள்.

உடன் இறைவர் முனிவர்களை நோக்கி, முனிவர் களே! உலகத்தையே தனது வடிவமாகக்கொண்ட விராட்புருடனது இருதயம் சிதம்பரமாகும் என்றும், மதுரை துவாதசாந்தஸ்தானம் ஆகும் என்றும் கூறி மதுரையே மேன்மையினை உடையது என்றும் கூறி யருளினார். இத்தலத்தில் நாம் ஆடும் நடனம் மிகவும்

சிறப்புடையதோடு மேன்மையானதாயும் இருக்கும் என்று கூறியருளினுர்.

உடன் முனிவர்கள் இருவரும் விசுவரூபியாகிய இறைவருக்குத் தாமரைபோன்ற சிதம்பரம் இருதய கமலமென்று கூறினீர்; மதுரையோ துவாதசாந்தத் தலம் என்றும் அருள்செய்தீர்; திருக்கயிலே முதலிய தலங்களின் சிறப்புக்கள் யாவை? அவைகளேப்பற்றி அடியேங்களுக்கு விளக்கி அருளவேண்டும் என்று வேண்டிக்கொண்டார்கள்.

மேல் அண்டம் விசுவரூப இறைவனின் சரீரம். கீழேயுள்ள ஏழு உலகங்களும், இடுப்பின் கீழுள்ள கால் பெருவிரல், புறவடி, பரடு, கணேக்கால், முழந் தாள், தொடைநடு, தொடைமூலம் ஆகியவைகளாம். மேலேழுலகங்கள், இடுப்பிற்குமேலுள்ள மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை, பிரமரந்திரம் ஆகியவைகளாம். எல்லா உல கங்களிலுமுள்ள நம்முடைய இலிங்கவுருவங்கள் நம் முடைய அடியார்களுக்கு அருள்செய்யும்பொருட்டு மூலாதாரமாகிய இப்பூவுலகத்திலே நம் விருப்பப்படி எந்நாளும் நம் ஆற்றலே விளக்கிக்கொண்டிருக்கும். இத்தகைய சிறப்பினேயுடைய மூலாதாரமாகிய தலம் திருவாரூர்; அங்கே நமக்குத் தியாகேசர் என்னும் திருப்பெயர் வழங்கிக்கொண்டிருக்கும். திருவானேக்கா என்னுந்தலம் சுவாதிட்டானம் ஆகும்; அங்கே நாம் சம்புநாதர் என்னும் பெயரினேப் பெறுவோம். திரு வண்ணுமலே என்னும் திவ்யதலம் நாபித்தானமாகிய மணிபூரகம் ஆகும்; அங்கு நாம் அருணுசலேசுரர் என்ற பெயரினேப் பெறுவோம். இருதயத்தான தலம்

சிதம்பரம்; அங்கு சபாபதி என்னும் பெயர் நமக்கு வழங்கப்படும். கண்டத்தானமாகிய தலம் திருக் காளத்தி; அங்கு காளத்திசுரர் என்னும் பெயர் நமக்கு வழங்கப்படும். புருவமத்தியத்தலம் காசி; அங்கு விசுவ நாதராக வீற்றிருப்போம். பிரமரந்திரத்தலம் கயிலாசம்; அங்கு நாம் ஸ்ரீகண்டபரமேசுரர் என்னும் பெயரினைப் பெறுவோம். அடியார்கள் இவைகளையெல்லாம் தமது மனத்தில் எண்ணி வழிபட்டு உய்திபெறுவார்கள்.

முனிவர்களே! இம்மதுரைத்தலம் எல்லாவற்றுக் கும் முன்னே தோன்றியது. இத்தலத்திலுள்ள தாண் டவப்பெருமானும் மிக்க சிறப்பினையுடையவர். நாம் விரைவில் உமக்குத் தாண்டவதரிசனம் தந்து அருளு கிறோம் என்று கூறித்திரும்பினர். உடன் இறைவனது எண்ணப்படி விமானத்தின் கீழ்பால் வெள்ளியம்பல மும் ஒரு வேதிகையும் தோன்றலாயிற்று. இறைவன் அவ்வேதிகையின்மேல் ஞானவடிவமாகத் தோன்றி, தமது கணங்கள் பலவகை வாத்தியங்களை ஒலிக்கத் திருநடனம் செய்தருளினர். இந்தச் செயலைக்கண்ட முனிவர்கள் இருவரும் தலைமேற் கைகுவித்து வழிபட லானர்கள். பலவாறு இறைவனது புகழினை எண்ணிப் பாடினர்கள்.

*பராபர முதலே போற்றி பத்தியில் விளைவாய் போற்றி*
*சராசர மாகி வேருய் நின்றதற் பரனே போற்றி*
*கராசல வுரியாய் போற்றி கனகவம் பலத்து ளாடும்*
*நிராமய பரமா னந்த நிருத்தனே போற்றி போற்றி.*

மேலே கூறியவாறு முனிவர்கள் இருவரும் கீழ் விழுந்து எழாது வழிபடுநிலையினை இறைவர் உணர்ந்து

எழுமாறு பணித்தார். எழுந்த முனிவர்கள் 'இன்று போல் என்றும் இத்தலத்தில் இந்நடனம் நிகழ்ந்து கொண்டிருக்கவேண்டும்' என்று வேண்டிக்கொள்வாரானார்கள். அல்லாமலும் முறையாக இந்நடனத்தைத் தரிசிக்கும் அன்பர்கட்கு முடிவில் முத்தியும் அருள வேண்டும் என்று வேண்டினார்கள். இறைவனும் அவ்வாறே அருள்செய்வானாயினான்.

இம்மூர்த்தியினை ஒவ்வொரு திருவாதிரையினும், பொற்றாமரையில் நீராடித் திருநீறணிந்து திருவைந்தெழுத்தை ஓதி முறைப்படி வழிபடுவோர் எண்ணிலாப் பயனைப் பெறுவார்கள். ஓராண்டுகாலம் வரை திருவாதிரைதோறும் இடைவிடாது மேலே கூறிய நியமப்படி வழிபடுவோர் எல்லையில்லாத நன்மைகள் பெற்றுச் சிறப்புறுவர்.

# 7. குண்டோதரனுக்கு அன்னமிட்ட படலம்

---

இறைவியாகிய தடாதகைப் பிராட்டியார், திருமணத்திற்கு வந்திருந்த தேவர்கள் முதலிய அனைவர்க்கும் திருவமுது முதலியன இட்டுச் சிறப்புச் செய்து விடைகொடுப்பாளாயினுள். இந்த நிலையில் மடைப் பள்ளியிலுள்ளோர் இறைவிமுன் சென்று வணங்கி, 'நாங்கள் தயாரித்துள்ள உணவுள் ஒருசிறிதும் செலவாகவில்லை; யாவும் அப்படியே உள்ளது; அதனை என்செய்வோம்' என்று கேட்கலானுர்கள்.

தேவியார் இச்சொல்லினையேற்று உடனே தனது கணவராகிய சௌந்தரபாண்டியர் திருமுன் சென்ருர்; வணங்கினுர்; 'பெருமானே! கயிலாயபதியாகிய தாங்கள் இங்கு எழுந்தருளுவது குறித்து நாங்கள் ஒன்ருனும் குறைவில்லாது உணவு வகைகளைச் சமைத்து நிரப்பி வைத்திருந்தோம்; அவ்வுணவு வகைகள் யாவும் இமய மலையும் அதனை அடுத்துள்ள சிறுசிறு குன்றுகளும் போல நிறைந்து காட்சிதருகின்றன; இவைகளையெல்லாம் உண்டு தீர்க்குமாறு உங்கள் கணங்களை அருள் செய்யவேண்டும்' என்று வேண்டுவாளாயினுள்.

இறைவர் பாண்டியனது மகளாகிய உனக்குக் கிடைக்க அரியது எது? தேவதருவுங்கூட நீ விரும்பியவாறு பணியினை விரும்பிச்செய்யும். ஆதலால் பிறருக்கு உரிய செல்வங்களும் உனக்கு உரிய செல்வங்களாக நிரம்பியிருக்குமாயின் நாம் வியப்பு அடைவதற்கில்லை.

நாம் உன்னுடைய எல்லையற்ற செல்வப்பெருக்கினை எண்ணுமாறு சமைத்து வைத்துள்ளாய்போலும். உன்னுடைய விருந்தை ஏற்று உண்ணக்கூடிய கணங்களுள் ஒன்றையும் இங்குக் காணவில்லையே? என்ன செய்வோம் என்று கூறினர்.

இவ்வாறு கூறிய இறைவர், பக்கத்திலே நின்ற குண்டோதரன் வயிற்றில் வடவாமுகாக்கினி புகுமாறு திருவுள்ளங்கொண்டார். அவ்வக்கினி வயிற்றிடைப் புகுந்தவுடன் குண்டோதரன் பசியினால் சோர்ந்து இறைவன்முன் சென்று அடியேன் பசியினால் மெலிவடைகின்றேன் என்று விண்ணப்பம் செய்தான். உடன் இறைவர் இறைவியைநோக்கி இக்குண்டோதரனுக்கு ஒரு பிடி சோறு முதலில் போடு; பின் ஏனையவற்றைப் பார்த்துக்கொள்ளுவோம் என்றார்.

தடாதகைப்பிராட்டியார் மனம் மிக மகிழ்ந்து முன்சென்றார். குண்டோதரனும் பின்சென்றான். ஏவல் மகளிர் குண்டோதரனை அன்னத்தின்முன் கொண்டுவிட்டார்கள். குண்டோதரன் அங்குள்ள அனைத்தையும் ஒருநொடியில் உண்டுவிட்டான். பின்னும் பசி என்றுகூறினன். இதனை உணர்ந்த தேவியார் இறைவர் திருமுன் சென்று, செய்வதறியாது திகைத்து நிலங்கிளைத்து நின்றார். இறைவரோ ஒன்றும் அறியாதவர் போல இறைவியை நோக்கி, குண்டோதரன் உண்டும் தீரவில்லையாயின் இன்னும் சில பூதகணங்களை அனுப்புகிறோம் என்று கூறினர்.

உடனே தேவியார் பணிந்து குண்டோதரன் ஒருவனுடைய பசியே இன்னும் அடங்கியபாடில்லை; வேறு

பூதங்களை அனுப்பி அடியாளைச் சோதிக்கவேண்டாம்; குண்டோதரனே நேரில்வந்து தன் நிலையைக்கூறுவான் என்று கூறினர். அந்நிலையில் குண்டோதரன் வந்து இறைவனை வணங்கி, வெள்ளியம்பலத்தில் திருக்கூத்து ஆடிய இறைவா! எம்பிராட்டியார் கட்டளைப்படி சமைத்து வைத்துள்ள உணவுப் பொருள்கள் இமய மலைபோலக் குவிந்துகிடந்தன; அவைகளை உண்டேன்; உண்ட பிறகும் அடியேனுடைய பசி சிறிதும் தணிய வில்லையே; முன்னைப் பிறப்பில் பிறருக்குக் கொடுத்து உண்ணுதவர்களுடைய வயிறனது இந்தப் பிறப்பில் எப்படி வறுமையினுல் எரியுமோ அதுபோல என் வயிறு பசிமிகுதியால் எரிகின்றது; திரிபுரத்தில் வைத்த அப்பெருநெருப்பு இப்பொழுது என் வயிற்றில் குடி புகுந்து விட்டதோ? இன்னதென அறிகிலேன் என்று விண்ணப்பித்துக்கொண்டான்.

நட்ட மாடிய சுந்தர! நங்கைஎம் பிராட்டி
அட்ட போனகம் பனிவரை அனையவாய்க் கிடந்த
தொட்டு வாய்மடுத் திடவுமென் சுடுபசி தணியா(து)
இட்டு ணுதவர் வயிறுபோல் காந்துவ(து) என்றுன்.

# 8. அன்னக்குழியும் வைகையும் அழைத்த படலம்

கருணையே வடிவாகிய பெருமானுர் தடாதகைப் பிராட்டியாரைப் பார்த்து மனத்துள்ளே நகைத்தார். பின் பசியால் துன்புறுகிற குண்டோதரன் பொருட்டு அன்னபூரணியை நினைத்தருளினுர். அப்பொழுதே நான்கு குழிகளில் தயிர்கலந்த அன்னம் தோன்றியது. உடனே இறைவர் அந்த அன்னத்தை உண்ணுமாறு குண்டோதரனுக்கு அருளாணையிட்டார். குண்டோதரனும் அதனை அள்ளி அள்ளி உண்டு பசி தணியலானுன். உடனே உடம்பு வீங்கிற்று. குடிப்பதற்குத் தண்ணீர் பெருது தவித்தான். குளங்கள், ஓடைகள், கிணறுகள் ஆகிய யாவற்றிலுமுள்ள நீரினையெல்லாம் குடித்தான். மேலும் நீர்வேட்கை தணியப்பெருமல் இறைவன் திருவடியில் விழுந்து வேண்டினுன்.

உடனே இறைவன் தனது சடைமுடியில் உள்ள கங்கையை நோக்கி, நீ மதுரையின்புறத்து ஓர் ஆருக உருவெடுத்து வா என்று அருளாணையிட்டார். கங்கையும் அவ்வாறே எல்லாப் பாபங்களையும் போக்கும் ஒரு புண்ணிய நதியாக உருவெடுத்து மதுரையின் புறத்தே வரலாயிற்று. குண்டோதரன் நதியின் நடுவில் நின்று நீர்வேட்கை தணியும்வரை தண்ணீர் குடித்துப் பின் எழுந்து இறைவன் திருமுன் வந்து ஆனந்தங்கொண்டு ஆடுதலும் பாடுதலும் செய்தான். இறைவர் மகிழ்ந்து குண்டோதரனைக் கணங்களுக்குத் தலைமையாக்கிப் பெருஞ்சிறப்பினைத் தந்து எழுந்தருளியிருந்தார்.

இறைவனுடைய திருச்சடையிலிருந்து இழிந்து வந்த காரணம்பற்றிச் 'சிவகங்கை' எனவும், இறைவனுடைய எட்டுத் திருவடிவங்களுள் இஃது ஒன்ருகும் என்று உணர்கின்றவர்களுக்கு இந்நதி ஞானத்தைக் கொடுப்பதால் 'சிவஞான நதி' எனவும், காற்றைப் போல மிக வேகமாக விரைவில்வந்த காரணம்பற்றி 'வேகவதி' எனவும், ஒரு மாலையைப்போல மதுரை நகரைச் சுற்றிக்கொண்டு வருவதால் 'கிருதமாலை' எனவும் இவ்வைகைநதி பல பெயர்களைப் பெற்று விளங்குகிறது.

*தீர்த்தன் இதழிச் சடைநின்றும்*
*இழிந்து வரலால் சிவகங்கை*
*தீர்த்தன் உருவந் தெளிவோர்க்கு*
*ஞானந் தரலால் சிவஞான*
*தீர்த்தம் காலிற் கடுகிவருஞ்*
*செய்தி யாலே வேகவதி*
*தீர்த்தம் கிருத மாலையென*
*வைகை நாமஞ் செப்புவரால்.*

# 9. எழுகடலழைத்த படலம்

இறைவர் நிலையை வேதங்களும் அளவிட்டுரைக்க வில்லை. அளவிடமுடியாத அப்பரம்பொருளாகியபரமர் பாண்டியராகி அரசு செலுத்திவந்தார். வேதங்களில் வல்ல முனிவர்கள் முறையாக அவரை வந்து வழி படலானார்கள். அத்தகைய முனிவருள் கௌதமரும் ஒருவர். அம்முனிவர் இறைவரைச் சந்தித்துத் திரும் புங்கால் காஞ்சனமாலையின் இல்லத்தை அடைந்தார். காஞ்சனமாலை எதிர்கொண்டு வரவேற்று இருக்கை தந்து உபசரித்தாள். முடிவில் முனிவரிடம், எளியேன் பிறவித் துன்பத்தைப் போக்கிக் கொள்ளவேண்டும்; அதற்குரிய வழி யாது? என்று வினவினாள்.

கருணையே வடிவமாக விளங்குகின்ற கௌதமர் காஞ்சனமாலையை நோக்கி, தவச்செல்வியே! நீ உலக மாதாவாகிய இறைவியை மகளாகவும், இருவராலும் அறியமுடியாத பெருமானை மருமகனாகவும் அடையும் பேற்றைப் பெற்றாள்ளாய்; உன்னிலும் மேம்பட்டோர் உலகில் ஒருவருமிலர்; ஆயினும் என் அறிவுக்கெட்டிய ஒன்றைச் சொல்கிறேன் கேள் என்று கூறுவாரானார்.

பாண்டிமாதேவியே! மக்கள் இறைவனை மூன்று வகையான முறையினைப் பின்பற்றி வழிபடலாம். அம் மூன்று வகையாவன மனம், வாக்கு, காயம் என்பன வாம். மனத்தினால் இறைவனை வழிபடுதலாவது :- வாய்மை, இரக்கம், பொறை, ஐம்பொறியடக்கல், சிவத்தியானம், அறங்கள் செய்ய எண்ணுதல் முதலி யனவாம். வாக்கால் இறைவனை வழிபடுதலாவது :-

திருவைந்தெழுத்தைச் செபித்தல், சதருத்திர பாரா யணம், தோத்திரம், அறங்களை எடுத்துச் சொல்லுதல் முதலியனவாம். உடம்பால் செய்யும் வழிபாடாவன:- இறைவனைப் பூசித்தல், இறைவனது ஆலயங்களை வலம் வந்து வணங்குதல், சிவதலங்கட்குச் சென்று வணங்குதல், ஆலயங்கள் திருப்பணி செய்தல், சிவதீர்த் தங்களிலே நீராடுதல் முதலிய செயல்களாம். மேலே கூறிய இம்மூன்றனுள் உடம்பால் செய்வனவே சிறந் தனவாம். அவைகளுள்ளும் புண்ணிய நதிகளுள் நீராடுதல் சிறந்த பயனைத் தருவனவாம். எல்லா நதி களும் உள்ள இடத்தில் சென்று நீராடுதல் என்பது மிகுந்த அரியசெயலாம். நதிகள் யாவும் முடிவில் கடலில் சேர்வதால், அக்கடலில் நீராடுதல் எல்லாவற் றினும் மேலானது என்று கூறியருளுவாரானார்.

முனிவரது இச்செயலைக் கேட்ட காஞ்சனமாலை கடலாடுவதில் மிகுந்த விருப்பம் கொள்வாளாயினாள். தனது விருப்பத்தைத் தன் மகளாகிய தடாதகாதேவி யிடம் கூறுவாளாயினாள். தடாதகாதேவி தன் தாயின் இவ்வெண்ணத்தைத் தன்கணவராகிய இறைவர்முன் சென்று விண்ணப்பித்துக்கொண்டார். குண்டோதரர் பொருட்டு பண்டு அன்னக்குழியையும் வைகையையும் அழைத்து அருள்செய்த பெருமான், தன் தேவியின் வேண்டுகோட்கு இணங்கி, ஏழுகடலையும் மதுரைக்கு எழுந்தருளுமாறு திருவுளங்கொண்டருளினார். உடன் ஏழுகடல்களும் கோயிலின் கீழ்பாலுள்ள ஒரு குளத் திலே ஏழு வண்ணங்களோடும் வந்து சேர்ந்தன.

## 10. மலயத்துவசனையழைத்த படலம்

---

சௌந்தர பாண்டியர் பின்னர்த் தடாதகைப் பிராட்டியாரோடும் ஏழுகடலும் வந்து நிறைந்துள்ள குளத்தின் கரையை அடைந்தார். அக்குளக் கரையில் அழகிய நந்தவனம் ஒன்று உண்டு. அந்நந்தவனத்தின் அழகினையெல்லாம் கண்டு களித்தபின்னர், தேவியை நோக்கிப் பின்வருமாறு கூறலானர்.

நாம் உன்னுடைய வேண்டுகோட்கிணங்கி ஏழு கடல்களையும் இந்நகரத்துள் அழைத்தோம். நீ உடன் உன் தாயிடம் சென்று அவர்களை இங்கு அழைத்து வா என்று கூறினர். வந்து இத்தீர்த்தத்துள் முழுகச் சொல் என்றும் கூறினர். பிராட்டியும் இறைவன் உரையைச் சிரமேற்கொண்டு தன் தாயாகிய காஞ்சன மாலையை அழைத்துக்கொண்டு அக்குளக்கரையினை அடைந்தாள்.

காஞ்சனமாலை அறிவுடைய பல பெரியோர்களை அழைத்து, கடலாடும் முறையினைக் கூறுமாறு வினவினள். தருமநூல் முறையினை நன்குணர்ந்த பெரியோர்கள் பின்வருமாறு கூறலானர்கள். கடலாடும் பொழுது கணவனுடைய கை, புத்திரனுடைய கை, பசுவின் கன்றினுடைய வால் என்னும் இவைகளுள் ஒன்றினைப் பற்றிக்கொண்டு நீராடுதலே முறைமையாம் என்று கூறினர்கள்.

இக்கூற்றினைக் கேட்ட காஞ்சனமாலை தன்மகளை நோக்கி, முன்னைத்தவம் எனக்கின்மையால் கணவனும்

புத்திரனும் இல்லாது அனுதையாக ஆயினேன். இனி நான் பெறுவது பசுவின் கன்றல்லது வேறு எதுவும் உண்டோ? ஆகவே கன்றின்வாலைப் பற்றிக்கொண்டு நீராடுகின்றேன் என்று கூறினுள். தாயின் குறையினை அறிந்த தேவியார் இறைவன்முன் சென்று விண்ணப்பித்தார். உடனே பெருமானுர் சுவர்க்கத்திலே திவ்விய ஆசனத்தில் இந்திரனுக்கருகில் வீற்றிருக்கும் மலயத்துவச பாண்டியன்பால் திருவுளம்பற்றினுர்.

மலயத்துவச பாண்டியன் இறைவன் திருவுளக் குறிப்பை உணர்ந்தான். இந்திரனுடைய திவ்விய ஆசனத்தைக் கைவிட்டான். ஒரு விமானத்தில் ஏறி ஏழு கடல்களும் ஒன்ருக நிறைந்து விளங்குகின்ற அக்குளத்தின் கரையை அடைந்தான். மனம் வாக்கு ஆகியவைகட்கு எட்டாத பழமையான பரம்பொருளைக் கண்பெற்ற பேறு இதுவென்னும் முறையில் கண்டான். கண்டவுடன் அவரது இணையடிகளை வணங்க எண்ணங்கொண்டான். பாண்டிய மன்னன் வணங்குதற்கு முன்னரே அவர் தம் மாமன் என்னும் முறைபற்றி, கைகளாலமைத்து எதிர்சென்று தழுவிக் கொண்டார். உடன் மனைவியோடு சேர்ந்து அத்தீர்த்தத்துள் நீராடுமாறு குறிப்பித்தார்.

பாண்டியன் தான் செய்த முன்னைத் தவப்பெரும் நிலையினுலே மகளாகப் பெற்ற தடாதகைப் பிராட்டியாரை முன்னர்த் தழுவிக்கொண்டான். தடாதகைப் பிராட்டியும் எதிர்வந்து தழுவிக்கொண்டாள். அந்த நிலையில் பாண்டியன் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. பிராட்டியாரின் மணவினை கண்டு மகிழாத குறையை இம்மகிழ்வாகிய தேனையுண்டு மறந்தான்.

காஞ்சனமாலை நாணத்தை மேற்கொண்டு தனது கணவனெதிரே நின்றாள்; முறைப்படி கணவனை வணங்கினாள். பின்னர் அறிவாளரைக்கொண்டு செய்யவேண்டிய நியமங்களைச்செய்து, கணவனாகிய மலயத்துவசன் கையைப் பற்றிக்கொண்டு கடலில் ஆடினாள்.

கணவனும் மனைவியும் கடலாடிக் கரையேறினார்கள். கரையேறியவுடன் இறைவன் திருவருளால் இருவரும் அவ்விறைவருடைய திருவுருவத்தைப் பெற்று விளங்கினார்கள். உடனே சிவலோகத்தினின்றும் தேவ விமானம் ஒன்று கீழிறங்கிவந்தது. காஞ்சனமாலையும், அவரது கணவராகிய பாண்டியரும் இறைவன் திருவருளால் அந்த விமானத்தின் மேலேறித் தேவர்கள் மலர்மாரி சொரிய, தேவ வாத்தியங்கள் பேரொலி செய்ய, அடியார்கள் அனைவரும் அரகர என்று முழங்க, சுந்தரேசுரர் திருக்கோயிலை அணுகினார்கள். தங்கள் மருமகனாகிய சுந்தரபாண்டியரும் மகளாகிய தடாதகைப் பிராட்டியாரும் அக்கோயிலுள் வீற்றிருக்கக் கண்டு, என்னதவம் செய்தோம் இவர்களை இம்முறையில் நாம் அடைய என்று இறும்பூதெய்தலானார்கள்.

பின்னர், சிவபெருமான் திருவடிகளில் ஒன்றிய அன்பு இவர்களை ஈர்க்கத் தொடங்கிற்று. தங்கள் தங்களுடைய இரண்டு கண்களும் அடிக்கடி திரும்பிப் பார்க்க, தங்கட்கென்று வந்துள்ள விமானத்தில் ஏறி விண்வழியே செல்லலானார்கள். அவ்வாறு சென்றவர்கள் புவர்லோகத்தையும், சுவர்லோகத்தையும், மகர்லோகத்தையும், சனலோகத்தையும், தபோலோகத்தையும், சத்தியலோகத்தையும், வைகுண்டலோகத்தையும் கடந்து சிவலோகமடைந்து இன்புற்றிருந்தார்கள்.

அதன்மேல் தடாதகைப் பிராட்டியார் சௌந்தர பாண்டியருடைய இணையடிகளை வணங்கித் துதித்தார். துதித்தவர் இறைவனுடைய பெருங்கருணையை எண்ணிக் கூறுவாரானார். பெருமானே! என்னுடைய தாய் வேண்டியது ஒரு கடல்; தாங்களோ என்பொருட்டு ஏழுகடலையும் இங்கே அழைத்து அருள்செய்தீர்; அன்றியும் என் தாயின்பொருட்டுத் தேவலோகத்திலிருந்த என் தந்தையையும் அழைத்தருளினீர்; அவ்விருவரும் உம்முடைய திருவருளினால் சிவ சொரூபத்தினையும் அடைந்துவிட்டார்கள்; இப்பாண்டியகுலம் அழிந்து விட்டதென்று பிறர் கூறுவகை முடிசூடிக்கொண்டு அரசாளுகின்றீர்போலும் என்று கூறினார். இந்நிலைக்கு இனி ஊறு உண்டாகாதல்லவா என்று விண்ணப்பஞ் செய்தாள். இறைவரும் தன் நாயகியின் உட்கோளைத் திருவுளங்கொண்டு மகிழ்வுடன் இருப்பாரானார்.

# 11. உக்கிரகுமாரபாண்டியன் திருவவதாரப் படலம்

சோமசுந்தரக்கடவுள் தனக்கியல்பாயுள்ள கருணை யினால் பாண்டியநாட்டை நெறிமுறை பிறழாது செங் கோல் செலுத்தி வருவாராயினர். தன்னைப் பிரமனும், திருமாலும், வேதம் முதலிய கலைகளும் காணமுடி யாமல் துன்புறுகின்றன என்னும் நிலைமையினை நன்கு உணர்பவர். இருப்பினும் அன்பர்கட்கு எந்நிலையிலும் மிக எளிமையுடையவராகவே விளங்குவாராயினர். அக்காரணத்தால் உலகுபுரக்கும் உமையைப் பாண் டியனுக்கு மகளாகத் தோன்றுமாறு திருவருள் பாலித் தார். அதற்கேற்பத் தானும் அப்பாண்டியனுக்கு மருக ராக ஆகி பாண்டியநாட்டின் அரசாட்சியினை ஏற்றும் நடத்தினர். அக்காரணத்தால் மூவேந்தர்களுள்ளும் பாண்டியர் குடியே பழம் பெருஞ்சிறப்பினை உடைய தாக இருந்தது. மேலும் அக்குடிக்கு வரற்பாலதாகிய குறையை ஒழிப்பான்வேண்டி, உலகிலுள்ள எல்லாப் பொருள்களையும் கருவுறாமலே பெற்றருளிய அன்னை யாகிய தேவியாரிடத்தே தமது நெற்றிக் கண்ணினின் றும் தோன்றிய முருகக்கடவுள் தோன்றும்வண்ணம் திருவுளம் பற்றுவாராயினர். அப்பெருங்கருணைக்கு ஏற்பத் தடாதகைப் பிராட்டியாரும் கருப்பங்கொண் டவள்போலாயினர்.

சோமவாரமும் திருவாதிரை நட்சத்திரமும் கூடிய நன்னாளிலே குரு கேந்திரமடைந்திருப்பச் சுப வேளை யில் தேவர்கள் முனிவர்கள் மண்ணுலகோர் ஆகிய

அனைவரும் பெருமகிழ்வுற அருட்கடலாகிய முருகப் பெருமான் தேவியாரிடத்தே திருவவதாரஞ்செய்தருளி னார். உடனே பிராட்டியார் அக்குழந்தையை எடுத்துத் தழுவி உச்சிமோந்தார்; பின் தன் நாயகரது கையிலே கொடுத்தார்; நாயகர் கொடுக்க வாங்கி, தன் முலையி னின்றும் சொரிகின்ற பாலினை ஊட்டினார். முனிவர் கள் தேவர்கள் ஆகிய அனைவரும் பாண்டியனது அரண் மனையை அடைந்து குழந்தையைக் கண்டு வாழ்த்திச் சென்றார்கள். சௌந்தரபாண்டியர் தன் குழந்தைக்கு, சாதகர்மம் முதலியவற்றைச் செய்தருளினார். பின்னால் இக்குழந்தை ஆற்ற இருக்கும் வீரத்தினை யெண்ணி உக்கிரவருமன் என்று பெயர் சூட்டலானார்கள்.

பின்பு, அக்குழந்தைக்கு உரியகாலங்களில் செய்ய வேண்டிய கடன்களைச் செவ்வனே செய்யலானார்கள். தேவகுருவாகிய வியாழபகவானைக் கொண்டு வேதம் முதலிய கலைகளையும், படைக்கலப் பயிற்சியையும் உக்கிரவருமருக்குக் கற்பிப்பாரானார். உக்கிரவருமரோ குருவழியாக அறியவேண்டிய முறையில் ஒருமுறை கேட்டவுடனே எல்லாக் கலைகளிலும் வல்லவரானார். பாசுபதாஸ்திரம் செலுத்தும் பயிற்சியை வேறு ஒரு வரும் சொல்லிக்கொடுக்க இயலாமையால் இறைவ னிடத்தே அக்கலையினைத் தெரிந்துகொண்டார். எட்டு வயதுக்குள் எல்லாக் கலைகளிலும் வல்லமைபெற்றார். உக்கிரவருமருக்குப் பதினாறாண்டுகள்நிரம்பின. சௌந் தரபாண்டியர் தன்மகனின் அங்க இலக்கண அமைப் புக்களை நன்கறிந்து அவன் நாடாளும் சிறப்பினைப் பின்பு காண்போம்; முன்னர் அவனுக்கு மணவினை செய்து மகிழவேண்டுமென்று எண்ணலானார்.

## 12. உக்கிரகுமாரனுக்கு வேல் வளை செண்டு கொடுத்த படலம்

சௌந்தரபாண்டியர் தம்முடைய அன்புக்குரிய மகனாகிய உக்கிரவருமருக்கு மணம்முடிக்க எண்ணும் திறத்தினை அமைச்சர்கள் அறியலானார்கள். அறிந்த அமைச்சர்கள் அறிவாளர்களை அழைத்து, அவர்களோடுங்கூடி ஆலோசிக்கலானார்கள். செல்வம், புகழ், குலம் இவற்றால்சிறந்து, வடபுலத்து மணவூர் என்னும் நகரத்துக்கு அரசராக விளங்கும் சோமசேகரனுடைய புதல்வியாகிய காந்திமதியை மணம் பேசி முடிக்கலாம் என்று எண்ணலானார்கள்.

அன்று இரவே பெருமான் சோமசேகர அரசனின் கனவிலே தோன்றி, 'மன்னனே! நாம் மதுரையில் எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமான். நீ உன் புதல்வியாகிய காந்திமதியை மதுரையில் கொண்டுபோய், சுந்தரபாண்டியன் குமாரனாகிய உக்கிரவருமனுக்கு மணஞ்செய்து கொடுப்பாயாக' என்று பணித்தருளினார். சோமசேகர மகாராஜா அகமும் முகமும் மலர்ந்து, கைகளிரண்டும் தலைமேற்குவிய, கண் விழித்தெழுந்து, இறைவனது பெருங்கருணையை எண்ணி இன்புறுவாரானார். வைகறைப் போதில் துயிலெழுந்தார். நித்திய கருமங்களை நியமமாக முடித்தார். தன் செல்வியைச் சேடியர்கள்சூழத் தேர்மேலேற்றினார். மந்திரிகளும் நால்வகைச் சேனைகளும் தன்னைப் புடைசூழ்ந்துவர, திருமணத்திற்கு வேண்டிய பொருள்களோடு மதுரை நோக்கி வழிநடக்கலானார்.

முன்னுள் எண்ணியவாறு மந்திரிகள் பாண்டிய னுடைய உறவினரோடு மணவூரை நோக்கி மணம் பேசச் செல்லலானார்கள். இடைவழியில் சோமசேகர அரசரைக் கண்டார்கள். உடன் எங்கள் அரசகுமார னுக்கு உன் மகளை மணஞ்செய்து கொடுப்பாயாக என்று கூறினார்கள். மந்திரிகளின் கூற்றைக் கேட்ட அரசன் தனக்கு இறைவன் கனவிடைக் கூறியதைச் சொல்லி மணத்திற்கு உடன்பட்டான். அக்கூற்றைக் கேட்ட மந்திரிகள் மனம் மிக மகிழ்ந்து, நடந்த நிகழ்ச் சியைப் பாண்டியனுக்கு அறிவுறுத்துமாறு தூதனை முன்னே அனுப்பினார்கள். பின்னர் மந்திரிகள் சோம சேகரனோடு மதுரையை அடைந்தார்கள். பாண்டிய னும் சோமசேகரனும் ஒருவரை ஒருவர் அறிந்து தழு விக்கொண்டார்கள். பாண்டியன் ஆசனங்கொடுக்க அவ்வரசரும் அதில் அமர்ந்தார்.

பின்னர் மந்திரிகள் மணம் நடக்கும் நாள் இன்ன தென்று நிச்சயித்துக் கொண்டார்கள். எல்லாநாட்டு அரசர்களுக்கும் முறைப்படி திருமணவோலை எழுதி அனுப்பினார்கள். நகரில் மணமுரசு அறைந்தார்கள். மணமுரசு கேட்ட நகரினர் நகரத்தை அலங்கரித் தார்கள். தேவர்கள் முனிவர்கள் ஆகிய அனைவரும் மதுரையை அடைந்து பாண்டியரையும் தடாதகைப் பிராட்டியாரையும் வணங்கலானார்கள். பாண்டியர் அவரவர்களுக்கு ஏற்ற வரிசையினை நல்கியருளினார். சோமசேகரனுடைய மகளாகிய காந்திமதியினுடைய அவயவங்களின் இலக்கணங்கள் அனைத்தையும் குரு பகவான் நூல்வழியாய்ந்து, அங்குள்ள அனைவருக்கும் தெரிவித்தார். அவற்றைக்கேட்டு அனைவரும் மனமிக மகிழ்ந்தார்கள்.

பின், உக்கிரகுமாரர் திருமஞ்சனமாடி, திருமணக் கோலம் கொள்ளுவாரானுர். மங்கள வாத்தியங்கள் எல்லாம் முழங்கின. ஓர் ஆசனத்தில் உக்கிரகுமாரனை அமரச்செய்தார்கள். தோழிகள் எல்லாம் காந்திமதியை முறைப்படி நீராட்டி மணக்கோலஞ்செய்து அழைத்து வந்து உக்கிரகுமாரனுக்கு வலப்பக்கத்திலே இருக்கச் செய்தார்கள். அவ்வமயம் சோமசேகர மன்னன் உக் கிரகுமாரரையும் காந்திமதியையும், சிவபெருமானும் பார்வதிதேவியுமாக நினைத்து, தன்னுடைய மனையாள் கைகளால் நீர் சொரிய உக்கிரகுமாரருடைய இரண்டு திருவடிகளையும் விளக்கினுர்; மலர்மாலை சூட்டினுர்; இனிய பொருள்களை ஊட்டினுர். வேத மந்திரங்க ளெல்லாம் முழங்கின. பின்னர், சோமசேகரன் தன் பெண்ணுகிய காந்திமதியின் கையை உக்கிரகுமாரர் கையில் வைத்து, 'சூரியகுலத்து அரசனுகிய சோம சேகரன் என்னும் பெயருடைய யான், சந்திரகுலத்துச் சுந்தர பாண்டியருடைய குமாரர் உக்கிரவருமருக்கு என் மகளைக் கொடுத்தேன்' என்று கூறி நீர்விட்டுத் தாரை வார்த்தான். உடன் மங்கள வாத்தியங்களெல் லாம் முழங்கின. உக்கிரகுமாரர் திருமங்கலியதாரணஞ் செய்து திருமணச்சடங்குகள் யாவற்றையும் முடிப்பா ரானுர். சுந்தரபாண்டியரோ திருமணத்திற்கு வந்தார் அனைவர்க்கும் உரிய பரிசில்களைநல்கி விடைகொடுத்து அனுப்பினுர்.

மணவினை இனிது நடந்த சிலநாட்களுக்குப்பின் சுந்தரபாண்டியர் தன்மகன் உக்கிரகுமாரனை நோக்கிச் சில அறவுரைகள் பகர்வாரானுர். செல்வனே! உனக்கு இந்திரனும் வருணனும் பகைவர்களாவர். மேருமலை கர்வம் அடையும். ஆகையால் இந்திரனுடைய முடி

சிதறும்படி இந்த வளையை அவன்மேல் எறி; கடல் வற்றிப்போகும்வண்ணம் இந்த வேலை விடு; இந்தச் செண்டைக்கொண்டு மேருமலையின் செருக்கு அழியும் வண்ணம் அதனை அடி என்று சொல்லி அம்மூன்று படைக்கலங்களைக் கொடுத்தருளினர். உக்கிரகுமாரர் மூன்றுபடைகளையும் தொழுது வாங்கிக்கொண்டார். உடனே சுந்தரபாண்டியர் முறைப்படி உக்கிரகுமார ருக்கு முடிசூட்டி அரசுரிமையை வழங்கினர். பின்னர் அம்மையும் அப்பனுமாகிய இறைவியும் இறைவனும் தங்கள் குழந்தையை வாழ்த்தித் திருக்கோயிலுக்குச் சென்று எழுந்தருளியிருந்தார்கள். உக்கிரகுமாரர் அற நூல் விதித்தவாறு அரசியற்றிவருவாராயினர்.

## 13. கடல்சுவற வேல்விட்ட படலம்

உக்கிரகுமார பாண்டியர், நிலவுலகெல்லாம் தன் புகழ்விளங்க, பாண்டியநாட்டைச் சிறப்புறமுறையில் ஆண்டு வருவாராயினர். வேதம் வல்லாரைக்கொண்டு வேள்விகள் பல செய்தார். வேள்விகளுள் சிறந்தது அசுவமேதவேள்வி என்று எண்ணி, தொண்ணூற்று வேள்விவரை செய்து முடித்தார். இப்பாண்டியன் செயலை அறிந்த இந்திரன் அவர்மேல் மிக்க பொறாமை கொண்டான். உடன் வருணனை அழைத்தான். பாண்டியநாடு பொன்னுலகம் போல் வளம்பல பெற்று விளங்குகின்றது; அதனால் பாண்டியன் யாகம் பல செய்கின்றான்; ஆதலின் நீ ஊழிக்காலத்து உலகங்களை அழிக்கும் கடல்போல உருத்துச்சென்று மதுரையை அழித்துவிடு என்று கூறினன்.

இந்திரனின் கூற்றைக்கேட்ட வருணன் தனக்கு மேல்நிகழவிருக்கும் விளைவினைக் கருதிப்பார்க்கவில்லை. சிறுமதியால் அவன் கூறியவாறே செய்யத்துணிந்தான். நடு இரவில் கடலானது பொங்கி அண்டமும் அழிந்து போகுமோ என்னும்நிலையில் மதுரைநகரின் கிழக்கு எல்லையை அடைந்தது. உடன் சோமசுந்தரக்கடவுள் உக்கிரகுமாரபாண்டியர் கனவில் தோன்றி, பாண்டியனே! கடலானது இந்த மதுரைநகரத்தை அழிக்கும் பொருட்டு நெருங்கி வருகின்றது; நீ உடன் எழுந்து சென்று, உனது வேற்படையை விடுத்துக் கடலின் ஆணவத்தை அடக்கி வெற்றி பெறுவாயாக என்று அருள்செய்வாராயினர்.

உடனே உக்கிரகுமாரபாண்டியர் நித்திரையினின்
றும் எழுந்தார். கைகளிரண்டும் தலைமேற்குவிய தோத்
திரங்கூறித் துதி செய்தார். வாயில்கள் பலவற்றையும்
மந்திரிகளோடு கடந்து விரைந்து செல்வாராயினர்.
கடலின் பேரொலியினைக் கண்டு வியப்படைந்தார்.
அவ்வமயம் கனவிடை வந்த சித்தர் நனவிலும் வந்து,
அன்பனே! நீ ஏன் காலந்தாழ்த்து நிற்கின்ருய்? கடல்
வடிவாக வருபவன் உன் பகைவன்; உடனே உனது
வேற்படையைச் செலுத்தி அப்பகைவனின் வலியினைக்
கெடுத்துவிடு; அச்செயலால் பூவுலகம் காக்கப்படும்
என்று கூறினர்.

சித்தரின் கூற்றைக் கேட்டவுடன் உக்கிரகுமார
பாண்டியன் வேற்படையை வலமாகச் சுழற்றி எறிந்
தான். வேற்படை புகுந்தவுடனே கடல் அடியோடு
வற்றத் தொடங்கியது. அப்பொழுது அந்தக் கடல்
பாண்டியனது கால் அளவினதாயிற்று. அந்நிலையே
எதிரே நின்ற அந்தச் சித்தர் விண்ணிடை உமையோடு
இடபவாகனத்தில் காட்சி கொடுப்பாராஞர். உக்கிர
பாண்டியர் இறைவனையும் இறைவியையும் கண்ட
வுடன் அடியற்ற மரம்போல் கீழ்விழ்ந்து பின் எழுந்து
நடக்கலாஞர். இறைவியோடு இறைவன் தமது திருக்
கோயிலினுள் புகுந்து இருப்பாராயினர். உக்கிரகுமார
பாண்டியரும் ஆலயஞ்சென்று இறைவனை வணங்கித்
தன் திருமாளிகையினையடைந்து நெறிவழுவாது அரசு
செலுத்தி வருவாராயினர்.

## 14. இந்திரன்முடிமேல் வளையெறிந்த படலம்

சேர சோழ பாண்டியநாடுகளில் கிரகநிலைமாற்றத்தால் உக்கிரகுமாரபாண்டியர்காலத்தில் மழை இன்றி வறண்டது. அதுகாரணமாகத் தமிழ்நாட்டில் பஞ்சம் தோன்றலாயிற்று. இந்த நிலையைக்கண்ட மூவேந்தர்களும் பொதியமலையையடைந்து அகத்தியமுனிவரிடம் குறையிரக்கலானார்கள்; அவரிடம் தமிழ்நாடு மழையின்றி மக்கள் துன்புறுவதையும் எடுத்துக் கூறினார்கள். மன்னர்களது கூற்றினைக்கேட்ட அகத்தியர் கிரகநிலையை ஆராய்ந்து, மூவேந்தர்களையும் நோக்கிப் பின் வருமாறு கூறலானார்.

மன்னர்களே! நீங்களனைவரும் பெருவேந்தர்கள். இப்பொழுதுள்ள கிரகநிலையை உங்கட்குக் கூறுகின்றேன். சூரியன் செவ்வாய்க்குமுன் செல்லுகின்றான். சுக்கிரன் அவன்பின் செல்கின்றான். இக்காரணத்தால் இவ்வுலகிடை பன்னிரண்டாண்டுகாலம் மழை பெய்யாதுபோகும். ஆதலின் நீங்கள் மழைக்கதிபதியாகிய இந்திரனிடம் சென்று கேளுங்கள் என்று கூறினார். அதனைக்கேட்ட வேந்தர் மூவரும் அகத்தியமுனிவரை நோக்கி, நாங்கள் எவ்வாறு விண்ணுலகத்தில் உள்ள இந்திரனிடம் செல்வதென்று கேட்டார்கள். அதற்கு அகத்தியர், சோமவார விரதம் மிகச்சிறப்புடையது; அவ்விரதத்தை நீங்கள் மேற்கொண்டு இறைவனுடைய அருளைப்பெற்று விண்வழியே சென்று அடையுங்கள் என்று கூறினார்.

உடனே அகத்தியர் மூவேந்தர் வேண்டுகோட்கு இணங்கி, சோமவாரவிரதம் மேற்கொள்ளும் முறையைக் கூறுவாரானுர். உத்தமருள் உத்தமர் இறைவர். உத்தமிகட்குள் உத்தமி சிவசத்தியாகிய உமை. விரதங்கள் பலவற்றுள் மிக உத்தமமாகிய விரதம் சோமவார விரதம். இவ்விரதத்தை வேதம் முதலாய நூல்கள் எல்லாம் சிறப்பித்துக்கூறும். இவ்விரதத்தைக் காசி கயிலாயம் முதலாய இடங்களிலிருந்து நோற்பதனுல் உண்டாகும் பயனைக்காட்டிலும், மதுரையில் இருந்து நோற்றலால் கோடிமடங்கு பயன் அதிகமாகக் கிடைக்கும். சோமர் என்னும் பெயரே இறைவன் இறைவியோடு கூடியிருப்பதைக் குறிக்கும். மேலும் அமாவாசையோடுகூடிய சோமவாரம் மிகுந்த சிறப்புடையதென்று நூல்கள் கூறும். நீதிநெறியோடு இவ்விரதத்தினை மேற்கொள்வோர் அடையும் பயன் அளவிடற்கு அரியதாம்.

பின்னர் சோமவார விரதமிருக்கும் முறையையும் கூறியருளினுர். கார்த்திகை அல்லது மார்கழி அல்லது மலமாசம் ஒழிந்த மாசங்கள் ஆகிய இவற்றில் முதற் சோமவாரம் தொடங்கி விரதம் மேற்கொண்டிருத்தல் வேண்டும். சோமவார முதல்நாளாகிய ஞாயிற்றுக் கிழமை இரவில் உணவின்றியிருந்து நிலத்தில் உறங்க வேண்டும். வைகறையில் துயிலெழவேண்டும். பின்பு நித்திய கருமங்களை முடித்து இறைவனையும் இறைவியையும் வழிபடவேண்டும். வழிபட்ட பின்னர், பொற்ருமரையை அடைந்து, திருநீறு, வில்வத்தடிமண், தெர்ப்பை, கோமயம், எள் ஆகிய இவற்றைச் சிரசில் வைத்து, கையில் பவித்திரந்தரித்து, மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றும் ஒன்றுபட்ட நிலையுடையராய்

நீராடவேண்டும். பின்னர்த் தோய்ந்து உலர்ந்த தூய வெண்ணிற உடையை உடுத்திக்கொள்ளவேண்டும். அதன்பின்னர், சிவசின்னங்களாகிய விபூதி உருத்திராக்கம் இவைகளை அணியவேண்டும். பிறகு சோம சுந்தரக் கடவுளை வெள்ளைமந்தாரம், முல்லை, மல்லிகை, இருவாட்சி, வெள்ளெருக்கு, வெண்டாமரை ஆகிய வெண்மலர்களாலும், வில்வத்தாலும், அறுகினாலும் அட்சதையாலும், எள்ளினாலும் ஐந்தெழுத்தோதிக் கொண்டு பூசனை பண்ணுதல்வேண்டும்.

இறைவனுடைய மந்திரங்கள் யாவற்றினுள்ளும் பஞ்சாக்கரம் உயர்ந்தது. பத்திர புட்பங்கள் அனைத்தினும் வில்வம் உயர்ந்தது. ஆகையால் இவ்விரண்டினாலும் இறைவனைப் பூசித்தல் விசேடமாம். வில்வதளம் இறைவனுடைய இச்சா ஞானக் கிரியை வடிவாயுள்ளது. வில்வத்தை அன்றுடம் எடுத்து அருச்சிப்பதே சிறந்தது. வில்வமரத்தைத் தரிசித்து வலஞ்செய்து வணங்கின், இரவிலும் பகலிலும் செய்த பாபம்போம். வில்வமூலத்தை அடைந்து மூன்றுநாள் ஊணும் உறக்கமும் இன்றி அரகரமுழக்கம் செய்பவர் ஐந்து மகா பாதகங்களினின்றும் விடுபடுவர். முடிவு காலத்திலே வில்வத்தடிமண்ணை உடம்பிடை பூசிக்கொண்டவர் சிவகதியை அடைவர்.

இறைவனைப் பூசிப்போர் கை கால் சுத்திசெய்து, விபூதி உருத்திராக்கம் தரித்து, முன்னர் விநாயகரை வழிபடவேண்டும். பின்னர் இறைவனது ஐந்து திருமுகங்களையும் பளிங்கு, பொன், கருநிறம், செந்நிறம், பால்நிறம் ஆகிய நிறமுடையனவாகத் தம்மனத்துட் கொண்டு வழிபடவேண்டும்.

பின் சிவலிங்கப்பெருமானை முறைப்படி ஆசன மூர்த்தத்திலே பூசைசெய்து, எண்ணெய், மாப்பொடி, மஞ்சற்பொடி, பஞ்சகவ்வியம், பஞ்சாமிருதம், நெய், பால், தயிர், தேன், சர்க்கரை, கருப்பஞ்சாறு, நாரத்தம் பழச்சாறு, எலுமிச்சை, தமரத்தம், குளஞ்சி, மாதுளம் ஆகிய பழத்தின் சாறுகள், வாழை, மா, பலா ஆகிய முப்பழங்கள், தேங்காய்த் துருவல், இளநீர், சந்தனக் குழம்பு, நவகடம் ஆகியவைகளால் இறைவனுக்குத் திருமுழுக்குச் செய்யவேண்டும். அதன்பின் ஆடை அணிவிக்கவேண்டும். பின் சந்தனம், கத்தூரி, வெண் பூக்கள் ஆகியவைகளை அணிவித்தல்வேண்டும்.

இறைவனையும் இறைவியையும் இம்முறையே திருமுழுக்குச்செய்தபிறகு பலவகை ஆபரணங்களைக் கொண்டு அலங்காரம்செய்யவேண்டும். அதன்பின்னர் பலவகையான அன்ன வகைகளும், நல்ல பழ வகை களும், முக வாசமும் முன்னர் வைத்துத் தூப தீபங் காட்டி வழிபடவேண்டும். இறைவன் திருநாமங்களைச் சொல்லி முறைப்படி வில்வ தளங்களால் அருச்சனை செய்யவேண்டும். இறுதியாக 'அடியேன் அறிந்தும் அறியாமலும் செய்த குற்றங்களைப் பொறுத்தருளுக' என்று விண்ணப்பஞ்செய்துகொள்ளவேண்டும். இம் முறைப்படி இறைவனை வழிபாடுசெய்து முடிவில் அவரிடம் வேண்டும் வரங்களைக் கேட்கவேண்டும்.

மேலேகூறியவாறு சோமவார விரதமிருப்பவர்கள் விவாகம், மக்கட்பேறு, நற்சொல், கல்வி, பொன், போகம், நோய்நீக்கம், நிறைந்த ஆயுள் ஆகியவைகளை இம்மையில்பெற்று மறுமையிலும் பேரானந்தப்பெரு வாழ்வினை அடைந்து வாழ்வார்கள் என்பதில் ஐயம்

இன்று. அன்றியும் சோமவாரநாளிலே சோமசுந்தரக் கடவுளுடைய சந்நிதியில் திருவலகிடுதல், திருமெழுக்கிடுதல், நெய்விளக்கேற்றல், மாவிளக்கிடுதல் ஆகிய சிவபுண்ணியங்களைச் செய்தவர்களும், பஞ்சகவ்வியம் தீர்த்தம் இவற்றை உட்கொண்டவர்களும் எல்லாப் பாவங்களினின்றும் விடுபடுவார்கள்.

இச்சோமவாரவிரதத்தை மேற்கொள்வோர் பின் கண்ட ஐந்துவகைகளைப் பின்பற்றுதல் நன்மை பயப்பதாகும். அவைகள் யாவையெனின், நடுப்பொழுதிலே மட்டும் உண்ணுதல், இரவிலே உண்ணுதல், உண்ணாமலேயிருத்தல், இரவில் உறக்கமின்றியிருத்தல், நான்கு யாமமும் சிவபூசை செய்தல் ஆகியவைகளாம். இந்த ஐந்து முறைகளும் ஒன்றுக்கொன்று மேலான பலனை அனுட்டிப்போர்க்கு அருளும்.

மேலே கூறிய ஐந்து வகைகளையும், சங்கற்பஞ் செய்துகொண்டே மேற்கொள்ளல் வேண்டும். முதல் வகையினை மேற்கொள்வோர் காலை நண்பகல் சந்தி முடித்துக்கொண்டு, சிவபூசை சிவவழிபாடு செய்து பகல் பதினைந்து நாழிகைக்குப்பின் அடியார்களுக்கு அமுதூட்டி உணவு உண்ணவேண்டும். இரண்டாம் முறையைப் பின்பற்றுவோர் காலை, நண்பகல், மாலை ஆகிய மூன்று கால சந்தியையும் முடித்துக்கொண்டு, சிவபூசை சிவவழிபாடு செய்து, அடியார்கட்கு அமுதூட்டி இரவில் உணவு கொள்ளவேண்டும். மூன்றாவது வகையில் விரதமிருப்போர், முறைப்படி மூன்று சந்தியும் செய்து, சிவபூசை சிவவழிபாடு ஆற்றி, உணவின்றி உறங்கி, மறுநாள் காலையில் இரண்டு சந்தியையும் முடித்துக்கொண்டு சிவ வழிபாட்டிற்குப் பின்னர்

அடியார்கட்கு அமுதூட்டி உணவு உண்ணவேண்டும். நான்காம் வகை விரதமிருப்போர் முறைப்படி மூன்று சந்தியும் செய்து, சிவவழிபாடு செய்து, ஊணும் உறக்கமும் நீத்து இருக்கவேண்டும். யாமந்தோறும் அந்தரியாகம் செய்தல் முறையாகும். மறுநாட் காலையில் இரண்டு சந்தியும் முடித்து, சிவவழிபாட்டிற்குப் பின் அடியார்களை அருத்தி, பின் உணவு உண்ணவேண்டும். இறுதியதான ஐந்தாம் வகைப்படி விரதமிருப்போர் மூன்று சந்தியும் முடித்துக்கொண்டு, சிவபூசை சிவதரிசனம் செய்யவேண்டும். ஊண் உறக்கம் இன்றி யாமந்தோறும் சிவபூசை செய்யவேண்டும். மறுநாள் சிவவழிபாடுசெய்து உணவு உண்ணுதல் முறையாம். பாரணம் பண்ணியபின் பகலில் உறங்குதல் கூடாது. சிவபுராணங்களைக் கேட்டிருத்தல் முறைமையாம்.

சோமவார விரதத்தை முறைப்படி மேற்கொள்வோர் ஓர் ஆண்டு, இரண்டு ஆண்டு, மூன்று ஆண்டு, பன்னிரண்டு ஆண்டு, ஆயுட் காலமுழுவதும் என்ற முறைகளைப் பின்பற்றலாம். எந்த முறையாயினும் விரதத்தொடக்கத்தில் சங்கற்பித்துக் கொள்ளவேண்டும். சங்கற்பகாலம் முடிந்தபின் விரதத்தை முறைப்படி முடிக்கவேண்டும். வாழ்நாள் முழுவதும் மேற்கொண்டிருப்போர் முடிவுசெய்யவேண்டுவது இல்லை. இடையில் விரதத்தை விடுபவரோ, முடிவு செய்யாதவரோ விரதபலனை அடையமாட்டார்கள்.

அகத்தியர் முனிவர்கட்கு விரதமுடிக்கும் முறையைப் பின்வருமாறு கூறுவாரானார். வெள்ளி, செம்பு இவற்றால் இறைவன் இறைவி பிரதிமைகள் செய்து கொள்ளவேண்டும். பிரதிமைகள் முறையே முப்பது,

இருபது, பத்து கழஞ்சுகளால் செய்யலாம். இறைவன் பிரதிமை ஒருமுகம், முக்கண், நான்குதோள், நான்கு கை, மான், மழு, அபய வரதங்கள், முடியில் சந்திரன் உடையதாக அமைய வேண்டும். இறைவி பிரதிமை ஒரு முகம், இரண்டு தோள் உடையதாக, வலக்கை மேலும், இடக்கை கீழுமாக அமையவேண்டும்.

பின் யாகமண்டபம், குண்ட மண்டல வேதிகை இவைகளை முறைப்படி ஆசானைக்கொண்டு அமைக்க வேண்டும். பானுவாரத்தில் ஒருபொழுது உண்டு விரத மிருக்கவேண்டும். தரையில் உறங்குவது உத்தமம். மறுநாள் சோமவாரத்தன்று காலையில் எழுந்து நித்திய கருமங்களை முடிக்கவேண்டும். அதன்பின் நண்பகல் தொடங்கி மாலைவரை சிவபுராணம் கேட்டல்வேண்டும். மாலை தொடங்கி நான்கு யாமமும் முறைப்படி இறைவனைப் பூசிக்கவேண்டும். ஆகுதிகளெல்லாம் கொடுத்தல் வேண்டும். வெள்ளைப்பசு, பாதரட்சை, விசிறி, குடை, ஆடை இவைகள் தானங்கொடுத்தல் வேண்டும். அதன்பின்னர், குருவை அவரது பத்தினியொடும் ஆசனத்திலிருத்தி இறைவன் இறைவியாக எண்ணி, புதிய ஆடை அணி முதலாயின கொடுத்து, மலரினாலே அருச்சிக்கவேண்டும். பின்னர் குரு ஆணை பெற்று அடியார்களோடு உணவு உண்ணவேண்டும்.

இந்த முறையில் தேவர்களும், முனிவர்களும் விரதத்தை அனுட்டித்துப் பயன் பெற்றார்கள். இவ்விரதத்தைக் கற்றவர்களும், கற்றவர் சொல்லக் கேட்டவர்களும் மனைவி மக்களோடும், உறவினர்களோடும் இனிது வாழ்ந்து முடிவில் அழிவில்லாப் பெரும்பதத்தினையும் அடைவார்கள்.

இம்முறையாக அகத்தியர் கூறக்கேட்ட தமிழ் நாட்டு மன்னர் மூவரும் விடைபெற்று, மதுரையை அடையலானுர்கள். பொற்ருமரைவ்ாவியில் நீராடினுர் கள். சோமசுந்தரக்கடவுளை வழிபட்டு முறைப்படி சோமவாரவிரதத்தை அனுட்டிக்கத்தொடங்கினுர்கள். அப்பெருஞ்சிறப்பினுல் மூவேந்தர்களும் இறைவன் அருள்பெற்று விண்ணிடைச்சென்று தேவலோகத்தை அடைந்தார்கள். இந்திரன் வரவேற்க, சேரனும் சோழ னும் இந்திரன் காட்டிய இருக்கையில் அமர்ந்தார்கள். உக்கிரகுமாரபாண்டியன் இந்திரனது சிங்காதனத்தில் ஏறி அவனேடு ஒருசேர அமர்ந்தான். இந்திரன் பாண் டியன்மேல் அழுக்காறு கொண்டான். சேர சோழ மன்னர்களைப் பார்த்து வந்தகாரணத்தை வினவினுன். அவர்கள் தங்கள் தங்கள் நாட்டில் மழையின்மையால் உன்பால் மழைபெறவேண்டி வந்தோம் என்ருர்கள். இந்திரன் அவ்விருவர் நாட்டிலும் மழை பெய்யுமாறு அருள்பாலித்து, வேண்டிய பொன்னுபரணங்களையும் அளித்து விடைகொடுத்து அனுப்பினுன்.

சேரனும் சோழனும் திரும்பியபின், பாண்டியன் யாதும் வேண்டாத பெருமிதத்தை இந்திரன் எண் ணினுன். உடன் சூழ்ச்சிசெய்ய எண்ணி, உடம்பை மெலிவிக்கும் ஒருமாலையைப் பாண்டிய மன்னனுக்கு அளித்தான். பாண்டியனே அம்மாலையைப் பூமாலை போலக் கழுத்தில் அணிந்துகொண்டான். இந்திரன் பாண்டியனின் அச்செயலைக்கண்டு அதிசயங்கொண்டு, இன்றுமுதல் உன்னை ஆரந்தாங்கு பாண்டியன் என்று உலகம் போற்றும் என்ருன். பாண்டியனே அதனைச் சிறிதும் மதியாது, அங்குநின்றும் போந்து மதுரையை அடைந்தான்.

பின்னர் இந்திரன் ஆணைப்படி சேரநாடும் சோழ நாடும் மழை பெய்யப்பெற்றுப் பெருவளம் பெற்றது. பாண்டியநாட்டில் மழை பெய்யாமல் துன்பம் அதிகரித்தது. பாண்டியன் ஒருசமயம் வேட்டையாடப் பொதியமலை நோக்கிச் சென்றான். அவ்வமயம் அங்கே புட்கலாவர்த்தம் முதலிய நான்கு மேகங்களும் அம்மலைமேல் இறங்கியிருப்பதைக் கண்டான். உடனே அம்மேகங்களைப் பற்றி விலங்கிட்டுச் சிறையிலடைத்தான். இச்செயலைக் கேட்டு இந்திரன் மிக்க கோபங்கொண்டவனாய், முன்னரே கடல் சுவற வேல்விட்டமையும், வலிய ஆரத்தைத் தாங்கினமையும், மேகங்களை விலங்கிட்டமையும் எண்ணி எண்ணி, இவன் இவ்வலிமைபெறக் காரணம் என்ன என்று எண்ணுவானானான். மானம் புறத்தே தள்ள, பாண்டியனுடன் போரிடும்பொருட்டுத் தேவர்களோடு மதுரைநகரை அடைந்து முற்றுகையிட்டான்.

இந்திரனது முற்றுகையைக் கண்ட ஒற்றர்கள் ஓடோடியும் சென்று பாண்டியருடைய திருவடிகளை வணங்கி, நகரைச் சூழ்ந்து தேவர்கள் முற்றுகைசெய்திருப்பதை விண்ணப்பம் செய்தார்கள். ஒற்றர்களது கூற்றைக் கேட்ட உக்கிரகுமாரபாண்டியர் பெருஞ்சீற்றம் கொண்டார். தன்னுடைய நால்வகைச்சேனைகளும் சூழ யானைமேற்கொண்டு சென்றார். தேவர்களுடைய சேனைகளையெல்லாம் பாண்டியனுடைய சேனை எதிர்த்துக் கொன்றது. பின்னர் இந்திரனும் பாண்டியனும் ஒருவரையொருவர் நேருக்கு நேராக எதிர்த்துப் பலவித அஸ்திரங்களை விடுத்தார்கள். முடிவாக இந்திரன் பாண்டியன்மீது குலிசத்தை வீசினான். உடனே பாண்டியன் தனது கையிலிருந்த வளையைச்

சுழற்றி விசினுன். அவ்வளையானது இந்திரனது குலி சத்தை விழ்த்தி அவனுடைய மகுடத்தையும் தள்ளிச் சிதைத்தது. இந்திரன் அஞ்சி ஓடினுன்; பாண்டியன் வீசிய வளை தன் தலையைச் சிதைக்காமல் முடியைச் சிதைத்தது இறைவன் திருவருளேயாம் என்று கருதி ஆறுதலடைவானுனன்.

போரில் தோற்ருேடிய இந்திரன் பாண்டியனுக்கு ஓலை போக்கினுன். பாண்டியநாடு முழுவதும் மழை வளம் சுரக்கச் செய்கிறேன்; என்னுடைய மேகங் களைச் சிறை விடுக என்று வேண்டுகோள் விடுத்தான். அவ்வேண்டுகோளைப் பாண்டியன் மதிக்கவில்லை. இந் நிலையறிந்த வேளாளன் ஒருவன் உறுதிகூற, என்றும் உண்மைக்கே உறைவிடமானவர் வேளாளராதலால் அவரதுசொல்லை ஏற்று மேகங்களைச் சிறையினின்று விடுவித்தான். பின்பு இந்திரன் ஏவலால் பாண்டியநாடு செழிக்க மாதம் மும்மாரி மழை பொழியலாயிற்று.

## 15. மேருவைச் செண்டாலடித்த படலம்

அகத்தியர் சொல்லியவண்ணம் அன்றுதொடங்கி உக்கிரகுமார பாண்டியர் சோமவார விரதத்தை அனுட்டித்துவரலானர். அதனல் அவர் மனைவியாகிய காந்திமதியின்பால் ஒரு நன்மகன் தோன்றலானன். உக்கிரகுமார பாண்டியர் மகனுக்கு வீரபாண்டியன் என்று பெயர் சூட்டினர். வேதம் முதலாய கலைகளும் படைக்கலப்பயிற்சியும் பயிற்றுவிக்கலானர். மீட்டும் கால வேறுபாட்டால் பாண்டியநாடு மழையின்றி, பசி பட்டினி இவற்றல் வருந்தலாயிற்று. உக்கிரகுமார பாண்டியர் கணிதம் வல்லோரை அழைத்து மழை இன்றி நாடு வரண்டதன் காரணத்தை வினவினர்.

கணிதர்கள் பாண்டியரை நோக்கி, அரசே! கிரகங்கள் யாவும் சூரியனைநோக்கி நிற்பதால் ஓர் ஆண்டு காலம் மழை பெய்யாது என்று கூறினர்கள். இவற்றைக்கேட்ட அரசர் இறைவர்முன் சென்று குறையிரக்கலானர். இறைவரும் காலத்தின் தன்மையறிந்து வாளாவிருந்தார், உக்கிரபாண்டியர் கரையற்ற துன்பக் கடலில் மூழ்கியவராய் அரண்மனையை அடைந்தார். கதிரோனும் மறைந்தான். பாண்டியர் அன்று இரவு துயரம் தாங்காத நிலையில் தரையில் படுத்து உறங்குவாரானர். இறைவன் பாண்டியர் கனவில் தோன்றி, 'இதுசமயம் மழைபெய்யாது; நீ வருந்துவதால் பயன் இல்லை; நீ உடன் மேருமலையை அடைந்து அதனைச் செண்டாலடித்து அதன் கர்வத்தை அடக்கு; பின்பு

பொன்னறையைப் பொதிந்துள்ள பாறையை நீக்கி நீ வேண்டும் பொன்னை எடுத்துக்கொள்; அவ்விடத்தில் உன் அடையாள முத்திரையையும் பொறித்துவருக' என்று கூறி மறைந்தார்.

இக்கனவினைக்கண்ட பாண்டியர் உடனே உறக்கத்தினின்றும் எழுந்தார். நித்தியகருமங்கள் முடித்து முறைப்படி சோமசுந்தரக்கடவுளை வழிபட்டார். நால் வகைச் சேனைகளும் சூழ, பலநாடுகளையும் கடந்து காசியை அடைந்தார். கங்கையில் முழுகினார். பின்னர் பலகாததூரம் போனார். மனிதர்களே செல்லாத இடங்களையெல்லாம் கடந்து செல்லலானார். இமயமலையில் உள்ள பல இடங்களையெல்லாம் கடந்து, முடிவில் மகாமேருமலையைக் கண்டார். கண்டவுடனே தம் சேனைகளைவிட்டுப் பிரிந்தார். மேருமலையை வலமாக வந்தார். தென்திசையில் வந்து நின்று அம்மலையை நோக்கினார். மலையரசே! நமது பிதாவாகிய இறைவனது வில்லே! தேவர்கட்கெல்லாம் ஆலயமே! என்று பலவாறு விளித்தார். அவ்வாறு விளித்த நிலையிலும் மகாமேருமலை வரவு தாழ்த்தது. உக்கிரபாண்டியர் கோபமேற்கொண்டு அதன் செருக்கு அடங்கும்படிச் செண்டினால் அடித்தார். அடித்ததும் அசையாத மேருமலையும் அசைந்து கொடுத்தது; பந்துபோலத் துடித்தது. அம்மலையின் கொடுமுடிகளும் ஆங்காங்கு தங்கியிருக்கும் தேவர்களது ஆலயங்களும் ஆற்றாது வெடித்தன.

இவ்வாறு பாண்டியர் அடித்தபின்னர் மேருமலை பாண்டியர்முன் நாணிவந்து நின்றது. வருகையைக் கண்ட பாண்டியர் கோபந்தணியலானார். பருவதமே!

ஏன் நீ இதுகாறும் இங்கு வாராது காலந்தாழ்த்தனை என்று வினவினர். அரசே! அடியேன் நாள்தோறும் மீனுட்சியம்மையாரையும், சோமசுந்தரக் கடவுளையும் சென்று வழிபட்டுவருவது வழக்கம்; இன்று ஒரு பெண்ணிடம்கொண்ட காமத்தால் அக்கடப்பாட்டி னின்றும் வழுவினேன்; அது காரணமாக அடியும் பட்டேன்; நான் செய்யும் கைம்மாறு யாது? தாங்கள் இங்குவரக் காரணம் என்ன? என்று மகாமேருமலை கேட்கலாயிற்று.

மேருவின் கூற்றினைக்கேட்ட பாண்டியர் 'நான் பொன்னைவிரும்பி வந்துள்ளேன்' என்றனர். என்றலும் மேரு, அரசே! நீர் விரும்பிய பொன் அம்மாமரநிழலில் உள்ள அறையில் கிடக்கின்றது என்று கையினுல் சுட்டிக் காட்டிற்று. பாண்டியரும் அவ்வறையின் பக்கத்திலே சென்று, அந்த அறையை மூடியிருந்த பாறையை நீக்கி, தமக்குவேண்டிய அளவு பொன்னை வாரிக்கொண்டார். முன்போலவே அவ்வறையை மூடினர். தன் பெயரினையும் அடையாளத்தினையும் அதில் பொறித்தார். பின்னர் எல்லாத் தேசங்களையும் கடந்து பாண்டிய நாட்டை அடைந்தார். மதுரை நகரத்தையும் நெருங்கினர்.

உக்கிரபாண்டியர் சோமசுந்தரக் கடவுளுடைய ஆலய கோபுரத்தைக் கண்டவுடனே விரைந்து தேரி னின்றும் கீழிறங்கினர். தரையில் விழுந்து பணிந்தார். மதுரை நகரிலுள்ள மக்கள் அனைவரும் எதிர்கொண்டு வரவேற்றனர்கள். மன்னர் வைகையாற்றைக் கடந்து நகரத்தை அடைந்தார். திருக்கோயிலை அடைந்து இறைவனை முறைப்படி வழிபட்டார். திருக்கோயிலை

வலம்வந்து அரண்மனையை அடைந்தார். மேருமலையிலிருந்து கொணர்ந்த பொன்னைக் குடிமக்கட்கெல்லாம் வாரி வழங்கினார். பலவகை அறங்களையும் செய்தார். இறைவனருளால் கோள்கள் எல்லாம் தன்னிலை மாற மழைபெய்தது. அதனால் நானில வளங்கள் பெருகின. இவ்வாறு பாண்டியநாட்டை முறையாக அரசாண்ட பாண்டியர் தம்முடைய குமாரராகிய வீரபாண்டியனுக்கு முடிசூட்டி, தமது ஆட்சியை அவனுக்கு அளித்து, இறைவனோடு இரண்டறக்கலந்தார்.

# 16. வேதத்துக்குப் பொருளருளிச்செய்த படலம்

உலகத்தோற்றமாகிய கிருதயுகத்திலே, இறைவனுடைய திருவாக்கினின்றும் பிரணவம் தோன்றலாயிற்று. பிரணவத்தினின்றும் வேதங்கள் நான்கும் தோன்றின. நைமிசாரணியத்திலுறைந்த கண்ணுவர், கருக்கர் முதலிய முனிவர்கள், அவ்வேதங்களை ஓதிப் பொருள் இன்னது என்று தெரியாது திகைத்தார்கள். அப்பொழுது அரபத்தரென்ற அந்தணர் ஒருவர் அங்கு வந்துசேர்ந்தார். அவரை முனிவர்கள் எல்லாம் எதிர்கொண்டு வழிபடலானார்கள். வழிபட்டு அழைத்து வந்து ஆசனத்தில் இருக்கச்செய்தார்கள். அரபத்தர் அம்முனிவர்களைப் பார்த்து, முனிவர்களே! நீங்கள் முகம் வாட்டமடைந்திருப்பதற்குக் காரணம் யாது? என்று வினவினார். முனிவர்கள், சுவாமி! எங்களுக்கு வேதங்களுக்குரிய பொருள் தெரியவில்லை; பொருள் உணர்த்தவல்ல ஆசான் இல்லாமல் அலமருகின்றோம் என்று விண்ணப்பித்தார்கள்.

முனிவர்கள் கூறியதைக் கேட்ட அரபத்தர், 'முனிவர்களே! வேதத்தின் பொருளை, அவ்வேதத்தை அருளிச்செய்த இறைவனால்தான் உணர்த்தமுடியும். வேறெவராலும் அதனை உணர்த்தமுடியாது. அவ்வாறு இறைவன் திருவுருக்கொண்டு வந்து அருள் செய்ய வேண்டுமாயின் தவஞ்செய்யவேண்டும். தவத்தாலன்றி வேறொன்றானும் இக்காரியம் கைகூடாது. தவமும் புண்ணியமுடையார்க்கே கிட்டும். அப்புண்ணியத்தினை

அடையத் தலங்கட்குச் செல்லவேண்டும். புண்ணியத் தலங்களினுள்ளும் சிவதலங்களே தவம் செய்வதற்கு ஏற்ற தலங்களாகும். அச்சிவதலங்களுள்ளும் மிகச் சிறப்புடைய ஒரு தலமே தவம் செய்வதற்கு ஏற்றதாக அமையும். அவ்வுத்தம சிவதலம் சீவன்முத்திபுரமாகிய மதுரையேயாம். மதுரையில் சோமசுந்தரப் பெருமானுக்குத் தென்புறமாக எழுந்தருளியிருக்கும் பரமாசாரியராகிய தட்சிணுமூர்த்தியே வேதத்தின் பொருளை உங்கட்கு உணர்த்தி அருள்செய்வார். ஆதலின் நீங்கள் அங்கே சென்று அவர் சந்நிதியில் தவம் செய்யுங்கள்' என்று அருளுவாராயினர்.

கண்ணுவர் முதலாய முனிவர்கள் அவ்வந்தணர் கூறியதைக் கேட்டு மகிழ்ந்தார்கள். அவரை வணங்கி அவருடன் மதுரையை அடைந்தார்கள். பொற்றாமரை வாவியில் நீராடினர்கள். சோமசுந்தரக் கடவுளையும் மீனட்சியம்மையையும் முறைப்படி வழிபட்டார்கள். பின் இறைவனது விமானத்தை வலமாகவந்து தென் பக்கத்தை அடைந்தார்கள். கல்லாலின் கீழேயுள்ள இறைவனை வழிபட்டுத் துதித்தார்கள். ஒரு கார்த்திகை பௌர்ணமி முதல் அடுத்த கார்த்திகை பௌர்ணமி வரையில் நாள்தோறும் தவருது வழிபட்டுக்கொண்டு வருவாரானர்கள்.

அந்நிலையில் பெருமானர் விபூதி உருத்திராக்கம் தரித்த திருமேனியோடு எதிரில் தோன்றி வேதத்தை உச்சரித்துக்கொண்டுள்ள நிலையில், முனிவர்களுக்குக் காட்சிகொடுப்பாராயினர். அதுகண்ட முனிவர்கள் அப்பரமாசாரியரை வணங்கித்துதிக்கலானர்கள். பேரானந்தப் பெருங்கடலில் முழுகலானர்கள். இறைவன்

அம்முனிவர்களுக்குக் கருணைபாலிக்கலானார். முனிவர்களே! நீவிர் வேண்டுவது யாது? என்று வினவினார்.

முனிவர்கள் பெருமானை வணங்கி, பெருமானே! அடியோங்களுக்கு எல்லா உலகத்தினரும் உய்யும் பொருட்டு, வேதங்களின் பொருளை இப்போது உபதேசித்து அருள்செய்யவேண்டும் என்று வேண்டிக் கொள்ளலானார்கள். பெருங்கருணைத் தடங்கடலாகிய பெருமானார், அம்முனிவர்களோடு இறைவனுடைய திருச்சந்நிதியை அடைந்து வேதங்கட்குரிய பொருளைப் பின்வருமாறு அருளிச்செய்வாராயினார்.

முனிவர்களே! வேதங்களின் பொருள் மிகவும் இரகசியமானது; போகத்தையும் வீட்டையும், கேட்டார்க்கு எளிதில் பயப்பது; அதன் பொருளை நாம் இப்பொழுது உங்கட்கு உபதேசிக்கிறோம் கேளுங்கள் என்று கூறுவாரானார்.

தானே தோன்றியதாய், உத்தம இலக்கணங்கள் அமையப்பெற்றதாய், அநாதி காரணமாய் விளங்கிக் கொண்டிருக்கின்ற இச்சிவலிங்கமே எல்லா வேதங்கட்குமுரிய பொருளாகும். ஒன்றாய், அத்துவிதமாய், சத்தியஞானானந்த பரிபூரணமாய், மிக்க ஒளியுள்ளதாய் உள்ளது அழிவில்லாத இவ்வழகிய இலிங்கமே என்று வேதாந்தங்கள் சொல்லுகின்றன. வேதமும் ஒன்றே. அதன் பொருளும் ஒன்றே. ஆனாலும் சாகைகளின் வேறுபாட்டினாலே வேதம் பலவகையான பேதத்தை அடைகின்றது. சோமசுந்தரக்கடவுளது மாயையினால் வேதப்பொருளும் பலவாக ஆயிற்று. சிவபெருமான் முன்பே பிரமனைப் படைத்து, தம்மிடத்தே தோன்றிய

வேதங்களெல்லாவற்றையும் அவரிடம் கொடுத்தருளினர். அதனல் மூன்று உலகங்களிலும் வேத அறிவு பரந்தது. ஒளிமயமாய்த் தோற்ற நடுவிறுதி இல்லாத தாய் விளங்கும் மகாலிங்கம் எதுவோ, அதுவே பரமாகாச சரீரமாகிய பிரமம் என்று கூறப்படும். அதுவே படைத்தல் முதலிய காரணத்திஞல் மூன்றுவகையினை உடையதாயிற்று. கிழ்ப்பாகத்தில் ஆன்மதத்துவமும், நடுப்பாகத்தில் வித்தியாதத்துவமும், நுனிப்பாகத்தில் சிவதத்துவமும் தோன்றின. பிரமா, விட்டுணு, உருத்திரர், சர்வ காரணேசுவரர் என்ற இவர்கள் முறையே தத்துவ அதிபர்கள் என்று வேதங்கள் சொல்லும்.

ஆன்ம தத்துவத்தில் அகாரமும், வித்தியா தத்துவத்தில் உகாரமும், சிவ தத்துவத்தில் மகாரமும், எல்லாத்தத்துவங்களிலும் விந்துவும் நாதமும் தோன்றின. இதனல் பிரணவத்தோற்றம் சொல்லப்பட்டது. பிரணவம் வியட்டி, சமட்டி என்று இரண்டு வகையாகக் கூறப்படும். வியட்டி சமட்டியில் பூர் முதலாய வகைகள் எழும் சிவனது ஆணையால் தோன்றின. அதன்பின்னர் ஆன்மாக்கள் விரும்பிய அனைத்தையும் தரும் காயத்திரி தோன்றிற்று. பின்னர் நான்குவேதங்களும் தோன்றலாயின. பின்னர் அவ்வேதங்கள் பல வகையான பேதங்களைப் பெற்று விளங்கலாயின.

பெருமானின் திருமுகத்தினின்று அகரம் முதலிய எழுத்துக்களும், காமிகம் முதலிய இருபத்தெட்டுச் சிவாகமங்களும் தோன்றின. மற்ருெரு முகமாகிய தற்புருடத்தினின்று இருபத்தொரு வேறுபாடுடைய இருக்குவேதம் தோன்றிற்று. அகோர முகத்தினின்று நூற்ருெரு வேறுபாடுடைய யசுர்வேதம் தோன்றிற்று.

வாமதேவ முகத்தினின்று ஆயிரம் வேறுபாடுடைய சாம வேதம் தோன்றிற்று. சத்தியோசாத முகத்தினின்று ஒன்பது வேறுபாடுடைய அதர்வ வேதம் தோன்றிற்று. தருமங்கள் யாகங்கள் யாவும் வேதங்களில் கூறப்பட்டுள்ள முறைப்படியே நடைபெற்று வருகின்றன. வேதங்களின் பொருளை அறிபவர்கள் அவற்றைச் செய்வார்கள்.

வேதங்கள் நான்கும் கருமகாண்டம், ஞானகாண்டம் என்னும் இருபிரிவினைப் பெறும். அப்பிரிவினுள் கரும காண்டம் என்பது இவ்விறைவனைப் பூசை செய்யும் முறைமையினை அறிவிக்கும். ஞானகாண்டம் இவ்விறைவனுடைய திருவுருவச் சிறப்பினை அறிவுறுத்தும். விட்டுணு முதலாகிய தேவர்கள் அனைவரும் இவருடைய நிலையைச் சார்ந்தவர்களே. சர்வ வியாபகராகிய சிவபெருமானே முழுமுதற்பொருள் என்று சொல்லப்படுகிறார். முனிவர்கள் முதலானோர் வேள்வி வேட்டுக் கொடுக்கும் அவிசுகளையெல்லாம் தாமே யேற்றுப் பலன் கொடுப்பார்.

சிவபெருமானே எல்லாத் தத்துவங்கட்கும் உறைவிடமானவர். வேதங்களில் கூறப்படும் யாகாதி காரியங்கள் யாவும் முடிவில் சிவபெருமானையே சாரும். இப்பெருமானை வழிபட்டால் எல்லாப் பயனையும் பெறலாம். சிவபூசை செய்வதால் மனம் பரிசுத்தமடையும். மனப் பரிசுத்தத்தால் ஞானம் உண்டாகும். அறமும் கைகூடும். திருநீறணிதல், உருத்திராக்கமணிதல், சிவலிங்கபூசை, சிவதலதரிசனம், குருவழிபாடு, சிவனடியார் வழிபாடு ஆகியவைகள் சிவவழிபாட்டில் மிகவும் உயர்ந்தவைகளாம். அறிவுடைப் பெருமக்கள் இந்த

உண்மையை நன்ருக உணர்ந்து ஞாஞங்கங்களேயே எப்பொழுதும் மேற்கொண்டு வாழ்வார்கள்.

வேதம் சிவபெருமானிடத்துத் தோன்றியதால் அவ்வேதத்துள் கூறப்படும் அறமே அனைத்திலும் சிறப்புடையது. வைதிக சமயத்துக்கு வேதமே பிரமாண மாகும். ஸ்மிருதிகள் வேதத்தின் அங்கம் ஆதலால் வேதமே யாவற்றுக்கும் பிரமாணமாக ஆதல்கூடும்.

உலகிலுள்ள எல்லாப்பொருள்களுக்கும் சிவம் என்னும் ஞானமே போகத்தையும் வீடுபேற்றினையும் கொடுக்கும். சிவஞானத்துக்கு ஒப்பாக வேருென்றும் எண்ணுவதற்கு இல்லை. முனிவர்களே! இப்பொழுது உங்களுக்கு விளக்கிக்கூறிய வேதப்பொருளனைத்தும் நன்ருக விளங்கியிருக்கக்கூடும். மேலே கூறிய இவ் வுண்மைகளை நன்ருக உணர்ந்து தவஞ்செய்யுங்கள் என்று கூறி ஆசாரியராகி எழுந்தருளிய பெருமானுர் சிவலிங்கத்தில் மறைந்தருளினுர். கண்ணுவர் முதலிய முனிவர்களெல்லாரும் வேதப்பொருளை நன்குணர்ந் தார்கள்.

# 17. மாணிக்கம் விற்ற படலம்

வீரபாண்டியன் உரிய மனையாளோடு காமக்கிழத்தியர் பலரையும் உடையவனாக இருந்தான். காமக்கிழத்தியர்பால் தீயகுணம் நிறைந்த புதல்வர்கள் பலர் பிறந்தார்கள். உரிமை மனைவிக்கோ புத்திரப்பேறு உண்டாகவில்லை. இச்செயல் வீரபாண்டியனுக்குப் பெரிதும் கவலை கொடுத்தது. ஆன்றோர் கூற்றுப்படி பாண்டியன் தன் பத்தினியுடன் இறைவனைக் குறித்து, அட்டமி விரதம், சதுர்த்தி விரதம், சோமவார விரதம் ஆகிய விரதங்களை முறைப்படி மேற்கொண்டான்.

இறைவன் பாண்டியனது விரதத்துக்கு மகிழ்ந்து எல்லா நற்குணங்களும்பெற்ற ஒரு மகன் பிறக்குமாறு அருள்செய்தார். பிறந்த அம்மகனுக்கு ஐந்தாண்டு நிரம்பியது. வேட்டைக்குச் சென்ற வீரபாண்டியன் புலியால் அடிக்கப்பட்டு இறந்தான். இச்செயலினை அறிந்த மதுரை நகரினர் யாவரும் பெருந்துன்பத்தில் அழுந்தினார்கள். அவ்வமயம் பாண்டியனது காமக்கிழத்தியினுடைய புதல்வர்கள் சமயம்பார்த்து அரண்மனையிலுள்ள எல்லாப் பொருள்களையும் வஞ்சகமாகக் கவர்ந்துசென்று மறைந்தார்கள். வீரபாண்டியனுக்குச் செய்யவேண்டிய இறுதிக்கடன்களனைத்தையும் அவன் புத்திரன் செய்து முடித்தான்.

பின் அமைச்சர்கள் வீரபாண்டியனுடைய புதல்வனுக்கு முடிசூட்ட எண்ணினார்கள். அரசாங்கப் பண்டாரத்துள் நுழைந்துபார்க்க, முடி முதலாய ஆபரணங்கள் ஒன்றையும் காணாது திகைப்புற்றார்கள்; கவலை

யுற்ருர்கள். பின்னர் இவைகள் அனைத்தையும் காமக் கிழத்தியரது பிள்ளைகளே கொள்ளையடித்துச் சென்று விட்டார்கள் என்பதை உணர்ந்து, வேறு முடி செய்ய எண்ணினுர்கள். செய்வதற்குவேண்டிய விலையுயர்ந்த இரத்தினங்கள் அரசாங்கப் பண்டாரத்தில் இல்லை; அரசன் இல்லாத நாடு இருத்தல் கூடாது; அவ்வாறு இருந்தால் நாடு பெரிதும் துன்பத்தினை அடையும்; என்னசெய்வது என்று தங்களுக்குள் ஆலோசிக்கத் தொடங்கினுர்கள்.

தீராத முடிவுகளையெல்லாம் தீர்த்துவைப்பவன் இறைவன் என்னும் உண்மையை நன்குணர்ந்தவர்கள் அமைச்சர்கள். ஆதலின் நாம் இறைவன் திருவருளை அறிவோம் என்று அரசகுமாரனை அழைத்துக்கொண்டு ஆலயத்துக்குச் செல்லலானுர்கள். கோபுர வாயிலை அடைந்தவுடனேயே பெருமானுர், இரத்தினக்கற்கள் நிறைந்துள்ள சுமையை முதுகிலே தூக்கிக்கொண்டு வைசியகோலத்தோடு எதிரே வந்தார்; அமைச்சர்களை நோக்கி, நீங்கள் கவலையடைந்துவரக் காரணமென்ன ? என்று கேட்பாரானுர். கேட்டலும் அமைச்சர்கள் அரண்மனையில் நிகழ்ந்துள்ள அனைத்தையும் அவரிடம் சொன்னுர்கள்.

அமைச்சர்களது கூற்றைக் கேட்ட வைசியர், அமைச்சர்களே! நீங்கள் கவலைகொள்ளவேண்டாம்; என்னிடம் நவரத்தினங்களுள்ளன; அவை பதினுயிர கோடிபொன் மதிப்புடையன என்று சொல்லி அக் கற்களின் இலக்கணங்களையும் எடுத்துக் கூறினுர்.

வியாபாரியாகிய வைசியர் தன்னிடமுள்ள கருமை நிறத்துணியைத் தரையில் விரித்தார். அத்துணியின்

நடுவில் மாணிக்க இரத்தினத்தை வைத்தார். பின்னர் கிழக்கு முதலிய எட்டுத் திக்கிலும் முத்து முதலிய எட்டு இரத்தினங்களையும் வைத்தார். தான் வடக்குத் திசைநோக்கி உட்கார்ந்து அவைகளை அருச்சித்தார். பின்பு அக்கற்களைக் கையாலெடுத்துச் சோமசுந்தரப் பெருமானைத் தம் மனத்துள் வழிபட்டு 'இவ்வரசிளங் குமாரனுக்கு அளவற்ற செல்வமும் ஆயுளும் பெருகுக' என்று கூறிக் கொடுத்தார். கொடுத்தலும் குமாரன் இறைவனுடைய விமானத்தை நோக்கிக் கும்பிட்டுத் தொழுது எழுந்து நின்று இரண்டு கைகளையும் விரித்து வாங்கிக்கொண்டான்.

பின் வைசியர் அரசகுமாரனையும் அமைச்சர்களையும் நோக்கிப் புன்முறுவல் கொண்டவராய், இக்கற்களினாலே முடிசெய்வித்து இவனுக்குச்சூட்டி, அபிடேக பாண்டியன் என்று பெயரிட்டு அழையுங்கள் என்று கூறினர். அமைச்சர்கள் இரத்தினங்களுக்கு விலை கொடுக்க எண்ணிப் பார்த்தார்கள். எதிரே இருந்த அவ்வைசியரைக் காணவில்லை. திகைப்புறலானார்கள். இறைவன் அவர்களுக்குத் தனது திருவுருவத்தைக் காட்டி உமாதேவியாரோடு திருக்கோயிலில் சென்று மறையக் கண்டார்கள்.

உடன் அமைச்சர்கள் வைசியராகவந்தவர் பெருமானே என்று தெளிந்து, அவரைப் பின்பற்றிச் செல்லலானார்கள், அரசகுமாரன் இறைவன் சந்நிதியிலே அடிபணிந்து எழுந்தான். கைகூப்பி வணங்கினன். எம்பெருமானே! அடியேன் செய்யும் கைம்மாறு யாதோ? உடல் பொருள் ஆவி அனைத்தையும் உங்களுக்கே ஆளாக்குகிறேம் என்றுசொல்லித் துதித்தான். பின்னர்

ஆலயத்தை வலமாக வந்து பணிந்து அரண்மனையை அடைந்தான்.

அமைச்சர்கள் அரனார் அருள்செய்த நவரத்தினங் களினாலே திருமுடி செய்வித்து, அரச குமாரனுக்குச் சூட்டி மகிழலானார்கள். இறைவன் கூறியபடியே அபிடேகபாண்டியன் என்று பெயரும் சூட்டினார்கள். அபிடேகபாண்டியனும் இறைவனது திருவடிகளை மறவாதவனாய் அரசாண்டுகொண்டிருந்தான்.

இவ்வாறு அபிடேகபாண்டியன் அரசுசெலுத்தி வருங்கால், தன் தந்தையின் காமக்கிழத்தியர்களுடைய புதல்வர்கள் தமக்கு மூத்தவர்கள் என்ற காரணத்தால் அரண்மனைப் பண்டாரத்திலிருந்த பொருள்கள் அனைத் தையும் களவாடிச்சென்று வேற்றுநாட்டில் மறைந்து வாழ்ந்துகொண்டிருந்தார்கள். அவர்களை ஒற்றர்கள் தேடிப்பிடித்து அரசனெதிரே கொண்டுவந்து நிறுத்தி னார்கள். அபிடேகபாண்டியன் அவர்கள் களவாடிச் சென்ற பொருள்கள் அனைத்தையும் திரும்பப்பெற்றுக் கொண்டு அரசாண்டுவந்தான்.

## 18. வருணன் விட்ட கடலை வற்றச்செய்த படலம்

அபிடேகபாண்டியன் சித்திரைமாதத்துச் சித்திரை நட்சத்திரத்திலே சோமசுந்தரப்பெருமானுக்குச் சிறந்த முறையில் பூசைகள் நடத்தினன். நெய்முதல் சந்தனக் குழம்பு ஈருக எல்லாப் பொருள்களாலும் இறைவனை அபிடேகஞ்செய்தான். இறுதியில் பச்சைக்கர்ப்பூரம் கலந்த நீரை அபிடேகஞ்செய்து ஆனந்தபரவசத்தால், பெருமானே! நீர் என் கர்ப்பூரசுந்தரரோ என்று வியப்புடன் அழைத்தான்.

ஆண்டுதோறும் தவருமல் சித்திரைமாதச் சித்திரை நட்சத்திரத்தில் இறைவனை வழிபட்டுச்செல்லும் கடப்பாட்டினைத் தேவேந்திரன் மேற்கொண்டிருந்தான். இவ்யாண்டு பாண்டியன் அபிடேகஞ்செய்தலைக்கண்டு முடிவுபெறும் வரை காத்திருந்து முடிந்தபின், தான் முன்னைய வழக்கம்போலவே பூசைசெய்து சுவர்க்கம் திரும்பினன்.

அவ்வமயம் வருணன் இந்திரனுடைய அவையை அடைந்தான். வருணன் இந்திரனை நோக்கி, ஏன் நீ முகவாட்டங்கொண்டு காணப்படுகின்ருய்? என்று வினவினன். அதற்கு இந்திரன் மதுரையில் எழுந்தருளியுள்ள இறைவனை வழிபட இன்று காலம் தாழ்த்தி விட்டது; அதனல் உள்ளம் வருத்தமடைந்துள்ளது என்று கூறினன். உடனே வருணன் அவ்விலிங்கம்

மகாலிங்கமோ என்று வினவினன். இவ்வாறு வினவு தலும் இந்திரன் 'அச்சிவலிங்கம் முன்னே எனது பிரமப்பழியையும், வெள்ளை யானையின் சாபத்தினையும் போக்கியருளியதல்லவா' என்று கூறினன்.

உடன் வருணன் அவ்வாறாயின் தேவமருத்துவர் களாலும் தீர்க்கப்படாமல் என்னைத் திராதுவருத்தும் என் வயிற்றுநோயை அச்சிவலிங்கம் தீர்க்குமா என்று வினவினன். உடனே இந்திரன் புன்முறுவல்கொண்டு வருணனே! உனக்கு ஐயம் ஏன்? பிரம விட்டுணுவால் போக்கப்படாத பிறவிநோயைப் போக்கவல்ல பெரு மான் இவ்வுடல் நோயைத் தீர்த்தற்கு இயலாதவரோ! இறைவனின் திருவிளையாடலை இதுபோது நீ சோதனை செய்வாயாக என்று கூறினன்.

வருணன் உடன் இந்திரனை நோக்கி, இங்கே நான் வரும்பொழுது காமதேனுவும் அதன் கன்றும் எதிர்ப் பட்டன; அந்த நற்சகுனத்தால் உன்பால் இந்த நல்ல வார்த்தைகளைக் கேட்டேன். இப்பொழுதே இறைவ னுடைய திருவிளையாடலைக் கண்டு எனது வயிற்று நோயைத் தீர்த்துக்கொள்கிறேன் என்று எழுந்தான்; உடன் கடலை அழைத்து நீ மதுரைமாநகருக்கு மிக விரைந்து சென்று அந்நகரத்தை அழித்துவிடு என்று ஆணையிட்டான். ஆணையைச் சிரமேற்கொண்டு கட லானது கொதித்தெழுந்தது; மலைகள் அனைத்தையும் பறித்துச் சாய்த்தது; பிரளயகாலப் பெருவெள்ளம் போல் பெருக்கெடுத்து மதுரைநகரை அடைந்தது.

தேவர்கள் அனைவரும் அது வருணனின் செயல் என்பதை அறியவில்லை. அழியாத மதுரைக்கும் அழிவு

நேர்ந்துவிட்டதே என்று மனம் மாழ்கினார்கள். சோமசுந்தரக்கடவுளை வழிபட்டு மனங்கலங்கி நின்றார்கள். மதுரைநகரமக்கள் அனைவரும் பலவாறு மனத்திடை எண்ணித் துன்புறலானார்கள். இஃது இறைவனது திருவிளையாடலோ? நாம் செய்த தீவினையோ? ஊழிக் காலந்தான் வந்துவிட்டதோ? என்றெல்லாம் எண்ணத் தொடங்கினார்கள்.

பூமியும் திசையும் புதையுண்டுபோகும்வண்ணம் பேரிருள்போல வரும் கடலினை அபிடேகபாண்டியன் நகரின் புறத்தே கண்டான்; கண்டவுடனே நடுக்கங் கொண்டான்; சிவபெருமான் திருவடியே புகலிடம் என்று துணிந்தான்; திருக்கோயிலை அடைந்தான்; திருப்பாற்கடலில் தோன்றிய ஆலகால விஷத்தைக் கண்டு நடுங்கி ஓட்டமெடுத்த திருமாலோ ? அல்லது தனது உயிரைக் கவரவந்த இயமனைக்கண்டு அஞ்சிய மார்க்கண்டேய முனிவனோ ? என்று சொல்லுமாறு இறைவன் திருவடியில் விழுந்து ஓலமிட்டான். திருச்செவியேற்ற இறைவனும் பாண்டியனே ! அஞ்சாதே என்று அபயமளித்தார்.

உடன் இறைவன் தனது சடைமுடியிலுள்ள நான்கு மேகங்களையும் நோக்கி, 'இந்நகரினை அழிக்க வரும் கடலினை வற்றிப்போகும் வண்ணம் உடனே விரைந்துபோய் உண்ணக்கடவீர்கள்' என்று கட்டளையிட்டருளினார். கட்டளையினை ஏற்ற மேகங்கள் உடன் போய் அக்கடலினை வற்றிப்போகுமாறு உறிஞ்சின. உறிஞ்சியவுடன் அக்கடல், சிவபெருமானே முதற் கடவுள் என்று அறிவு தெளிந்த மெய்யன்பர்களுடைய எழுவகைப் பிறவிக்கடலைப் போல, நீரற வற்றியது.

நிவப்புற வெழுந்த நாள்கு
மேகமும் நிமிர்ந்து வாய்விட்டு
உவர்ப்புறு கடலை வாரி
உறிஞ்சின உறிஞ்ச லோடும்
சிவப்பெருங் கடவுள் யார்க்குந்
தேவெனத் தெளிந்தோ ரேமு
பவப்பெரும் பௌவம் போலப்
பசையற வறந்த தன்றே. 18

அவ்வமயம் நகரத்தார்களும் தேவர்கள் முதலியோரும், அபிடேகபாண்டியனும், இறைவனுடைய திருவிளையாடலை எண்ணி இறும்பூது எய்தினர்கள். இறைவனது புகழை மனமுருகிப் பாடிப்பரவினர்கள். இன்பக்கடலுள் எல்லோரும் அழுந்தினர்கள்.

அந்நிலை நகரு ளாரும் வானவ ராதி யோரும்
தென்னவர்பிரானு மெந்தை திருவிளையாடல் நோக்கிப்
பன்னரு மகிழ்ச்சி பொங்கப் பன்முறை புகழ்ந்து பாடி
இன்னல்தீர் மனத்த ராகி ஈறிலா இன்பத் தாழ்ந்தார்.

## கூடற்காண்டம்

## 19. நான்மாடக்கூடலான படலம்

தன் செயல் வழுவினமையால் வருணன் பெரிதும் நாணங்கொண்டான். வருணனது இரண்டு கண்களும் பெரிதும் சிவப்படைந்தன. கோபங்கொண்டவனுய் இறைவன்தான் கடலினை வற்றச்செய்தான் என்னும் உண்மை தெரியாது திகைத்தான்; உடன் தன் ஏழு மேகங்களையும் அழைத்தான்; 'நீங்கள் உடன் கடல் எல்லாவற்றையும் குடித்தெழுந்து இடித்து மழை பெய்து மதுரைமாநகர் முழுவதையும் அதிவிரைவில் அழித்து ஒழித்துவிடுங்கள்' என்று உத்தரவிட்டான்.

வருணனது உத்தரவை ஏற்ற மேகங்கள் ஏழும் பூமி தெரியும்வண்ணம் கடல்நீர் முழுவதையும் குடித் தெழுந்தன. உடம்பு கருகின. பெருமளவில் மின்னின. திக்குகளும் விண்ணினிடமும் செவிடுபட, பூமியும் பாதளமும் பிளக்க, அட்டகுல மலைகளும் வெடிபட, மகாமேரு மலை சாய, ஊழிக்காலத்தில் வெடிக்கும் அண்டகடாகத்தின் ஒலிபோல இடித்து முழங்கின. ஆதிசேடன் தன் படங்களிலுள்ள இரத்தினங்களைச் சிந்தினன். எட்டுத் திக்கு யானைகளும் நிலை கெடுமாறு இடியிடித்தன. ஆலங்கட்டிகள் யாவும் சாம்பர்ப் பூசனிக்காய்போல் விழுந்தன. பளிங்குத் தூண்களைப் போல் மழைத்தாரைகள் சொரிந்தன. விண்ணும் மண் ணும் தெரியாமல் இருள் பரந்து பரவின.

இவ்வாறு மேகமானது மதுரைத் திருநகரினைச் சூழ்ந்துகொண்டு பெய்தலும், அபிடேகபாண்டியனும் மக்களும் உலகம் அழியும்நாள் இதுவே என்று தம் அறிவுகலங்கி வாடினார்கள். பாண்டியன் பெருமானே இன்னமும் நம்மைக் காப்பாற்றி அருள்பாலிப்பார் என்று தெளிந்து, விரைந்து திருக்கோயிலடைந்தான். சோமசுந்தரக் கடவுளுடைய திருவடியிலே விழ்ந்து வணங்கினான். எம்பெருமானே! அடியேங்களுடைய துன்பத்தைப் போக்கி அடியேங்களைக் காத்தருளுக என்று வேண்டிக்கொள்வானாயினான்.

அபிடேகபாண்டியனின் வேண்டுகோளை ஏற்ற சோமசுந்தரக் கடவுள் முன்போலவே தமது திருச் சடையிலுள்ள நான்கு மேகங்களையும்நோக்கி, நீங்கள் இம்மதுரை நகரத்தின் நான்கு எல்லைகளையும் சூழ்ந்து நான்கு மாடங்களாகி ஏழு மேகங்களையும் விலக்குங் கள் என்று பணித்தருளினார். உடனே அம்மேகங்கள் நான்கும், நான்கு மாடங்களாகி வளைந்து, மதுரையின் நான்கு எல்லைகளையும் சூழ்ந்து, சந்துவாய் தெரியா வண்ணம் ஒன்றி, ஒரு குடிசையைப்போல் நின்றன. மாடங்கள் கோபுரங்கள் யாவும் அந்தக் குடிலுக்குக் கால்கள்போல் தாங்கிக்கொண்டு நின்றன.

அந்த நான்கு மாடங்களுள்ளும் நகரத்தார்களும், மந்திரிகளும், பாண்டியனும், அவனது சேனைகளும், சரம் அசரம் என்னும் ஏனைய பொருள்களும் அடங்கி இன்புற்று வாழ்ந்தன. ஏழு மேகங்களும் தாங்கள் கடல் முழுவதும் வற்றுமாறு பருகிப்பருகி மாடங்கள் மேலே பெய்யவும் அவைகள் எல்லாம் மலைகளிலே பெய்யும் துளிகள்போல் உடைந்து துள்ளிவிழுந்தன.

தங்கள் உடல் முழுவதும் வறப்ப வெட்கிநின்றன. அச்செயல்கண்ட வருணனும் வெட்கிநின்றான். அச்சமும் நாணமும் மேலிட வருந்தினான். பின் உள்ளத்துள் மகிழ்ச்சிதோன்ற பொற்றாமரைவாவிக் கரையை அடைந்தான். அடைவதற்கு முன்னரே அவனுடைய தீராத வயிற்று நோய் தீர்ந்தது. பின்பு அவ்வாவியில் நீராடி இறைவனைப் பூசைசெய்ய எண்ணினான். அந்த நிலையில் வருணன் திருநீறு உருத்திராக்கம் இவைகளை அணிந்துகொண்டு கங்கை முதலாகிய நங்கையர்கள் பொற்கலசங்களில் நறுமணம் கலந்த திருமஞ்சனம் கொண்டுவந்து நீட்டினார்கள். வருணன் அவற்றைக் கையிலே பெற்று இறைவனை அபிடேகஞ்செய்தான். கற்பகதரு அளித்த நறு மலர்களையும் சந்தனத்தையும் அணிந்து மகிழ்ந்தான். அதன்பின் பஞ்சகவ்வியம், திருவமுது, இவைகளுடன் தூபதீபத்தைக் கொடுத்து மகிழ்ந்தான். பின் இறைவனை வலமாக வந்து பணிந்து எழுந்துநின்றான்.

சிவபெருமான் உளம்மகிழ்ந்து, வருணனே! உன் விருப்பம் யாது சொல்வாயாக என்று பணித்தருளினார். வருணன் பணிந்து தலை வணங்கி, எம்பெருமானே! எளியேன் ஒன்றானும் நீங்கப்பெறாத வயிற்றுநோயை உன் பொற்றாமரை வாவியில் நீராடி நீங்கப்பெற்றேன்; வேதத்தினாலும் பிரமாணங்களினாலும் அறியவொண்ணாத பெருமானே! அடியேன் உம்மை என் அறியாமையால் சோதிக்கத்துணிந்தேன்; அடியேனிடத்து என்ன குணங்கண்டு என் உடற்பிணியைத் தீர்த்து என்ன பயன் பெற்றீர்; குற்றத்தையும் குணமாகக்கொள்வது உமது பெருந்தன்மைக்குணமோ ? என்று பலவாறு பாராட்டினான்.

பெருமானே! இந்திரன் காலந்தாழ்த்து உம்மை அருச்சித்து அயர்ச்சியோடு மீண்டான். அயர்ச்சிக்குக் காரணம் யாது? என்று நான் இந்திரனை வினவினேன். இந்திரன் அதற்கு ஏற்ற விடையிறுத்தான். அதனைக் கேட்ட யான் மீட்டும் வினவினேன். அதற்கும் அவ் விந்திரன் விடையிறுத்தான். அவ்விந்திரன் சொல்லிய படியே எளியேன் உம்மைச் சோதித்தேன். அந்தச் சோதனையே உமது திருவருளால் எளியேனுக்கு மருந் தாயிற்று. பெருங்கருணைப் பெருங்கடலே! எளியே னுடைய உடற்பிணியாகிய வயிற்றுநோயன்றி, உயி ரைப்பற்றி வருத்தும்பிணியாகிய மலமாயாகர்மங்களும் நீங்க அருள்செய்யவேண்டும். அன்றியும் எளியேனுக்கு மணியும் மந்திரமும் மருந்தும் நீயன்றி வேறென்றும் இல்லை. உண்மையாக நினைப்போர்கட்கு இப்பொற் றாமரை வாவியே எல்லாப் பிணியையும் போக்கியரு ளும். அடியேன் முன்னமே செய்த அபராதமிரண்டி னையும் பொறுத்து அருளும் என்று விண்ணப்பம் செய் தான். பலமுறை துதித்து வணங்கினான். பின்னர் சில வரங்களை இறைவன்பால் பெற்று நகரமடைந்தான். இவ்வாறு வருணன் விடுத்த மேகங்களை விலக்கும் பொருட்டுச் சிவபெருமானது திருச்சடையினின்றும் நீங்கிய நான்கு மேகங்களும் நான்கு மாடங்களாகக் கூடுதலினாலே மதுரைமா நகரம் நான்மாடக்கூடல் என்னும் பெயரினைப் பெற்றது.

## 20. எல்லாம் வல்ல சித்தரான படலம்

இறைவர் அபிடேகபாண்டியனுக்கும், பாண்டிய நாட்டு மக்கட்கும் இன்பங்களையும் வீடுபேற்றையும் அருளத் திருவுளங்கொண்டார். அதற்கேற்பத் தாம் ஒரு சிறந்த சித்தராகத் திருவடிவங்கொள்வாராயினர். அச்சித்தர் வட்டமாகிய குஞ்சிச் சடையும், திருநீறு அணிந்த திருநெற்றியும், படிககுண்டலந்தரித்த திருச் செவியும், விபூதிப்பொக்கணந்தூக்கிய வலத்தோளும், யோகபட்டயம் தரித்த இடத்தோளும் உடையராய்க் கையில் பொற்பிரம்பேந்திப் புன்முறவல் கொண்டவ ராய் வீதியிடையே வருவாராயினர்.

இவ்வாறு வந்த சித்தர், தம் இடையில் புலியின் தோலை உடுத்தியிருந்தார். கிங்கிணி சிலம்பு முதலாய ஆபரணங்கள் அணிந்து கொண்டிருந்தார். நெற்றியில் குறுவியர்வை அரும்ப வழி நடந்து வருவாராயினர். அவ்வாறு வந்தவர் கடைவீதி, தெரு, நாற்சந்தி முத லிய இடங்கள்தோறும் செல்வாராயினர். இவ்வாறு சென்ற எல்லாம்வல்ல சித்தர் தெற்கே இருப்பவர் போல் வடக்கே போயிருப்பார். கிழக்கே இருப்பவர் போல் மேற்கே இருப்பார். எவரும் தேடிக்காணாத வண்ணம் மறைவார். அதிக தூரத்திலுள்ள பருவ தத்தை அதிக சமீபத்தில் வருமாறுசெய்வார். சமீபம் உள்ள மலையை அதிக தூரத்திலே போகுமாறு செய் வார். முதியோரை இளையோராயும் இளையோரை முதி யோராயும் மாற்றியமைப்பார். ஆண் பெண்ணாகவும் பெண் ஆணாகவும் மாறும்படிச்செய்வார். மலடிகள்

அனைவரும் பிள்ளை பெறுமாறு அருள்செய்வார். கூன் குருடு, செவிடு, ஊமை இவர்களை நன்முறையில் இருக்குமாறு செய்வார். வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம் ஆகிய உலோகங்களைப் பொன்னாக மாற்றுவார்.

அன்றியும் செல்வர்வீட்டுப் பொருள்கள் யாவும் வறியர்வீட்டில் இருக்குமாறு செய்வார். நட்பினராக உள்ள இருவர் தம்முள் மாறுபட்டுப் போர் செய்யுமாறு பண்ணுவார். எட்டிமரம் இனிய கனிகளைப் பழுக்குமாறு செய்வார். நீர்வராத காலத்தே வைகையில் நீர் வருவிப்பார். உவர்நீரை நன்னீராக மாற்றுவார். மாத்திரைக் கோலை விண்ணிடைச் செலுத்தி, அதன்மேல் ஊசியை நாட்டி, அவ்வூசியின்மேல் கால் பெருவிரலை ஊன்றி நடனம் ஆடுவார். மேகங்களைப் பிடித்து நீரைப்பிழிந்து காட்டுவார். இரவில்தோன்றும் பொருள் பகலிலும் பகலில் தோன்றும் பொருள் இரவிலுமாகத் தோன்றுமாறு மாற்றிக் காட்டுவார். மூவகைத் தம்பங்களுஞ்செய்து காட்டுவார். கையில் உள்ள பிரம்பினால் தடவிக் கிழவர்களைக் குமரர்களாகவும், கிழவிகளை மங்கையர்களாகவும் ஆக்கி அம்மங்கையர்கள் கருக்கொள்ளுமாறு அவர்களுக்குத் திருநீறு அளிப்பார். வசிய முதலாய எண்சித்திகளையுஞ் செய்து காட்டுவார். கல்வி இல்லாதாரை எல்லாக் கலைகளும் கற்றவராகமாற்றுவார். இவ்வாறு ஒன்றை மற்றொன்றாக மாற்றி மதுரையிலே பலவகைச் சித்திகளைச் காட்டுவாராயினார்.

மதுரைமா நகரத்தினர் யாவரும் சித்தர்வடிவங் கொண்ட சித்தரின் செயலைக்கண்டு திகைத்து, நின்ற இடத்திலேயே நின்றனர். கண்களையும் மனத்தையும்

அவர்களால் மாற்றிக்கொள்ள இயலவில்லை. அவரவர்களும் தங்கள் தங்கள் தொழிலை மறந்து நின்றனர். இவைகளை அபிடேகபாண்டியன் தன் ஏவலாளரால் அறிந்தான். சித்தசுவாமியைத் தன்பால் அழைத்து வருமாறு சிலரை விடுத்தான்.

அரசரால் விடுக்கப்பட்ட ஏவலாளர்கள் சித்தரை அடுத்துத் தாங்களும் அவருடைய திருவிளையாடலைப் பார்த்து வியந்துகொண்டு நின்றார்கள். பாண்டியன் பின்பு அமைச்சர்களை விடுத்தான். அமைச்சர்களும் சித்தசுவாமியை அடைந்து வணங்கி, அரசன்முன்பு எழுந்தருளும் பொருட்டு வேண்டிக்கொண்டார்கள். அதற்குச் சித்த சுவாமி, எமக்கு அரசனால் எய்தும் பயன் யாது? என்று மறுத்துவிட்டார். அமைச்சர்கள் அவரைத்தொழுதுவந்து சித்தசுவாமி மறுத்தமையை, தம் அரசனிடம் விண்ணப்பஞ்செய்தார்கள். அரசன் எல்லாம் வல்ல இறைவனுடைய திருவருளைப்பெற்று இம்மை மறுமை இன்பங்களை வெறுத்த யோகிகள், இந்திரன் பிரமன் விட்டுணு முதலாயினாரையும் மதிக்க மாட்டார்; அப்படியிருக்க இந்தப் பூமியை ஆளும் அரசரையா மதிப்பார் என்று சொல்லி இனிதிருந்தான்.

## 21. கல்லானைக்குக் கரும்பருத்திய படலம்

அபிடேகபாண்டியன் தன்னுள்ளத்திலே அன்பும் அச்சமும் பெருக, நான் பெரியவர்களை நன்குமதியாது எளியவரென அவமதித்து இங்கே வரும்படிச் சொல்லி அனுப்பியது தவறு என்று எண்ணினன். அவருக்கு என்ன குறை; நானே அவரிடம் சென்று அவரைத் தரிசிக்க வேண்டும் என்று மனத்துள் எண்ணினன். சித்தசுவாமியும் பாண்டியனுடைய குறிப்பை அறிந்து அதற்குமுன்னே தன் பொன்விமானத்துக்கு வடமேற் றிசையில் எழுந்தருளியிருந்தார்.

சித்தசுவாமி வந்த அந்நாள் தைமாதப் புண்ணிய காலம். வழக்கம்போல் பாண்டியன் திருக்கோயிலுக் குச் சென்றான். சோமசுந்தரக்கடவுளை வழிபட்டான். பின்னர் ஆலயத்தை வலமாக வந்தான். அரசனுக்கு முன்னால் சட்டையணிந்த காவலர்கள் சென்றார்கள். காவலர்கள், யோகபட்டத்தைக் கையிலேந்தியவராய்ப் புலித்தோலின்மேல் அமர்ந்திருக்கும் சித்தசுவாமியைப் பார்த்து, அருகில் வந்து பிரம்பினல் நீக்கி எழுந்துபோ என்று பணித்தார்கள். சித்தசுவாமியோ மிகுந்த இறு மாப்போடு வீற்றிருந்தார்.

பாண்டியன் இறுமாப்புடன் வீற்றிருக்கும் சித்த சுவாமியைக் கண்டான். உடன் அவரை நோக்கி, அவரது நாடு, ஊர், பெயர், வரும் சித்துக்கள், என்ன பொருள் வேண்டும் என்று வினவினன். பாண்டியன்

கூறியதைக்கேட்ட சித்தர் 'அப்பா! நாம் ஒரு நாடு, ஓர் ஊர் என்ற நிலையுடையோம் அல்லோம்; எங்கும் நாம் இடமாகக்கொண்டு இருப்போம்; ஆனாலும் நாம் தற்சமயம் இருப்பது காசுமீர நாட்டைச் சார்ந்த காசி நகரம் ஆகும். எம் இனத்தவர்கள் எல்லாரும் இரந்து உண்ணுகின்ற பெருவாழ்வுடையோர்களே ஆவார்கள்; நாமோ நாள்தோறும் பலவிதமான வித்தைகள் செய்து வாழும் ஒரு சித்தராவோம்' என்றார்.

தற்போது நாம் இங்குள்ள தலங்கள் பலவற்றை யும் வழிபட வந்துள்ளோம். இந்தத் தலம் இம்மை யிலே சீவன்முத்தியையும், மறுமையில் பரமுத்தியை யும் கொடுக்குந்தலமாகும். ஆகவே நாம் இங்குள்ள வர்கட்கு நமது பல விளையாட்டினையும் காட்டவந்துள் ளோம். மேலும் இங்குள்ளார் விரும்பும் பல சித்தி களையும் கொடுப்போம். வேதம் முதலாய கலைகள் அனைத்திலும் நமக்கு நல்ல பயிற்சி உண்டு. ஆகவே நமக்கு எல்லாம்வல்ல சித்தர் என்னும் பெயர் இயல் பாகவே ஏற்பட்டது. அரசனே! உன்னிடத்து நாம் அடையவிரும்புவது ஒன்றுமில்லை என்று கூறி மனத் தினுள் நகைசெய்யலானார்.

பாண்டிய மன்னன் சித்தருடைய இறுமாப்பை நான் அளவிட்டறிவேன் என்று எண்ணுவானாயினன். அதன்பொருட்டு என்னசெய்யலாம் என்றும் ஆராய லானான். அவ்வமயம் வேளாளனொருவன் கமுகு போல் செழித்திருந்த கரும்பு ஒன்றனைக் கொணர்ந்து பாண்டியமன்னன் திருமுன்பு வைத்துப் பணிந்தான். பாண்டியன் அவ்வேளாளன் கொடுத்த கரும்பினைக் கையில் ஏற்றான்.

சித்தசுவாமியே! நீர் எல்லாம்வல்ல சித்தரென்று உம்மையே மதித்துள்ளீர். ஆகவே நீர் இந்தக்கரும்பை இக்கல்லானை உண்ணும்படி செய்யவேண்டும். அப்படி நீர் செய்விராயின் எல்லாம் வல்லவரும் நீரேயாவர்; மதுரைப் பெருமானும் நீரே; நீர் விரும்பியது எதுவாயினும் நான் அதனை உமக்குத் தருகிறேன் என்றான். அதனைக் கேட்ட சித்தசுவாமி புன்முறுவல்கொண்டு 'பாண்டிய அரசனே! நீ இங்குவா; உன்னிடம் எமக்கு வேண்டுவதாக ஒன்றுமில்லை; உன் விருப்பம் நிறைவேறும்வண்ணம் நாமே உனக்கு வேண்டியவற்றைத் தருகிறோம்' என்று கூறினார்.

வித்தையைக் கற்றவர், செல்லாத உலகத்திற்குஞ் செல்வர்; அங்கு உள்ளோரால் மதிக்கவும் பெறுவர். எல்லாக் கலையும் அறிந்த நமக்கோ ஒன்றினும் ஆசையில்லை. இதோ இந்தக் கல்லானை கரும்பைக் கடித்து உண்கிறது காண் என்று கூறினார். கல்லானைமீது தம் கருணையைக் காட்டுவாரானார்.

உடனே கல்லானை மூன்று மதங்களும் பொழிய வாய்திறந்து ஆர்த்தது. பின் துதிக்கையை நீட்டிற்று. பாண்டியன் கையிலுள்ள கரும்பினைப் பற்றி இழுத்துத் தின்றது. சாறுகள் வாயின்கடைவழியே வழிந்து ஓடிற்று. தன் துதிக்கையை ஆட்டியநிலையில் யானை மிடுக்குடன் நின்றது. சித்தசுவாமி மீண்டும் யானைமீது கடைக்கண் சாத்தியருளினார். கல்லானை பாண்டியனது கழுத்தில் உள்ள முத்துமாலையைப் பறித்திழுத்தது.

இந்நிலையைக்கண்ட அரசன் மெய்காப்பாளர்கள் கோபங்கொண்டு, யானையைக் கிட்டி அடிப்பதற்குக்

கோலை ஓங்கினார்கள். சித்தசுவாமி கோபங்கொண்டவராய், கண்சிவந்து யானையை உறுத்துப் பார்த்தார். உடன் கல்லானை பாண்டியனுடைய முத்துமாலையை உண்டுவிட்டது. முத்துமாலையை யானை உட்கொண்டதைக் கண்ட பாண்டியன் கண்சிவந்து சித்தசுவாமியைக் கோபத்துடன் நோக்கினான். பாண்டியமன்னன் ஏவலருட் சிலர் சித்தசுவாமியை அடிக்கக் குறுகினர். அவ்வமயம் சித்தசுவாமி கையமர்த்திப் புன்முறுவல் செய்து நில்லுங்கள் என்றார்.

அங்ஙிலேயே வீரர்கள் எல்லாரும் அடிபெயர்த்து வைக்க இயலாது சித்திரத்தில் எழுதப்பட்ட பாவை போல் நின்றார்கள். அதனைக்கண்ட பாண்டியன் தான் கொண்ட கோபம் தணியலானான். அன்புடையவனாய் நிகழ்ந்த அற்புதத்தினை மனத்தில் எண்ணினான். சுவாமி! எளியேன் அறியாதுசெய்த பிழையினைப் பொறுத்தருள வேண்டும் என்று விண்ணப்பஞ்செய்தான். பின்னர் அடியற்றமரம்போல் சித்தசுவாமி திருவடியில் விழுந்து வணங்கினான்.

அன்பிற்கிரங்கும் பரங்கருணைப் பெருங்கடலாகிய சித்தசுவாமி 'பாண்டியனே! நீ வேண்டும் வரத்தைக் கேள்' என்று பணித்தருளினர். பாண்டியனும் மனம் மொழி மெய்கள் ஒன்ற வணங்கி 'அடியேனுக்குப் புத்திரப்பேறு உண்டாக அருள்செய்யும்' என்று வரம் வேண்டினான். சித்தசுவாமியும் பாண்டியன் கேட்ட வரத்தினைக்கொடுத்து, தமது திருக்கரத்தை யானைமீது வைத்துத் தடவினர். உடனே யானையானது தான் உண்ட முத்துமாலையைத் துதிக்கைநீட்டிப் பாண்டியனுக்குக் கொடுத்தது. பாண்டியனும் தன் கையை

நீட்டி முத்துமாலையை வாங்கினான். வாங்குவதற்கு முன்னரே சித்தசுவாமி மறைந்தருளினார். யானையும் பண்டுபோல் கல்லானையாயிற்று.

நிகழ்ச்சிகளையெல்லாம் கண்ணுற்ற பாண்டியன் அஞ்சி, உயிருக்குயிராகிய சோமசுந்தரப் பெருமானே இவ்வாறு சித்தவடிவாக வந்து திருவிளையாடல்செய்து மறைந்துள்ளார் என்பதை உணர்ந்தான். உடன் திருக் கோயிலை அடைந்தான். சிவலிங்கப்பெருமான் சந்நிதி முன்னின்று பலவாறு புகழ்ந்து பாடிப் பெருமானை வழிபட்டான். பெருமானே! எளியேன் உமது திரு விளையாடலை இன்னதென்றறியாது சோதிக்கத் துணிந் தேன் என்று கூறி அழுது அரற்றினான். அபராதத் தைப் பொறுக்கவேண்டும் என்று பன்முறை வேண் டினான். கைகூப்பித் தொழுதான்.

இவ்வாறு சிவபெருமானைத் துதித்து வணங்கிய பின்னர், பாண்டியன் தன் அரண்மனை அடைந்தான். சித்தசுவாமியின் அருளிப்பாட்டின்படி புத்திரப்பேறு கிடைக்கப்பெற்றான். தவத்தால் ஈன்றெடுத்த தன் மகனுக்கு விக்கிரமபாண்டியன் என்று திருப்பெயரிட் டழைத்தான். பின் பலநாள் நன்முறையில் அரசாண்டு விக்கிரமபாண்டியனுக்கு முடி சூட்டி, அரசினையும் அவன்பால் ஒப்புவித்துவிட்டுச் சிவனடி சேர்ந்தான்.

## 22. யானையெய்த படலம்

விக்கிரமபாண்டியன் தன்னுடைய ஆட்சிக்காலத்தில் பல நாட்டு அரசர்களையும் அடக்கி ஆண்டான். அவர்களனைவரும் இவனுக்கு நிறைந்த பொருளினைத் திறையாகக் கொடுத்துவந்தனர். அதனால் இவன்பால் செல்வம் நிறைவெய்தியிருந்தது. அது காரணமாகப் பாண்டியநாட்டில் பஞ்சம் தலையெடுக்க ஒண்ணாது போயிற்று. பாண்டியனும் நெறிமுறையில் தவறாது செங்கோலோச்சி நாட்டை ஆண்டுவருவானாயினான்.

பின்னர் நாட்டில் உள்ள பௌத்தம், ஆருகதம் முதலாகிய புறச்சமயங்களையெல்லாம் இல்லாதவாறு செய்து, வேத சிவாகமங்களால் பாராட்டப்படுகின்ற சைவ சமயத்தை நல்லமுறையில் பேணி வளர்ப்பானாயினான். தன்கீழ் வாழும் குடிமக்கள் அனைவரும் விதிமார்க்கத்தினும் பக்தி மார்க்கத்தினும் வழுவாது ஒழுகுமாறு பார்த்துக்கொண்டான். அவற்றாலாகும் பயன்களை மக்கள் பெற்றுய்யுமாறு ஏற்பாடுசெய்தான். மக்கள் அனைவரும் அறநூலின் வழியே ஆளப்பட்டு நற்பயன் பெறலானார்கள். பாண்டியனும் விமானத்திற்கு வடபக்கத்தில் ஒரு திருக்கோயிலமைத்து அதில் சித்தசுவாமியைப் பிரதிட்டித்து வழிபாடாற்றினான்.

இவ்வாறு மன்னன் அரசாண்டுவரும் காலத்திலே, காஞ்சியைத் தலைநகரமாகக்கொண்டு ஆளும் சூரிய குலமன்னனாகிய சோழன் விக்கிரம பாண்டியனுக்குப் பகைவன் ஆயினான். அவன் சமணர்களது புறச்சமய

போதனையால் அறிவுமயங்கி அதனால் பாண்டியனோடு பகைத்தான். பாண்டியனோ பெருமானிடம் பேரன்பு கொண்டு அடிமைப்பட்டு வாழ்பவன். அவனை எதிர்த்துச் சோழனால் வெற்றிபெற இயலவில்லை. ஆகவே சோழன் பாண்டியனை வஞ்சனையால் வெல்லவேண்டும் என்று எண்ணினான்.

உடன் அஞ்சனம், கிரவுஞ்சம், கோவர்த்தனம், திரிகூடம், காஞ்சி, யானைமலை, ஏமகூடம், விந்தம் ஆகிய எட்டு மலைகளிலுமுள்ள சமணகுரவர்கள் எண்ணாயிரவர்களையும், ஓலைபோக்கித் தன்பால் வருமாறு அழைத்தான். அவர்களும் அரசாணை ஏற்று உடனே காஞ்சியை வந்தடைந்தார்கள்.

சோழன் சமணகுரவர்களை நோக்கி, முனிவர்காள்! நீங்கள் அபிசார வேள்விசெய்து பாண்டியமன்னனைக் கொன்றுவிடுங்கள்; அச்செயலுக்குப் பரிசாக நான் எனது நாட்டிலே பாதியை உங்கட்குத் தருகிறேன் என்று கூறினான்.

தவம் என்று பெயர்வைத்துக்கொண்டு மறைந்து கொலையே செய்யும் இயல்புடையவர்கள் சமணர்கள். அவர்கள் அரசனது செயலுக்கு உடன்பட்டார்கள்; வேள்விவேட்பான்வேண்டி பாலியாற்றின் கரையினை அடைந்தார்கள். அங்கு மூன்று காத அளவில் ஒரு வேள்விச்சாலையை அமைத்துக்கொண்டார்கள். ஒரு யோசனை அகலமுடைய குழியினைத் தோண்டினார்கள். எட்டுக்கோணமுடைய ஒரு ஓமகுண்டத்தை ஆக்கிக் கொண்டார்கள். விஷமுள்ள விறகு, வேப்பெண்ணெய், விஷமுள்ள பிராணிகளின் மாமிசம், மிளகு

பொடியூறிய எண்ணெய் இவற்றை ஓமகுண்டத்தில் இட்டு அபிசாரவோமஞ்செய்தார்கள்.

அவ்வமயம் அவ்வோம குண்டத்தினின்றும் ஒரு பெரிய யானை எழுந்தது. அந்த யானையைச் சமணகுரவர்கள் பார்த்து, நீ விரைந்து சென்று பாண்டியனை மதுரைமா நகரோடும் அழித்துவிடக்கடவாய் என்று சொல்லித் தென்திசை நோக்கிச் செல்லவிட்டார்கள். சமண குரவர்களும் சோழமன்னனுடைய சேனைகள் சூழ்ந்துவர யானையைத் தொடர்ந்துசென்றூர்கள்.

வேள்வியினின்றும் எழுந்த யானை, இடிபோல ஆர்த்து எழுகடல்போல மதத்தினைச் சொரிந்து செல்லலாயிற்று. அதன் கண்களினின்று நெருப்பு வடவாமுகாக்கினிபோல் சிந்திற்று. இதனைக்கண்டு இயமனும் அஞ்சினுன். திக்கு யானைகளும் நடுங்கின. இப்படி யானையானது மதுரைநகருள் புகுந்தது.

இத்தகைய கொடிய தோற்றத்தோடு வருகின்ற யானையை நகரத்தவர்கள் கண்டார்கள். மிக நடுக்கங் கொண்டவராய் விரைந்து சென்று விக்கிரமபாண்டியனிடம் முறையிட்டார்கள். உடனே பாண்டியன் மனம் கலங்கித் திருக்கோயிலை அடைந்தான். சோமசுந்தரக்கடவுளை வணங்கினுன். வணங்கியெழுந்து எம்பெருமானே! இக்கொடிய யானையைக் கொன்று எளியேனைக் காத்தருளும் என்று வேண்டிக்கொண்டான். அப்பொழுது விண்ணினின்றும் அசரீரி தோன்றியது. பாண்டியனே! நாமே ஒரு வில்வீரனுகச் சென்று உன் பகைவர்கள் விட்ட யானையைக் கொல்லுவோம்; ஆதலின் நீ அதற்குமுன் இந்நகரத்துக்குக் கிழக்குத் திக்கில், ஒரு அட்டாலை மண்டபம் அமைத்துவை

என்று கூறியருளினர். பாண்டியன் அவ்வசரீரி கூறிய மொழியைக் கேட்டு மனம் மகிழ்ந்தான். விரைந்து சென்று கீழ்த்திசையில் பதினறு தூண்களையுடைய அட்டாலை மண்டபத்தைச் செய்வித்தான்.

சோமசுந்தரக் கடவுள், இரண்டு காதுகளிலும் சங்கக் குண்டலங்கள் அணிந்துகொண்டார். தனது குடுமியில் மயில்தோகையைச் சூட்டிக்கொண்டார். தன் இடுப்பிலே செந்நிறக்கச்சை கட்டிக்கொண்டார். அதனிடை உடைவாளைச் செருகினர். இரு திருவடிகளிலும் செருப்பு மாட்டிக்கொண்டார். முதுகிலே அம்பருத்தூணி கட்டினர். இங்ஙிலையில் கருநிறமும் காளைப்பருவமும் உடைய ஒரு வில்வீரராகக் காட்சி கொடுப்பாரானர். அவ்வட்டாலை மண்டபத்தின்மீது ஏறினர். பாண்டியனுடைய துன்பத்தைப் போக்கும் பொருட்டு அவ்யானையின் வரவை எதிர் நோக்கிக் கொண்டு அட்டாலைமண்டபத்தின்மேல் நின்ருர்.

ஐந்து கூப்பிடுதூரத்தில் யானை வருவதைக் கண்டார். தமது கையில் உள்ள வில்லை வளைத்து நாண் பூட்டினர். விரலினல் தெறித்துப் பேரொலி செய்தார். முதலில் நாரசிங்காஸ்திரத்தைத் தொடுத்து விட்டார். அவ்வம்பு விரைந்துசென்று யானையின் மத்தகத்தைக் கிழித்தது. யானை பேரொலி செய்துகொண்டு வீழ்ந்து இறந்தது. யானை விழுந்து இறந்தமையைக் கண்ட பாண்டியன் மனம் மிக மகிழ்ந்தான்.

உடன் பாண்டியன் யானையோடு வந்த சமணர்களையும், சேனைகளையும் கண்டு கோபங்கொண்டான். பாண்டியன் குறிப்பின்வழியொழுகும் சேனையிலுள்ள

வீரர்கள் விரைந்து சென்று சமணர்களைத் துரத்தலானார்கள். கையில் உள்ள கரகங்கள் யாவும் தூளாயின. பாய்கள் எல்லாம் கிழிந்து துணிபட்டன. அவைகள் எல்லாம் காற்றில் பறக்கலாயின. இவ்வாறு எல்லார் மானத்தையும் போக்கினார்கள். அதனால் யாவரும் மறைந்து ஓடினார்கள்.

உடன் விக்கிரமபாண்டியன் அட்டாலை மண்டபத்தை அடைந்தான். வில்வீரருடைய திருவடிகளில் விழுந்து வணங்கினான். பெருமானே! நீர் இவ்விடத்து இப்படியே எக்காலத்தும் எழுந்தருளியிருக்கவேண்டுமென்று வேண்டினான். சிவபெருமானும் பாண்டியன் வேண்டுகோளுக்கு இணங்கினார். மற்றும் சில வரங்களைப் பாண்டியன் பெற்றுச் சென்றான். இறைவனை வழிபட்டு அரசாண்டுவரும் நாளிலே, இராசசேகரன் என்னும் புத்திரனைப்பெற்று மகிழ்ந்தான்.

சிவபெருமான் யானைமீது விடுத்த அம்பு, அங்கே நரசிங்க உருவமாக எழுந்தருளியிருந்தது. உருத்திர மூர்த்தியினுடைய வீரசத்தியிலே சிலபெற்று, இரணியனுடைய மார்பைக் கிழித்த அந்நரசிங்கத்தை, உரோமசமுனிவர் வந்து வணங்கி, தம்பெயரால் ஒரு தீர்த்தத்தை ஏற்படுத்தி அதனை வழிபட்டு அருள்பெற்றார். பிரகலாதனும் அவ்விடம் தவஞ்செய்து முடிவில்லாத வரத்தினை அடைந்தான்.

# 23. விருத்த குமார பாலரான படலம்

விக்கிரம பாண்டியன் செங்கோல்முறை தவருது அரசாண்டு வந்தான் என்று முன்னரே அறிந்தோம். அவன்காலத்தில் மதுரையில் விருபாக்கன் என்னும் பிராமணன் இருந்தான். அவனுடைய மனைவியாவாள் சுபவிரதை. இருவர்களும் நெடுங்காலம் இல்லறத்தை நல்லறமாக நடத்தி வாழ்ந்துவந்தார்கள்.

இவ்விருவருடைய மனமொத்த வாழ்வினை மகிழ் விக்க நீண்டநாளாகியும் புத்திரப்பேறு உண்டாக வில்லை. அளவற்ற தான தருமங்களைச் செய்தார்கள். சத்தமாதர்களை முறைப்படி வழிபட்டுத் தவஞ்செய் தார்கள். அவ்விறைவியின் அருளால் அவர்கட்கு ஒரு பெண்மகவு பிறந்தது. அப்பெண்மகவிற்குக் கௌரி என்று பெயரிட்டு வளர்த்தார்கள்.

அருந்தவமிருந்து பெற்ற பெண்ணுகிய கௌரிக்கு ஐந்து வயது நிரம்பிற்று. கௌரியானவள் பெற்ரோர் களை அணுகி, பிறவிப்பிணிக்கு அஞ்சியவளாய், அதைப் போக்கிக்கொள்ளக் கருதித் தன் தந்தைபால், பிறவி நோயைப்போக்கவல்ல மந்திரம் யாது? அம்மந்திரத்தை அடியேனுக்கு உபதேசித்து அருளவேண்டும் என்று வேண்டினுள். அதனைக்கேட்ட பிராமணன் அதிசயங் கொண்டான். தன் பெண்ணின் விருப்பப்படி அதற்கு உமாதேவியின் மந்திரத்தை உபதேசித்தான்.

முன்னைப் பிறவியின் தவக்குறையை முடிக்கவந்த கௌரி, தந்தைபால் பெற்ற உபதேசமந்திரத்தை, பக்தி

சிரத்தையோடு நாத்தழும்பேறச் செபித்து வரலானுள். விருபாக்கனே தான்பெற்ற தவக்கொழுந்துக்கு ஏற்ற, குலநலத்தால் உயர்ந்தவனுய், வேதவித்துமாய் உள்ள பிரமசாரி ஒருவனை எதிர்நோக்கிக்கொண்டிருந்தான். மனத்துள் எப்பொழுதும் அதே சிந்தனை அவனுக்கு எழுந்துகொண்டிருந்தது.

கௌரிக்கு எட்டு ஆண்டுகள் நிரம்பின. விருபாக்கனே பெருங்கவலையோடு புறந்திண்ணையில் வீற்றிருந்தான். ஒருநாள் பக்கத்து ஊரிலுள்ள ஒரு வைணவப் பிரமசாரி பிச்சை கேட்பவனுய் அடுத்த இல்லில் நின்றுகொண்டிருந்தான். விருபாக்கன், அவனது கோத்திரம் முதலியவற்றைக் கேட்காமல், தான் தவத்தினுல் பெற்றெடுத்த கௌரியை அப்பிரமசாரிக்குக் கொடுக்கத் துணிந்தான். ஊழ்வினையும் சேர்ந்தது. ஆகவே விருபாக்கன் சலத்தைக்கொண்டு அவன் கையிற்பெய்து பெண்ணைத் தத்தஞ்செய்தான்.

விருபாக்கனது இந்நிலையைக் கௌரியினுடைய தாயாரும் உறவினரும் கேட்டார்கள். முதலில் மனம் தளர்ச்சி அடைந்தார்கள். இப்பிராமணனுடைய குலம், கோத்திரம், குடிமை, கல்வி, சூத்திரம், ஊர் முதலியவைகளைக் கேட்டறியாது கன்னியைத் தத்தஞ்செய்துவிட்டானே; இதற்கு என்செய்வோம் என்று கலங்கினுர்கள். பின்னர் அவனது கோத்திரம் முதலியவற்றைக் கேட்டறிந்தார்கள். இவன் நம் மரபுக்குச் சமமானவனே. ஆயினும் வைணவன் என்னும் குற்றமொன்றுண்டு. தானம் செய்தபிறகு இனிமேல் எவ்வாறு மறுப்பது; மணஞ்செய்து கொடுப்பதே ஏற்றது என்று இசைந்தார்கள்.

உறவினர்கள் இசைவினைப்பெற்ற விருபாக்கன், வேதத்துள் விதிக்கப்பட்ட எவ்வகை மணங்களுள் சிறந்ததும் முதலாவதுமாகிய பிரம மணத்தில் கூறிய விதிப்படி, தன் பெண்ணைப் பொன்னினால் புதைத்து, அக்கினி முன்பு அந்தப் பிரமசாரிக்கு மணஞ்செய்து கொடுத்தான். பின் பற்பல வரிசைப் பொருள்களையும் சீதனமாகக் கொடுத்து, கௌரியை மணமகனோடு அவனது நகரத்துக்கு அனுப்பிவைத்தான்.

வைணவப் பிராமணன் மணப்பெண்ணோடு தன் வீட்டில் புகுந்தான். அப்பொழுது அவனுடைய தாய் தந்தையர்கள் முன்னர் மகிழ்ந்தார்கள்; பின் மணமகளின் சிவவேடத்தையும், சிவசிந்தையையும் பார்த்துப் பொறாமை கொண்டார்கள்; தங்கள் உடம்புபோல மனமும் வெந்தார்கள்; கௌரியை வெறுத்தார்கள்; அவளை வேறாக ஒதுக்கிவைத்தார்கள்; பலவாறு அவளை நிந்திக்கவும் தொடங்கினாள் மாமி என்னும் அருங் கொடியாள். ஒருநாள் அக்கொடியாள் அயலூருக்கு உறவினர்வீட்டு மணத்திற்குச் செல்வதுபோல் பாவனை செய்தாள். அதற்கேற்பக் கௌரியைத் தனியேவைத்து விட்டு, வீட்டைப் பூட்டிக்கொண்டு இருவர்களும் போனார்கள்.

கௌரி மனமாசை ஒழிப்பது திருநீறே என்று உபநிடதங்கள் கூறுவதன் உண்மை உணர்ந்தவள். மண்ணை மாசுபட உடலிடைப் பூசும் வைணவர்கள் வீட்டைவிட்டு நீங்கியபின், வீட்டிலே தனித்திருக்கும் கௌரியானவள் சிவனடியார் ஒருவரையும் காணாது மனம் மாழ்குவாளாயினாள். உடன் சிந்திக்கலானாள். சிவனடியார்திறத்து அன்பு இல்லாத மனம் இரும்பு;

சிவனடியார்கட்கு நாள்தோறும் தொண்டு செய்யாத உடம்பு மரம்; காது கண் முதலிய ஐந்து உறுப்புக்களை யும் சிவனடியாரிடத்துச் செலுத்தாதவடிவம் பாவை; வேதத்திலே சொல்லப்படும் சைவநெறியல்லாத நெறி களே பிறவியைக் கொடுக்கும் வழிகள்; ஆகவே மக்க ளுயிர் அனைத்துக்கும் உறுதியைத் தருபவை இம்மை மறுமையின்பங்களே. அவைகளைக் கொடுக்கவல்லவர் எல்லாப் பொருள்களும் தாமாகவே உள்ள இறை வனேயாவான். அவ்விறைவனே தம்மை வழிபடும் அடியார்கட்கு அவர்கள் மனம், மொழி, மெய் ஆகிய மூன்றனுலும் செய்யும் தொண்டினை அறிந்தே வந்து வெளிப்பட்டு அருள்செய்வார். அவ்விறைவனை வழி பட்டுப் பத்திவழி நிற்போரின் பிறவித் துன்பத்தைப் போக்கும்பொருட்டு அவ்விறைவன் எடுத்த வடிவம் அடியாருடைய திருவேடமன்றோ? என்று இவ்வாறு சிந்தித்துக் கவலைகொண்டிருந்தாள்.

அவ்வமயம் கருணையே வடிவமாகிய இறைவன் நரை திரை முதிர்ந்த ஒரு விருத்தப்பிராமணனுக வடிவு மேற்கொண்டார். திருநீறு தரித்துத் தலை, கழுத்து, காது, மார்பு, புயம், கை ஆகிய அவயவங்களில் உருத் திராக்கமாலை தரித்துக்கொண்டார். கையில் தன்னைப் போல் பழகிய ஒரு பழைய பெரிய புத்தகத்தைத் தாங்கினர். சரிந்த கௌபீன உடையும், உத்தரீயம் அணிந்த தோளினையும் உடையவராய், தலை நடுங்கக் கோல் கையில் ஊன்றி, பெரும் பசியுடையார்போல் வீதிவழியேவந்து கௌரியின் வீட்டினை அடைந்தார்.

சிவனடியாரைக்கண்ட கௌரி வறிஞன் பெற்ற பெருந்தனம்போல் மனம் மகிழலானுள்; எழுந்தாள்;

வழிபட்டாள்; ஆசனத்தில் அமரச்செய்தாள்; மிகுந்த பணிவோடு எதிர்நின்று பெருமானே! உம்மை இங்கு நான் இக்கோலத்தில்வழிபட என்ன தவஞ்செய்தேனோ என்று கூறினள். விருத்தப் பிராமணர், பெண்ணே! பசித்து நாம் உன்னிடம் வந்தோம் என்ருர். அதற்குக் கௌரி அடியவரே! என்னைச்சார்ந்தவர்கள் வீட்டைப் பூட்டிக்கொண்டு போய்விட்டார்களே என்செய்வேன் என்றுகூறிக் கலங்கினாள்.

கௌரியின் அக்கூற்றைக்கேட்ட விருத்தப் பிராமணர், நீ உன் கையால் பூட்டைத்தொடு; உடனே பூட்டிய பூட்டு விடும்; நீ கதவைத் திறந்து விரைந்து சமைப்பாயாக என்ருர். தவத்தால் தோன்றிய கௌரி அவர்கூறியபடி கையை வைத்தாள். பூட்டு விட்டது. உள்ளேசென்று தனது வல்லமைக்கேற்பச் சமையல் செய்துமுடித்துப் புறத்தேவந்தாள். விருத்தப்பிராமணரைத் தொழுது உணவு உண்ண உள்ளெழுந்தருளும் என்று வேண்டிக்கொண்டாள். அவருடைய திருவடிகளை விளக்கி, அந்த நீரைத் தன் தலையில் தெளித்துக் கொண்டாள். உடன் அவரை உள்ளே அழைத்துச் சென்று ஆசனத்தில் அமரச்செய்தாள். அன்னம் கறி ஆகியவைகளை முறைப்படி இலையில் படைத்து, நறு மலர்கொண்டு அருச்சித்துத் தூபதீபம் காட்டி, இன் சொற்கூறி அமுதுண்ணுமாறு செய்வித்தாள்.

உணவு உண்டபின் விருத்தப் பிராமணர் தனது முதுமை நீங்கி, விபூதி உருத்திராக்கங்களெல்லாம் நீங்கப்பெற்று, மன்மதனையும் வென்ற அழகினைப்பெற்று, பதினறு வயது நிரம்பிய கட்டிளங்காளையாக அமர்ந்திருந்தார். கஸ்தூரி முதலிய வாசனைப் பொருள்களும்,

இரத்தின ஆபரணங்களும் அவர் மார்பில் இலங்கின. கற்பிற்சிறந்த கௌரி அக்காட்சியைக் கண்டு மனம் நடுங்கினுள்; கையை நெறித்தாள்; திகைப்புற்ருள்; உடலெல்லாம் வியர்த்து நாணி ஒருபுறத்தே ஒதுங்கி நின்ருள். இந்நிலையில் மணத்தின்பொருட்டு அயலூர் சென்றிருந்த வைணவர்கள், திரும்பிவந்து வீட்டினுள் புகுந்தார்கள்.

இவ்வாறு அவர்கள் வீட்டில் புகுதலும் காளை வடிவினராக இருந்த விருத்தப் பிராமணர், நெற்றியில் திருநீறணிந்த ஒரு குழந்தை வடிவங்கொண்டு, அணையாடையில்கிடந்து காற்பெருவிரலை அழுதுகொண்டே சுவைத்தார். கௌரியின் மாமி அதனைக் கண்டாள்; வெகுண்டாள்; கௌரியை நோக்கி இந்தக் குழந்தை யாருடையது? என்று கேட்டாள். அதற்குக் கௌரி தேவதத்தன் என்பவனுடைய மனைவி இங்குவந்தாள்; குழந்தையைக் கொடுத்துக் கொஞ்சநேரம் பார்த்துக் கொள்வாய் என்று சொல்லிப்போனுள் என்ருள்.

இவ்வாறு கௌரி கூறுவதற்குமுன்பே மாமியும் மாமனும் மனம் கலங்கக் கண்கள் சிவக்க கோபிக்கலானுர்கள். எலும்புமாலை பூண்டு சுடுகாட்டில் ஆடுகின்ற உருத்திரனிடத்தே அன்பு பூண்டவளுடைய குழந்தையின்மேல் நீ அன்புகொண்டவளாக இருக்கின்ருய்; அதனுல் நீ எமக்கு ஆகாய் என்றுசொல்லிக் குழந்தையோடு கௌரியை வெளியே தள்ளிவிட்டார்கள். தள்ளப்பட்ட கௌரி தாயில்லாக் குழந்தையின் முகத்தைப் பார்த்துத் தளர்வாளானுள்.

துன்பத்துக்கு இறைவனைத் தவிர வேறு எவரும் துணையாக மாட்டார்கள் என்பதை உணர்ந்த கௌரி,

சோமசுந்தரப் பெருமானை மனத்திடை எண்ணி வழி பட்டாள். தன் தந்தையார் இளமையில் உபதேசித்த உமாதேவியின் மந்திரத்தை உச்சரித்தாள். உச்சரித்த வுடன் அழுத குழந்தை விண்ணிடை இடபவாகனத் திலே சிவபெருமானுகத் தோன்றக் கண்டாள்.

இறைவன், இறைவியின் மந்திரத்தைச் செபித்த அந்தக் கௌரியை, அவ்வுமாதேவியின் வடிவமாக ஆக்கிப் பலருங்கண்டு வணங்க இடபத்தின்மேல் ஏற் றினர். தேவர்கள் மலர்மாரி சொரிந்தார்கள். இறை வன் ஆகாய மார்க்கமாக எழுந்தருளினர். யாவரும் களிப்புற்று அதிசயங்கொண்டார்கள்.

## 24. கால்மாறியாடின படலம்

விக்கிரமபாண்டியன், தன் புதல்வனுகிய இராச சேகரபாண்டியனுக்கு முடி சூட்டிவிட்டுத் தான் சிவ லோகத்தை அடைந்தான். இராசசேகர பாண்டியன், பெருமான் ஆனந்தவடிவமாய் வெள்ளியம்பலத்தில் நின்று ஆடும் நடனத்தில்வைத்த அன்பு மிகுதியால் பரதக்கலை ஒன்றனை ஒழித்து, ஏனைய அறுபத்துமூன்று கலைகளையும் ஏற்ற முறையில் கற்று இனிய முறையில் அரசாண்டு வருவானுயினுன்.

இப்பாண்டியமன்னன் காலத்தில் சோழநாட்டை ஆண்டவன் கரிகாற்சோழன் என்பவன். அவ்வரசன் அறுபத்துநான்கு கலைகளும் கற்றவனுய் விளங்கினுன். அவ்வரசன் திருவானைக்காவிலுள்ள இறைவனிடம் அன்புபூண்டு ஒழுகினுன். அச்சோழனுடைய அவையி லுள்ள ஒருபுலவன் வந்து இராசசேகர பாண்டியனைக் கண்டான். அரசே! எமது சோழமன்னனுக்கு அறு பத்து நான்கு கலைகளும் வரும்; உனக்கு அவைகளுள் ஒன்று வாராது; அது பரதக்கலை என்ருன். புலவனது அச்சொல் பாண்டியமன்னனுக்கு மிக்க மானத்தை மூட்டியது. அதனுல் இராசசேகர பாண்டியன் பெரி தும் துன்பத்துள் மூழ்கினுன். இறைவனுடைய திரு நடனத்தை நானும் ஆடுதற்கு உரியநிலை உண்டாகி விட்டதே; இதுவும் இறைவனது திருவருள் போலும் என்று எண்ணினுன். உடனே பரதநூலில் வல்ல புலவரை அழைத்து அவர்களுக்கு வேண்டியன தந்து அக்கலையைக் கற்ருன்.

பாண்டியன் பரதக்கலையைப் பயிலுங்கால், அவனுடம்பு வருந்தி மிகவும் நோவுற்றது. இந்த வருத்தம் வெள்ளியம்பலத்தாடும் சிவபெருமானுக்கும் உண்டே; பிரம விட்டுணுக்களாலும் காணமுடியாத திருவடி வருந்தும்வண்ணம் நெடுங்காலம் நிற்கின்றதே. இக் கலையைக் கற்ற நான் இவ்வருத்தத்தைப் பொறுத்துக் கொண்டிருப்பதா? என்று எண்ணினான்.

இறைவனோ தன்னை அடுப்பவரது துன்பங்களைப் போக்கி அவர்களுக்கு இன்பத்தையும் வீட்டையும் கொடுத்தருளுபவர். அத்தகைய பெருமானின் அரிய கூத்தை நான் எவ்வாறு தடுப்பது? இது கூடாது; ஆயினும் அவ்விறைவனது அரிய திருவடி வருந்துமே என்று மனத்திடையெண்ணி வருந்துவானாயினான்.

பின்னர் ஒருவாறு துணிந்து எழுந்தான். சிவராத்திரியன்று திருக்கோயிலை அடைந்தான். சிவபெருமானுக்கு நான்கு யாமமும் விசேடபூசை செய்வித்தான். வெள்ளியம்பலத் திருக்கூத்தையும் தரிசித்தான். கண்ணீர்வழியத் தலைமீது கைகுவித்து எதிரே நின்றான். பெருமானே! நின்ற திருவடியை எடுத்துவீசி, எடுத்த திருவடியைக் கீழே ஊன்றி இன்று அடியேன் காணுமாறு மாறியாடல்வேண்டும் என்று வேண்டினான். அவ்வாறு மாறியாடினால் அடியேன் மனத்துயரமும் தீரும் என்றும் கூறினான். அவ்வாறு மாறியாடாது போவீராயின் அடியேன் இறந்தொழிவேன் என்றும் உறுதியாகக் கூறி எதிரேநின்றான்.

அவ்வாறு நின்ற பாண்டியன், நெடுநேரமாகியும் இறைவன் மாறியாடாமையால் எதிரே தன் உடைவாளை நாட்டி அதன்மேல் குப்புற்று விழப்புகுந்தான்.

புகுமுன் அன்பிற்கு எளிமையில் இரங்கும் பெருமான் தமது இடத்தாளை ஊன்றி, வலத்தாளை எடுத்து வீசி மாறியாடிக் காட்டினூர். பாண்டியனுடைய மனக் கவலையும், அவனைப் பற்றியிருந்த மூன்று மலங்களும் அழிந்தன. பாண்டியனும் பேரானந்தப் பெருங்கடலில் மூழ்கினூன். பின் பாண்டியன் மனந்தெளிந்து தனது முக்கரணங்களும் ஒன்றுபட இறைவனை வாயாரப் புகழ்ந்து துதித்துப் பாடினூன்.

பெரியாய் சரணம்! சிறியாய் சரணம்!
கரியா கியஅங் கணனே சரணம்
அரியாய் எளியாய் அடிமா றிநடம்
புரிவாய் சரணம்! புனிதா சரணம்!

நதியா டியசெஞ் சடையாய்! நகைவெண்
மதியாய்! மதியா தவர்தம் மதியிற்
பதியாய்! பதினெண் கணமும் பரவுந்
துதியாய் சரணம்! சுடரே சரணம்!

இவ்வாறு துதிசெய்து வணங்கிய பாண்டியன், இத்திருநடனத்தை எல்லோரும் கண்டுகளிக்கும்படி எக்காலத்தும் இவ்வாறேநின்று ஆடியருள்க என்று வேண்டினூன். இறைவனும் அப்பாண்டியனுடைய வேண்டுகோட்கு இணங்கி அன்றுதொடங்கி இன்று வரை அம்மாறியாடும் திருக்கோலத்திலேயே இருந்து அருள்செய்கின்றூர்.

# 25. பழியஞ்சின படலம்

இராசசேகர பாண்டியன் சிலநாள் இம்முறையில் சிறக்க அரசாண்டுவந்தான். பின்பு தன் புதல்வனாகிய குலோத்துங்கபாண்டிய மன்னனுக்கு முடி சூட்டித் தன் அரசினைக் கொடுத்தான். பின்னர் தான் வெள்ளியம்பலத்தே நடமாடும் இறைவனது திருவடி நிழலில் கலந்து இன்புறலானான்.

குலோத்துங்க பாண்டியன் நாள்தோறும் சோமசுந்தரக் கடவுளை முறைப்படி வழிபடுவது என்று நியமங்கொண்டு ஒழுகி வருவானாயினான். அவ்வரசனுக்குப் பல மனைவியர்கள் இருந்தார்கள். ஒவ்வொரு மனைவியரும் பல குமாரர்களைப் பெற்று வாழ்க்கை நடத்தினார்கள். அம்மக்கள் பலருள்ளே முன்னர்ப் பிறந்தவன் பெயர் அனந்தகுணன் என்பதாகும்.

இவ்வாறு பாண்டியன் அரசியற்றிவரும் நாளிலே, திருப்புத்தூரினின்றும் ஒரு பிராமணன் தன் மனைவியோடும் குழந்தையோடும் தனது மாமன் வீடாகிய மதுரையை நோக்கிக் காட்டுவழியே நடந்துவருவானாயினான். வழிநடந்து வருங்கால், மனைவி தண்ணீர் வேட்கையுற்று வருந்தினாள். வருந்தும் மனைவியை ஓர் ஆலமரநிழலில் குழந்தையுடன் இருக்கச்செய்தான். தண்ணீர் இருக்குமிடம் தேடிப்போயினான்.

அந்நிலையில் அப்பார்ப்பனியின் ஆயுள் முடிந்துவிட்டது. இயமதூதர்கள் தங்கள்பால் பழிவைத்துக் கொள்ளவில்லை. ஆலமரத்துள் முன்பே எய்யப்பட்ட

ஓர் அம்பு தோத்திக்கிடந்தது. காற்றடிக்க அவ்வம்பு அங்கிருந்த பார்ப்பனி வயிற்றில்பட்டு ஊடுருவியது. அவ்வாறு தைத்தலும் பார்ப்பனி உயிர்நீத்தாள்.

அவ்வமயம் அம்பு தொடுத்த வில்லையுடைய ஒரு வேடன் வெய்யிலுக்காக ஒதுங்கி அவ்வாலமரத்தின் நிழலிடை ஒருபுறத்தே தங்கி நின்றான். பிராமணன் நீர் கொண்டுவந்து மனையாளைப் பார்க்க, அவள் தன் மார்பில் குருதி பெருக்கெடுத்தோட இறந்துகிடந்தாள். பார்ப்பனியைக்கண்ட பார்ப்பனனுக்கு என்ன செய்வதென்று தோன்றவில்லை. மனங்கலங்கினான்; அறிவழிந்தான். இவளைக் கொன்றவர் யாராயிருக்கலாம் என்று சுற்றுமுற்றும் தேடியலைந்தான். முடிவில் இளைப்பாற நின்ற வேடனை வில்லுடன் கண்டான். இவனே என் மனைவியைக் கொன்றிருக்கவேண்டும் என்ற முடிவிற்கு வந்தான். உடன் பாண்டியன்மேல் ஆணையிட்டான். அவ்வேடன் என்னகூறியும் கேளாமல் அவனையும் வலிந்து அழைத்துக்கொண்டு, இறந்த மனைவியின் உடலைத் தன்முதுகில் சுமந்துகொண்டு, குழந்தையை அரையில் அணைத்துக்கொண்டு விம்மிவிம்மி அழுது மதுரைநகரை அடைந்தான்.

மதுரையை அடைந்த பார்ப்பனன் பாண்டியனுடைய வாயிலை அடைந்தான். வேடனை முன்னர் விட்டான். மனைவியின் இறந்த உடலைக் கீழே கிடத்தினான். வாயிற்காவலர் கேட்கக் கண்ணீர் சோர இது முறையோ! முறையோ! என்று ஓலமிடலானான். இவ்வேடன் மனையாளைக் கொலை செய்துவிட்டான்; இது முறையோ! நீதியோ! என்று கதறிப்பதறினான். மேலும் உறங்குமாயினும் அரசாணைவழியே உலகம்

தருமநெறியினின்று பிறழாமல் காக்கப்படும் என்னும் உண்மையும் பொய்யாகிவிட்டதோ என்றும் கூறிப் புலம்புவானுயினுன்.

வாயிற் காவலர்கள் பாண்டியன்முன்பு சென்று அரசே! நம்கோயில் வாயிலில் ஒரு பிராமணன் தன் மனைவியைக் கொன்றவன் இவன் என்று ஒருவேடனை முன்விட்டுப் பிரேதத்தைப் பின்னே போட்டு முறையிடுகின்ருன் என்று கூறினுர்கள். உடன் பாண்டியன் அஞ்சி, என் ஆட்சிமுறைமை மிக நன்று என்று கூறி மனம் சோர்வுற்றுப் புறத்தே வந்தான். பிராமணனை நோக்கினுன். ஐயா! நீர் ஏன் துன்பமுற்று வருந்துகின்றீர்? சொல்லும் என்ருன். பிராமணன் அரசே! நான் இவளை ஓர் ஆலமரநிழலில் இருக்கச்செய்து தண்ணீர் கொண்டுவரப்போனேன். தண்ணீரைக் கொண்டு வருமுன் இவ்வேடன் இவளைக் கொன்றுவிட்டான் என்று கூறினுன்.

பாண்டியன் பிராமணன் கூறியதைக் கேட்டான். வேடனைப் பார்த்து வினவினுன். வேடன் அரசனை வணங்கி, அரசே! அடியேன் இளைப்பாறும்பொருட்டு அந்த மரத்தின் ஒருபுறத்தே நின்றேன்; நான் இவளைக் கொல்லவில்லை; கொன்ற வேறு எவரையும் காணவும் இல்லை என்று கூறினுன்.

அவ்வேடன் கூறியதைக் கேட்டு எதிரேநின்ற காவலர்கள், இவருடைய உடம்பிலே அம்பு பாய்ந்திருப்பதன் காரணம் என்ன? என்று வினவினுர்கள். வேடன் உண்மையாகவே நான் ஒன்றும் அறியேன் என்ருன். அதுகேட்ட அமைச்சரும் பிறரும், இவன்

இக்கொலை நான் செய்யவில்லை என்று சொல்லுவதை யொழியச் செய்தேன் என்று ஒப்புதல் கொடுப்பானு? தண்டித்தால்தான் இவன் உண்மையைக் கூறுவான் என்று கூறினுர்கள். பின் பாண்டியனும் அவ்வாறே செய்து உண்மையை அறிந்து சொல்லுங்கள் என்ருன்.

தண்டஞ்செய்வோர்கள் அவ்வேடனைத் தண்டித்துக் கேட்டார்கள். வேடனும் முன்னர் சொல்லிய அதனையே மாற்ருமல் கூறினுன். இன்னும் நன்ருகத் தண்டித்துக் கேட்டுப்பாருங்கள் என்ருன் மன்னன். அப்பொழுதும் வேடன் மாறிச் சொல்லவில்லை.

அவ்வமயம் பாண்டியன் அமைச்சர்களை நோக்கி, இவன் நாம் கொடுக்கும் கொடிய தண்டனைகளுக்கும் அஞ்சுகின்ருனில்லை; ஒருசொல்லாகவே சொல்லுகின்ருன்; மேலும் இவனுடைய முகத்தில் கொலை செய்த குறிப்பு ஒருசிறிதும் தோன்றவில்லை; பறவை, மிருகம், பகைவர் ஆகியோரைக் கொன்ருல் இவ்வேடனுக்குப் பயன் உண்டு; இப்பெண்ணைக் கொல்வதால் இவன் அடைய இருக்கும் பயன் யாது? ஒருகால் வேட்டையாடியோர் அம்பு குறிதவறி இவளுடம்பில் பாய்ந்து கொலை செய்திருக்குமோ? என்று பலவாறு மன்னன் எண்ணுவானுயினுன். உடன் பிராமணனை நோக்கி இவ்வுண்மையை நன்ருக ஆராய்ந்து உன் கவலையை ஒழிக்கின்றேன்; அஞ்சவேண்டாம்; உன் மனையாளின் இறுதிக் கடன்களைச் செய்து முடித்துவிட்டு வருக என்று கூறிப் போக்கி, வேடனைச் சிறையிலிட்டான்.

பின்பு பாண்டியன், மனையாளுக்கு இறுதிக்கடன் முடித்து வந்த பிராமணனைத் தன் கோயில் வாயிலில் இருக்கச் செய்தான். தான்மட்டும் தனித்துச் சென்று

சோமசுந்தரக் கடவுளை வணங்கினுன்; பின்வருமாறு கூறலானுன். பெருமானே! பார்ப்பனி கொலையுண்டது வேடனுலோ? பிறராலோ? யாரால்நேர்ந்தது என்பதை அறநூல்கொண்டு அறியமுடியவில்லையே. நீர் உமது பெருங்கருணையாலே இந்த வழக்கின் உண்மையை உணர்த்தியருளவேண்டும் என்று வேண்டினுன்.

அவ்வமயம் விண்ணினின்றும் அசரீரியாக, வேந்தனே! இந்த மதுரைமா நகரத்துக்குப் புறத்தேயுள்ள செட்டித்தெருவில் இன்றிரவு ஒரு திருமணம் நடக்க இருக்கின்றது; அத்திருமண வீட்டுக்கு நீ பிராமணனுடன் வா; இவ்வழக்கின் உண்மையை உணர்த்துகின்றேம் என்று ஒரு வாக்குத் தோன்றியது. அசரீரி வாக்கைச் செவியேற்ற பாண்டியன், அன்றிரவு மாறு வேடம்பூண்டு பிராமணனுடன் அத்திருமணவீட்டின் ஒருபுறத்தே அமர்ந்திருந்தான்.

அவ்வமயம் இயமனுல் விடுக்கப்பட்ட தூதர்கள் இருவருள் ஒருவன் மற்றவனைப்பார்த்து, இன்றைக்கே இந்த மணமகனுடைய உயிரைக் கொண்டுவரும்படி இயமன் ஆணையிட்டுள்ளானே; இவனுடம்பில் ஒரு நோயும் இல்லையே; எக்காரணமுமின்றி இவனுயிரை எவ்வாறு கொண்டுசெல்லுவது? என்று கேட்டான். அதற்கு அடுத்தவன், இன்றைய பகற்போதிலே ஆலமரத்தில் தொத்திக்கிடந்த அம்பினை அதன் கீழிருந்த பார்ப்பனிமீது காற்றினுல் விழும்படிச்செய்து அவள் உயிரைக் கவர்ந்தோம் அல்லவா? அவ்வாறே இப்பொழுது நடைபெறும் இத்திருமண ஆரவாரத்திலே, புறத்தேயுள்ள பசுவைக் கட்டவிழ்த்துவிட்டு, மணமகனை முட்டச்செய்து உயிர்கவர்வோம் என்றுன்.

அவர்களது இக்கூற்றைக் கேட்ட பாண்டியன் பிராமணனைப் பார்த்து இயமதூதுவர்களது வார்த்தையைக் கேட்டாயா? என்றான். அதற்குப் பிராமணன் இம்மணமகன் இவர்கள் கூறியவாறு இறந்தால், என் மனைவி இறந்ததும் அப்படியே என்று நாம் முடிவு செய்யலாம்; பொறுத்திருந்து பார்ப்போம் என்றான்.

திருமணம் தொடங்கும்பொழுது மணமுரசின்னொலியினாலே ஒரு பசுவானது வெருண்டு கயிற்றினை அறுத்துக்கொண்டு ஓடி மணமகனை முட்டிற்று. உடனே அவன் இறந்தான். மணமகன் பிணமகன் ஆயினான். மணப்பறை பிணப்பறையாயிற்று. மங்கையர்களது வாழ்த்தொலி அழுகை ஒலியாக மாறிற்று. கணத்தில் தோன்றி கணத்தில் மறையும் இவ்வுடம்பினால் பெறக்கூடிய பயனை அறிவுடையவரே பெறுவர்; அறிவில்லாதாருக்கு ஒருவகைப் பிரயோசனமும் இல்லை.

மணமகனே பிணமகனாய்
　　மணப்பறையே பிணப்பறையாய்
அணியிழையார் வாழ்த்தொலிபோய்
　　அழுகையொலி யாய்க்கழியக்
கணமதனிற் பிறந்திறும்இக்
　　காயத்தின் வரும்பயனை
உணர்வுடையார் பெறுவர்;உணர்(வு)
　　ஒன்றுமிலார்க்(கு) ஒன்றுமிலை.

பிராமணன் இச்செயலைக்கண்டு என்ன காரியஞ் செய்தேன் என்று கூறித் தன் மனைவி இறந்ததனால் அடைந்த துன்பத்தைக்காட்டிலும் அதிக துன்பத்தை அடைந்தான். உடன் பாண்டியன் பிராமணனோடும்

தன் அரண்மனையை அடைந்து அமைச்சருக்கும் ஏனையோருக்கும் நிகழ்ந்த அச்செயலை எடுத்துக்கூறினன். பின்பு பிராமணனுக்கு நீ மீண்டும் திருமணம் செய்து கொள்க என்று கூறி வேண்டும்பொருள் கொடுத்து அவனை அனுப்பினன்.

பிராமணனை அனுப்பியபின்னர் வேடனைச் சிறையினின்றும் விடுவித்தான். நாம் அறியாமையினல் செய்த இத்தண்டனைகளை நீ பொறுத்துக்கொள்ளக்கடவாய் என்றான். மேலும் அவ்வேடன்மேல் மிகுந்த கருணையுடையவனாய் வேடனுக்கு வேண்டிய பொருள்களைக் கொடுத்து அவனையும் அனுப்பிவிட்டான்.

பின்னர், சோமசுந்தரக் கடவுளின் சந்நிதியை அடைந்து வணங்கினன்; பெருமானே! நீர் எளியேன் பொருட்டுப் பழியஞ்சுநாதராயிருந்தீர் என்று சொல்லி வழிபட்டு விசேடபூசைகள் செய்வித்து, உலகிற்குயிராயிருந்து நன்முறையில் அரசியற்றி வருவானாயினன்.

# 26. மாபாதகந்தீர்த்த படலம்

பாண்டிய நாட்டைக் குலோத்துங்க பாண்டியன் நெறிமுறை தவருது அரசாண்டுவந்தான். அக்காலத்தில் அவந்தி நாட்டில் ஒரு பிராமணன் இருந்தான். அவனுடைய இல்லக்கிழத்தி இரதியையும் வென்ற பேரழகு உடையவள். அவளுக்கு ஒரு கொடிய பாவி மகனுகப் பிறந்தான். அம்மகன் காமம் மீதூரத் தன் தாயை மனையாளாக மருவ விரும்பினுன். அத்தாயும் அழகு காரணமாக அதற்கு உடன்பட்டாள்.

மகனுகிய இக்கொடிய பாவி தாயைக் கலந்து ஒழுகும் ஒழுக்கத்தை அவன் தகப்பனுர் குறிப்பினுல் உணர்ந்தார். அச்செயலைப் பிறருடைய காதுகளுக்கு எட்டாவண்ணம் தன் மனத்தடக்கினுர். பின்னெரு நாள் இரவு வெளிப்படையாகவே கண்டுகொண்டார். கண்ட அந்நிலையிலும் அவர் ஒன்றும் பேசாராயினுர். அப்பொழுது மகன் தகப்பனைக் கொலை செய்ய எழுந்தான். தாயார் மகனை நோக்கி மகனே! நீ தாயைத் தாரமாக மருவினுய்; அத்துடன்நில்லாது தகப்பனையும் கொல்ல எண்ணினையாயின் நீ படாத துயரப்படுவாய் என்று கூறி மகனைத் தடுத்தாள். அதற்கு அந்தப் பாவி காமிகளுக்குத் தகப்பனும் தாயும் ஒன்றே; இரக்கம் தருமம் என்பது என்ன? என்று கூறிவிட்டு ஒரு மண் வெட்டியை எடுத்துத் தனது தகப்பனை வெட்டிக் கொன்ருன்.

கொன்ற பாதகன் இரவே தகப்பனைத் தகனஞ் செய்துவிட்டுக் கையில் கிடைத்த பொருள்களோடும்

தாயாரோடும் மலைகள் பொருந்திய பெருங்காட்டினை அடைந்தான். அவனைக் கண்ட மலையுறை வேடர்கள் அவனையடைந்து அவன் கைப்பொருள்களையும், அப் பார்ப்பனியையும் கொண்டுபோயினார்கள். தூரத்தே சென்று நன்றாக வாழலாம் என்று அப்பாதகன் எண்ணிய எண்ணமொன்று; அவனுக்கேற்பட்ட வண்ணமொன்று. நாம் ஒன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைக்கும் என்னும் பழமொழி அப்பாதகனிடத்தே பலித்தது. பிதுரரைக் கொன்றபாவம் பற்றியது.

பற்றியநிலையில் அது ஆ ஆ என்றழும். ஐயகோ பாவம் பாவம் என்று கூறும். தன் கையை அடித்து ஆலிக்கும். நிழல்போல் அவனை விடாது பின்பற்றித் தொடரும். புண்ணிய தலத்தையோ, புண்ணிய தீர்த்தத்தையோ நாடவிடாது. பெரியோரைச் சாரவிடாது. சிவன் பெயரோ, சிவன் புகழோ அவன்காதிடைப் புகவொட்டாது. உறக்கம் என்பதே அவனிடம் இல்லாது அகன்றது. எப்பக்கந்திரும்பினும் அப்பக்கம் அவனைப் பற்றியிழுக்கும். இவ்வாறு பலவித துன்பங்களையும் அடைந்து, மாபாதகம் நீங்குகிறநிலையில் மதுரையை அவன் அடைந்தான்.

அவ்வமயம் சோமசுந்தரப்பெருமான் ஒரு வேடவடிவம் கொண்டு, வேட்டுவச்சி வடிவங்கொண்ட அம்மையாரோடு கோபுரவாயிலின் பக்கலில் இருந்து சூதாடிக்கொண்டிருந்தார். மிகுந்த துன்பத்துடனே மாபாதகன் அவ்விடம்நோக்கிவந்துகொண்டிருந்தான். அவனைப் பார்த்த பெருமான் அம்மையாரை நோக்கி, ஒருவரும் மனத்தாலும் நினைத்தற்கரிய கொடிய பாவி வருவதைப்பார் என்று கூறத் தொடங்கினார்.

காமநோயினுல் விழுங்கப்பட்டவருடைய மனம், செல்லுமிடம் செல்லா இடம் என்னும் வேறுபாடு அறியாது. குலம், குணம், ஒழுக்கம் ஆகியவைகள் குறைவுறும் என்பதையும், பழிபாவங்கள் வந்துசேரும் என்பதையும் சிறிதும் எண்ணிப்பாராது. உயிருக்கு உடனே இறுதிவந்துசேரும் என்பதையும் எண்ணுது. ஆகவே ஆன்ரூேர், அறிவைக் கெடுப்பவை கள்ளும் காமமும் என்று கூறுவர். அவைகளுள்ளே காம மானது நினைப்பினும் காணினும் கேட்பினும் விஷம் தலைக்கொண்டாற்போல் கொண்டவரின் அறிவைக் கெடுத்துவிடும். கள்ளோ அப்படிக் கெடுக்காது. தன்னை உண்டபோதுமாத்திரம் அறிவைக்கெடுக்கும். கொலைகட்கெல்லாம் மூலகாரணம் காமமே. களவு, கள் இவைகளைச் செய்தற்கும் உண்டற்கும் காமமே காரணமாகும். ஆகையால் மக்கட்கு நரக பூமியைக் காணியாகக் கொடுப்பது காமமே என்று சொல்லி யருளுவாராயினர்.

கொலைசெய்த பழியினுலே பெருந்துன்பமடைந்து அங்குவந்த மாபாதகனுடைய முகத்தைப் பார்த்தார். பார்த்த பெருமான், ஏ பார்ப்பானே! நீ ஏன் வருந்தி மெலிகின்ருய்? என்று கேட்டார். இறைவனுடைய திருக்கடைக்கண் நோக்கினுலே சிறிது பாவம் தீர்ந்தது. சுய அறிவு தோன்றிற்று. உடன் பார்ப்பான் தான் தாயை மருவியதும், தந்தையைக் கொன்றதும், அந்தப் பாவம் தன்னைப் பிடித்து வருத்தியதும், அது எங்கும் தீராமல் இங்கு அடைந்ததுமாகிய செயல்களை அழுது கொண்டே அவரிடம் கூறினுன்.

பரமகருணையோடு அங்கு வீற்றிருந்த பரம்பொருள் அப்பார்ப்பானைப் பார்த்து, நீ செய்த இந்தப் பாவம்

இங்கேயன்றி வேறு எங்கே போனாலும் தீராது; உன் பெயரைச் சொன்னவரன்றி அவர் சுற்றமும் நரகத்தில் விழும்வண்ணம் நீ செய்த இக்கொடிய பாவத்தைப் போக்கவல்லவர் யாவர் உளர்? நாம் உன்மீது திரு நோக்கஞ்செய்தலினால் இப்பாவம் நீங்கும் வண்ணம் உறுதிகூறுவோம் கேள் என்று கூறலானார்.

கதிரோன் உதயமாகும் முன்னே நீ உறக்கத்தி னின்றும் எழவேண்டும். உடன் நித்திய கடன்களை முடித்துக்கொண்டு அறுகம்புல் கொய்து பசுவுக்குக் கொடுக்கவேண்டும். மூன்று காலத்திலும் நீ திருக் கோயில் புறத்தொட்டித் தீர்த்தத்தில் நீராடி, சிவபெரு மானை நாற்றெட்டுமுறை அங்கவலமாக வரவேண்டும். சிவனடியார்கட்குத் தொண்டினைச் செய்யக்கடவாய். பிச்சையேற்று ஒருபொழுது உணவு உண்ணுவாயாக. நீ இம்முறையில் நின்றாயாயின் உன்னை வருத்தும் இப் பாவம் நீங்கும் என்று அருள்செய்தார். அம்மையார், பெருமானே ! அளவற்றகாலம் நரகிடை வீழ்ந்தாலும் உய்யமுடியாத இப்பாவிக்கு உய்யும்வகை அருளக் காரணம் என்னை என்று வினவினாள்.

அம்மையின் கூற்றைக் கேட்ட சிவபெருமான் எத்துணை கொடிய பாவத்துக்கும் அஞ்சாமல் செய்த பெரும்பாதகத்தினாலே கட்டுண்டு எவ்விடங்களிலும் தீராமல், வேறுகளைகணும் இல்லாமல் வந்தடுத்தவனைக் காப்பது அல்லவா காப்பு என்று கூறினார்.

*அடுபழி அஞ்சா நிச*
*ராயினும் நினைக்கின் அச்சம்*
*படுபழி அஞ்சான் செய்த*
*பாதகத் தொடக்குண்(டு) எங்கும்*

விடுவகை இன்றி வேறு
　　களைகணும் இன்றி வியக்
கடவனைக் காப்ப தன்றோ
　　காப்பென்றான் கருணை மூர்த்தி.

அம்மையார் நீர் எந்த ஒன்றையும் செய்தற்கும், செய்யாமைக்கும், மற்றொன்றைச் செய்தற்கும் உரிய ஆற்றல் உடைய கருணைவள்ளல். நீர் எண்ணினால் எத்துணைப் பெரிய பாவத்தைச் செய்தோரும் உய்தி பெறும் வண்ணம் செய்துவிடுவீர். இது உமக்கு ஒரு விளையாட்டு என்று மகிழ்வோடு கூறினாள். அங்கிலேயே இறைவன் இறைவியாரோடு மறைந்தருளினார்.

இந்நிகழ்ச்சியைக் கண்ட பார்ப்பான் ஆச்சரிய முற்று இறைவன் அருளியபடியே தவவொழுக்கத்தை மேற்கொள்வானானான். மூன்றுமாத அளவிலே மாபா தகம் நீங்கப்பெற்று, தேவவடிவமானான். சோமசுந்தரக் கடவுளுடைய திருவடிகளிலே பல பாமாலைகள் பாடி அணிந்து மகிழ்ந்தான். முடிவில் இறைவனோடு கலந்து பேரின்பப் பெருவாழ்வினையும் பெற்றான்.

இப்புறத்தொட்டித் தீர்த்தம் மாபாதகத்தையே போக்குமென்றால் ஏனைய நோயினால் உறும் துன்பங் களையும் போக்கியருளும் என்பதற்கு ஓர் ஐயமின்று. இச்செயலினை அறிந்த அரசரும் அமைச்சரும் நகர மாந்தரும் இறைவன் பெருங்கருணையினை எண்ணிப் பெரிதும் வியப்படைந்து மகிழ்ந்தார்கள்; பேரானந்தப் பெருங்கடலில் மூழ்கினார்கள்.

# 27. அங்கம் வெட்டின படலம்

குலோத்துங்கன் பாண்டியநாட்டைச் செங்கோன் முறை வழுவாது ஆண்டுவந்தான். அவன்காலத்திலே வேற்று நாட்டிலிருந்து வந்த வயதுமுதிர்ந்த ஒருவன் வாள்வித்தை சொல்லிக்கொடுத்துக்கொண்டிருந்தான். அதனால் தனக்குக் கிடைக்கும் வருவாயைக்கொண்டு வாழ்க்கை நடத்திவந்தான். அவன் நாள்தோறும் சென்று சோமசுந்தரக் கடவுளை வழிபடும் நியமத்தைத் தவறாமல் மேற்கொண்டு வந்தான். அதனால் அவன் இறைவன்பால் என்றும் மாறாத அன்புடையவனாக வாழ்ந்தான்.

அவ்வாசிரியனை வழிபட்டுப் பல மாணாக்கர்கள் வாள்வித்தை கற்கலானார்கள். கற்கும்மாணவர்களுள் சித்தன் என்னும் ஒரு மாணவன் உய்வகையறியாப் பாவியாக இருந்தான். அவன் முன்வினை காரணமாக வாள்வித்தையில் மிகவும் மேம்பட்டு விளங்கினான். அதனால் அவன் பெரிதும் கர்வம் உடையவனானான்.

அச்சித்தன் தனக்கு வாள்வித்தை பயிற்றிய தன் ஆசிரியனுக்கு மாறாகத் தானும் வாட்படைபயிற்றும் ஒரு கூடத்தைச் சமைத்தான். அதில் பல மாணவர்க்கு வாள்வித்தை கற்பிக்கத் தொடங்கினான். அது காரணமாக ஆசானைக்காட்டிலும் அதிகமான ஊதியம் அவனுக்குக் கிடைக்கலாயிற்று.

செல்வத்திடத்து உண்டான ஆசை அவனுக்கு அவ்வளவில் நிற்கவில்லை. ஆசானுக்குக் கிடைக்கும்

ஊதியத்தையும் தான் பெறவேண்டும் என்று பேராசை கொண்டான். அதனுல் அவன் அவ்வயோதிக ஆசானை ஊரினின்றும் ஒட்டக்கருதினுன். அவ்வாசானிடத்தே கற்கும் மாணவர்களது மனத்தை மாற்றி, தன்னிடம் வருமாறு செய்யலானுன். இவ்வாறு ஒவ்வொருநாளும் தன் ஆசானுக்கு அவன் இடையூறுசெய்துவந்தான்.

சித்தன் தன்னுடைய ஆசானில்லாத சமயத்தில் ஆசானுடைய இல்லாளிடம் சென்று தகாதமுறையில் பேசுவான். இடமுண்டோ? இடமுண்டோ? என்று அடுத்தடுத்துக் கேட்பான். அவ்வாறு கேட்பதற்கு அவன் ஒருசிறிதும் அஞ்சுவதில்லை. இவ்வாறு அவன் கேட்கவும் அவள் ஒன்றும் கூருது வாளா இருந்தாள். மற்றொருநாள் ஆசானின் வீட்டிற்குச்சென்று அவள் கையைப்பற்றி அப்பாதகன் இழுத்தான். அவள் அவனைத் தள்ளிவிட்டு வீட்டினுள் போய், கதவைத் தாளிட்டுக்கொண்டு தன்னுடைய கற்பைக் காப்பாற்றிக்கொண்டாள். சித்தனே காமத்தீ தன்னை வெதுப்பப் போவானுயினுன்.

கற்பிற்சிறந்த அக்காரிகையோ அப்பாவியின் இழிசெயலை எண்ணி எண்ணி மனம் வெதும்பினுள். இவ் விழிசெயலைத் தன் கணவனிடமும் கூருது மனத்துள் அடக்கினுள். உயிருக்கு உயிராக விளங்கும் சோமசுந்தரக்கடவுளை எண்ணி ஏங்கினுள்.

அன்புடையார்க்கிரங்கும் பரமன் இவ்வபலையின் எண்ணத்தை அறிந்து, வாளாசிரியன்போல் வேடங் கொண்டார்; சித்தனிடம் சென்ருர்; சித்தா! காளையாகிய நீயும், வயோதிகனுகிய நாமும் வாட்போர்

செய்து நமது வலிமையை அளந்தறிவோம்; பட்ட ணத்தின் புறத்தே நாளை போருக்கு வா; நாமும் அங்கு வந்து சேருகின்றோம் என்றார். அவர் கூற்றுக்குச் சித்தனும் மகிழ்ந்து போர்செய்தற்கு உடன்பட்டான். வாளாசிரியர் திரும்புங்கால் சூரியனும் மேற்றிசையை அடைந்தான்.

மறுநாள் செய்ந்நன்றி கொன்ற மாபாதகனாகிய சித்தன் விரமடந்தையை முறைப்படி வழிபட்டான். கச்சினைக்கட்டி அதனிடை வாளையும் செருகிக்கொண் டான். பரிசையைக் கையில் எடுத்தான். முன்னாளில் ஆசிரியர் கூறிய ஊரின்புறத்தேயுள்ள போர்க்களத்தை அடைந்தான். வாளாசிரியராக வேடங்கொண்ட சிவ பெருமானும் திருநீறணிந்து, கச்சுக்கட்டி வாளும் பரிசையும் தாங்கிச் சித்தனுக்கு எதிராக வந்தார்.

சிவபெருமானும் சித்தனும் எண்ணற்ற மக்கள் காண மிக நீண்டநேரம் எதிரெதிர் நின்று போர்செய்ய லானார்கள். பின்னர் சிவபெருமான் அங்குள்ள அனை வரும் கேட்க, குருபத்தினியை எண்ணிய உன் மனத் தையும், இன்பங்குறித்துப் பேசிய உன் நாக்கையும், தொட்ட கையையும், பார்த்த கண்ணையும், காத்துக் கோள்; காத்துக்கொள் என்று கூறிக்கூறி அவ்வுறுப் புக்களையெல்லாம் வாளினால் வெட்டினார். முடிவில் தலையையும் வெட்டி வீழ்த்தி மறைந்தருளினார்.

போர்க்களத்தில் நின்ற பலருள்ளே, வாள்வித்தை கற்ற மாணாக்கர்கள், தங்கள் ஆசிரியரைக் காணாது வீட்டிலே போய்த் தேடினார்கள். அவரது மனைவியை நோக்கி எம் ஆசிரியர் எங்கே? என்று கேட்டார்கள்.

அதற்கு அவள், அவர் கோயிலுக்குப் போயிருக்கிறுர் என்று கூறினுள். அவ்வமயம் கோயிலுக்குப்போன ஆசானும் திரும்பி வீட்டிற்கு வந்தான்.

அங்கிலேயில் மாணவர்கள் ஆசிரியரைப் பார்த்து, தாங்கள் போர்க்களத்திலே சித்தனேடு போர்செய்து அவனுடைய அங்கங்களே வெட்டி வீழ்த்தினீர்களே; பின்பு நாங்கள் எங்கும் தேடியும் தங்களைக் காண வில்லையே; எங்கிருந்தீர்? என வினவினுர்கள். மற்றும் உம்மைக் காணவே நாங்கள் அனைவரும் தேடி இங்கு வந்தோம் என்றும் கூறினுர்கள்.

அவர்களது கூற்றைக் கேட்ட ஆசிரியன் நான் அவன் அங்கங்களை வெட்டவில்லையே என்று கூறினுர். ஆகவே என்னைப்போல வந்து சித்தனது அங்கங்களை வெட்டியவர் யாவர்? இது சோமசுந்தரக் கடவுளது திருவிளையாடல்போலும் என்றுர். உடன் மனையாளும் தன்னைச் சித்தன் பலநாள் வந்து இடமுண்டா என்று கேட்டதையும், முதனுள் வந்து கையைப்பற்றி இழுத் ததையும், தான் அவனை வெளியே தள்ளிக் கதவைத் தாளிட்டு உள்ளே இருந்ததையும் தன் கணவரிடம் விளக்கமாகக் கூறினுள். உடன் ஆசானின் மனையாள் கூறியதைக் கேட்ட மாணுக்கர்கள், சித்தனை வாள்வீரர் கொல்லுகின்றபொழுது, இவ்வம்மையார் கூறியவாறு சொல்லியே அங்கங்களை வெட்டினுர்; இது முற்றிலும் உண்மை என்று கூறினுர்கள்.

உடன் ஆசிரியர் இவை யாவும் எம்மை ஆளும் இறைவனுடைய திருவிளையாடலே என்று கூறினுர். மனைவியோடும் மாணுக்கர்களோடும் திருக்கோயிலே

அடைந்தார்; வலமாக வந்தார்; சோமசுந்தரக்கடவுளை வணங்கினார். பெருமானே! பிரமனாலும் அறியவொண்ணாத உமது திருவிளையாடல் எளிய ஏழையாகிய அடியனேன் அளவினதோ என்றார்.

குலோத்துங்க பாண்டியனும், மதுரை நகரிலுள்ளாரும் இறைவனுடைய திருவிளையாடலை நோக்கிக் கண்ணீரின் வெள்ளத்துள் அழுந்தினார்கள். இறைவனுடைய திருவடிகளை எண்ணி வழிபட்டார்கள். பாடி ஆடித் துதித்தார்கள். குலோத்துங்கபாண்டியன் அடியாருக்கெளியர், பரதேசிகாவலர் என்றெல்லாம் பாராட்டினான். சிவபெருமானை வழிபட்டான். பின்பு வாளாசிரியனையும் அவனது மனையாளாகிய மாணிக்க மாலையையும் யானையின்மீதேற்றி நகர்வலம் செய்யச் செய்தான். பின்னர் தன்மகனாகிய அனந்தகுணபாண்டியனுக்கு முடிசூட்டித் தன்னரசை அவனிடம் ஒப்பு வித்தான்.

குலோத்துங்க பாண்டியன் உலகப் பொருள்களிலுள்ள ஆசையை அறவே ஒழித்து, ஐம்புலவின்பங்களை வென்று, இறைவனருள் பெற்று, அவனடியடைந்து என்றும்பிரியாத இன்பநிலையை எய்தினான்.

# 28. நாகமெய்த படலம்

அனந்தகுணபாண்டியன், திருநீறு உருத்திராக்கம் திருவைந்தெழுத்து ஆகிய மூன்றுமே உண்மையான நித்தியப்பொருள் என்று தெளிந்தான். அதுகாரணமாக அப்பொருள்களிடம் அளவற்ற அன்புகொண்டான். தன் தந்தை முதலாய அரசர்களைக்காட்டிலும் பெரும் புகழினைப் பெற்ருன். அரசன் எவ்வழி அவ்வழி குடிகளும் ஆனுர்கள். அதனுல் பாண்டியநாடெங்கும் சிவ மணம் கமழலாயிற்று.

பாண்டிய நாட்டிலுள்ள எண்ணுயிரம் சமணர்களும் இதனை எண்ணலானுர்கள். மானம் மேலெழப் பொருமை கொண்டார்கள். முடிவில் பாண்டியனைக் கொன்றுவிடவேண்டும் என்றமுடிவிற்கு வந்தார்கள். உடனே காததூர அளவினதாக ஒரு வேள்விச்சாலை அமைத்தார்கள். அதில் ஒரு வேள்வி வேட்டார்கள். வேள்விக் குண்டத்தினின்றும் ஓரசுரன் தோன்றினுன். அந்த அசுரன் சமணர்களை நோக்கி நீங்கள் எனக்கு இடும் கட்டளை யாது? என்று வினவினுன். அவர்கள் நீ விரைந்துபோய்ப் பாண்டியனை மதுரைமாநகரோடு அழித்துவிட்டுவா என்று ஆணையிட்டார்கள். சமணர்களது அக்கூற்றைக்கேட்ட அசுரன், ஆகாயமளாவும் பெரிய உடலையும், விடத்தைக் கக்கும் பெரிய பற்களையும், நெருப்பைக் கக்கும் கண்களையும், மலைமுழை போன்ற பெரிய வாயையும் உடைய சர்ப்ப வடிவு கொண்டு சந்திரன், சூரியன், இயமன், ஆதிசேடன் திக்குயானைகள் ஆகிய யாவும் நடுங்குமாறு மதுரைமா

நகருக்கு மேற்றிசைவழியாக வந்தான். அவ்வமயம் பாம்பைக் கண்ட ஊரவர் விரைந்துசென்று அனந்த குணபாண்டியனைக் கண்டு முறையிட்டார்கள். குடி மக்களது முறையீட்டைக் கேட்ட பாண்டியமன்னன் சிறிதும் அஞ்சாமல் இறைவன் சந்நிதியை அடைந்து கூறுவானானான்.

பெருமானே! முன் மதுரையை அழிக்க யானையை விடுத்த அமணர்கள் இப்பொழுது இவ்வரவினை விடுத் துள்ளார்கள்; அந்த யானையைக் கொன்று அருள் செய்ததுபோலவே இவ்வரவினையும் கொன்று மதுரை நகரத்தைக் காப்பாற்றவேண்டும் என்று வேண்டிக் கொண்டான். நான் வழிவழியாக உமக்கு அடிமைப் பட்டு உமது அருள்வழி நின்று நாட்டினை ஆள்பவன்; அடியேன்பொருட்டுத் தாங்கள் பெருங்கருணைகாட்டி அருள்செய்யவேண்டும் என்று வேண்டுவானானான்.

மேற்கூறியவாறு விண்ணப்பஞ்செய்த பாண்டிய மன்னன் இறைவனிடத்தே அனுமதிபெற்று வணங்கி, அவருடைய திருவடிகளை மனத்துட்கொண்டு புறத்து வந்தான். அம்பையும் வில்லையும் எடுத்துக்கொண்டு மதுரைமா நகரின் மேலைவாயிலை அடைந்தான். ஒரு மலைபோன்று எதிரே சீறிக்கொண்டு வரும் அரவினைக் கண்டான். அரவின்மேல் வில்லை வளைத்துப் பாணங் களை ஏவினான். அசுரனே பாணங்களையெல்லாம் துகள் துகளாகத் தன் பற்களால் கடித்து உமிழ்ந்தான்.

இச்செயலைக்கண்ட பாண்டியன் மனம்பொருது இறைவன் திருவடியை மனத்துட்கொண்டு அர்த்த சந்திரபாணத்தை விடுத்து, பாம்பினுடைய உடம்பினை

இருதுண்டமாக ஆக்கினன். அப்பாம்பு இறக்குங்கால் முடிவுகால வெள்ளம்போல் விடத்தினைக் கக்கிற்று. அவ்விடம் மதுரைநகரம் முழுவதும் இடையீடின்றிப் பரவியது. மக்கள் அனைவரும் நிலைதடுமாறி, பலவகை நோய்களால் நலிந்து துன்பத்திற்கு ஆளானார்கள்.

உடன் பாண்டியன் விரைந்து கோயிலை அடைந்தான். இறைவனை வணங்கினன். ஆன்மாக்கட்கெல்லாம் தலைவரே ! அன்பர்களுக்கு எளியரே ! எளியேன் உம்மிடத்தில் அடைக்கலம்புகுந்தேன்; முன்பே கடலை வற்றச்செய்தும், மேகங்களைத் தடுத்தும், யானையை அழித்தும் இந்நகரத்தைக் காப்பாற்றினீர்; இன்றும் இந்நகரம் விடத்தால் வருந்துவதைநீக்கிக் காத்தருளும் என்று வேண்டினன். கருணையே உருவமாய எம் பெருமான், தன்சடையிலுள்ள இளம்பிறைச் சந்திரனிலிருந்து சிறிது அமிர்தத்தைச் சிதறினர். அமிர்தம் நகரமெங்கும் பரவி, பாலில் பிறைபோலக் கலந்தது. உடன் மதுரைமாநகரம் பண்டுபோல் தூய்மையினைப் பெற்றது. மக்களும் விட வேதனையினின்றும் நீங்கி இன்புற்றார்கள்.

# 29. மாயப்பசுவை வதைத்த படலம்

அனந்தகுணபாண்டியன் வில்லினைச் செலுத்திப் பாம்பைத் துணித்தான். பாம்பினுடன்வந்த சமணர் பாண்டியனது செயலைக்கண்டு மேகங்கள் காற்றினால் தள்ளுண்டு செல்வதுபோல மனமுடைந்து கலங்கி ஓடினார்கள். அவ்வாறு ஓடிய சமணர்கள் ஓரிடத்தே கூடினார்கள்; முன்புவிடுத்த யானையைக் கொன்றது போல இன்று பாம்பையும் அழித்துவிட்டார்களே; இனி என்னசெய்வோம் என்று எண்ணினார்கள்.

பாண்டியர்கள் பழிக்கு அஞ்சுபவர்கள்; பசுவுக்கு ஊறு செய்யமாட்டார்கள்; ஆதலின் பசுவை விடுப் போம் என்ற முடிவிற்கு வந்தார்கள். முன்போலவே அபிசாரவோமஞ் செய்தார்கள். அவ்வோமகுண்டத்தி னின்றும் ஓரசுரன் பசு உருவாகி வந்தான். அவ்வாறு வந்த பசுவைச் சமணர்கள் முன்போல் விடுத்தார்கள். அப்பசு கண்டோர் எவரும் அஞ்சும்வண்ணம் இடி போல் முழங்கி, பலரைத் தொடர்ந்துசென்று கொன்று மதுரையை அணுகியது.

இவ்வாறு பெருமுழக்கத்துடன் பசு வருவதை அறிந்த அனந்தகுண பாண்டியனும், நகரமக்களும் விரைந்து கோயிலை அடைந்தார்கள். சோமசுந்தரப் பெருமானை வணங்கி முறையிட்டார்கள். சிவபெரு மான் பெருங்கருணை கொண்டு இடபத்தை நோக்கி 'சமணர்கள் விடுத்த பசுவை நீ சென்று வென்று வருவாய்' என்று ஆணையிட்டருளினார்.

இடபம் இரண்டு கண்களும் சிவப்புற இடிபோல் முழக்கம் செய்துகொண்டு விரைந்துசென்று பசுவைக் கிட்டிற்று. சமணர்கள் எண்ணியபடியே அப்பசுவுக்கு ஊறு செய்யாது, தனது பேரழகை அதன்முன் காட்டிற்று. கண்டவுடன் பசு அவ்விடபத்தின்மீது ஆசை காட்டிற்று. தன் உயிரோடும் வீரியத்தை விடுத்து விழ்ந்து ஒரு மலைவடிவாயிற்று.

அவ்வாறு பசு வீழ்ந்தமையைக்கண்ட பாண்டியனும் மக்களும் மகிழ்ச்சியடைந்தார்கள். சமணர்கள் அனைவரும் ஓட்டமெடுத்தார்கள். இடபமானது உலகினர் அறியத் தனது தூலசரீரத்தை ஒரு பெரிய மலையாக அங்கு நிறுத்திவிட்டு, சூக்கும உடலோடு இறைவனை அடைந்து வணங்கிற்று. பெருமான் கருணைகாட்டி, பண்டுபோல் உருவுற்று இங்கிரு என்று அருள்பாலித்தார். அதுகண்ட பாண்டியனும் நகரத்தினரும் இறைவனை வணங்கி மகிழ்வுடன் சென்றார்கள்.

இராமர் இலங்கை செல்லும்பொருட்டு இலக்குமணர், அநுமான், சுக்கிரீவன் வானரசேனைகள் புடைசூழ வந்து அவ்விடபமலையின்மீது தங்கினார். அகத்திய முனிவர் அவரது வருகையறிந்து அம்மலைக்கு வந்தார். சோமசுந்தரப்பெருமானுடைய வரலாற்றை எடுத்துக் கூறினார். இராமர் அதனைக் கேட்டு அன்பு கொண்டு அகத்தியமுனிவரோடு ஆலயத்தை அடைந்தார்.

அடைந்த இராமர் முன்னர் பொற்றாமரை வாவியில் நீராடினார். சிவாகம விதிப்படியே சோமசுந்தரக் கடவுளைப் பூசித்தார்; வழிபட்டார். சீவன்முத்திபுரப் பெருமானே! இவ்வுலகிலுள்ள பல தலங்களுள் இத் திருவாலவாயே மிகவும் சிறப்புடைய தலம். காரணம்

என்னையெனின், சகல உலகத்திலுள்ளாரும் உம்பால் அன்புகொண்டு வாழும்பொருட்டு நீர் செய்தகருணை மலைவடிவங்களாய் நகர்ப்புறத்தில் அமைந்திருப்பதே யாகும். எல்லா இன்பங்களையும் கொடுப்பதால் இவ் விலிங்கத்துக்கு மேற்பட்ட இலிங்கம் இல்லை. தீர்த்தத் தில் சிறந்தது பொற்றாமரை வாவியே. இதற்கு ஒப்பு இதுவே.

எத்த லத்தினும் ஒவ்வொன்று
விழுமிதாம்; இந்த
மெய்த்த லத்தில்இம் மூவகை
விழுப்பமும் விளங்கும்;
அத்த! ஆதலால் இத்தலம்
அடைந்தவர் எவர்க்குஞ்
சித்த சுத்தியும் பல்வகைச்
சித்தியும் பயக்கும்.

மேலும் இத்தலம் மூர்த்தி தலம் தீர்த்தம் மூன்று னும் சிறப்புடையது. அதனால் இத்தலத்தை அடைந் தவர்கள் மனத்தூய்மையும், பல சித்திகளும் எய்தி இன்புறுவார்கள். அடியேன் ஒருகருமத்தை எண்ணி உம்மை அடைந்துள்ளேன். அக்கருமமே மிகவும் அருமையானது. முடியவும் அருமைப்பாடுடையது. அக்கருமம் எவ்வாறு முடியவேண்டுமோ அவ்வாறு முடிய அருள்செய்யும் என்று வேண்டினர்.

இவ்வாறு வேண்டிக்கொண்டதைக் கேட்ட இறைவன் 'நீ நமக்குத் தென்கீழ்த்திசையில் சென்று, கடலிலே ஓர் அணை கட்டி, இலங்கைக்குச் செல்க; இலங்கை சென்று இராவணன் முதலியோரை அழிப் பாயாக; சீதையைச் சிறைவிடு செய்க; அதன்பின்

நீ அயோத்தியை அடைந்து பலகாலம் முறையாக அரசாண்டு முடிவில் வைகுண்டத்தையும் அடைக; கவலேப்படாதே' என்று திருவருள்பாலித்தார்.

இறைவனது கூற்றைக்கேட்ட இராமர் மகிழ்ந்து, வணங்கி இறைவனிடம் விடை பெற்ருர். கிழக்குத் திசைசென்று சேது என்ற இடத்தில் அணைகட்டினுர். கடலேக் கடந்து இலங்கையை அடைந்தார். இராவணனேக் கொன்று இலங்கையாட்சியை அவனுடைய தம்பியாகிய விபீடணனுக்குக் கொடுத்தார். சீதையோடு திரும்பிவந்து சேதுவில் சிவலிங்கப் பிரதிட்டை செய்து இறைவனே வழிபட்டார். அதனுல் இராவணன் முதலாயினேரைக் கொன்ற பிரமகத்திதோடம் நீங்கப் பெற்ருர். சோமசுந்தரக் கடவுளே மறுபடியும் வந்து வழிபட்டார். அயோத்தி அடைந்து அரசு ஏற்ருர்.

அனந்தகுண பாண்டியன் குலபூடண பாண்டியனேப்பெற்று, அவன்பால் அரசாட்சியைக் கொடுத்து, சிவலோகத்தை அடைந்தான்.

## 30. மெய்க்காட்டிட்ட படலம்

---

குலபூடண பாண்டியன் அரசு செலுத்தும்போது அம்மன்னனுக்குச் சுந்தரசாமந்தன் என்ற சேனுதிபதி ஒருவன் இருந்தான். அவன் சிவனடியாரைச் சிவமெனவே கொண்டு வழிபட்டுவரும் கடப்பாடு வழுவாதவன். அதனுல் அவன் பாண்டியன் இருமைப்பயன்களைப் பெறத் துணையாகி நின்ருன்.

இவ்வாறு நடைபெறும்நாளில், சேதிராயனென்ற வேட்டுவ அரசன் ஒருவன் பாண்டிய நாட்டின்மீது படையெடுக்கத் துணிந்தான். அவன் செயலையறிந்த பாண்டியன், தன் சேனுதிபதியாகிய சுந்தர சாமந்தனை அழைத்து ஆலோசிக்கலானுன். முடிவில் சேதிராயன் மிக்க வலிமையுடையவன்; அவனை வென்று ஓட்டுவதற்குத் திறமைமிக்க படையினர் வேண்டும்; ஆதலின் நீ நமது கருவூலத்தைத் திறந்து வேண்டும் பொருள் கொண்டு ஆட்களைத் திரட்டுக என்று கூறினுன்.

பாண்டியனது கூற்றைக் கேட்ட சுந்தரசாமந்தன் இருதலைக் கொள்ளி எறும்புபோலானுன். அரசாணை தள்ள ஆண்டவன் அருளாணை முன்னிழுக்கின்றது. இந்நிலையில் கருவூலத்தைத் திறந்தான்; வேண்டுந்திரவியங்களைக் கைக்கொண்டான்; மனக் களிப்போடு திருக்கோயிலை அடைந்தான்; பொற்ருமரை வாவியில் நீராடினுன்; இறைவனை வணங்கிநின்ருன்.

வணங்கிய சுந்தரசாமந்தன் பெருமானே! நீர் அடியார்கள் எண்ணிய குறைகளையெல்லாம் முடிக்கின்ற

கருணாமூர்த்தியல்லவா? என்னிடமுள்ள பொருள்கள் யாவும் உமக்கும் உம்முடைய அடியார்களுக்குமே உரியன என்று கூறித் திருமுன் வைத்தான். அந்தப் பொருள்களையெல்லாம் சிவபுண்ணியச் செயல்களில் செலவுசெய்யலானான்.

இறைவற்குத் திருக்கோயில்களும், ஆயிரக்கால் மண்டபங்களும் அமைத்தான்; ஆபரணங்கள், குடைகள், கொடிகள் ஆகியவற்றைச் செய்தான்; திருநீறு உருத்திராக்கம் அணிந்த அன்பர்கட்கெல்லாம் வரையாது பொன்னும் பொருளும் வழங்கினான். மேலும் அவ்வடியார்கள் திருவமுது உண்டு சென்றபின்னரே எஞ்சியதை அவன் உண்பான். அடியார்கள் கூட்டங் கூட்டமாக வந்து உண்டு செல்லவே பொருளெல்லாம் குறையலாயிற்று. இச்செயலை உழையர் சிலர் சென்று பாண்டியனிடம் கூறினார்கள்.

சுந்தரசாமந்தனே தன் செயலைப்பற்றிப் பாண்டிய மன்னன் ஐயம் கொள்ளாவண்ணம் சில செயல்களைச் செய்துவந்தான். கணக்கர்களைக்கொண்டு தெலுங்கர், வங்கர் ஆகிய நாட்டினருக்கு ஓலையெழுதி அனுப்புவதுபோல் பாவனை செய்தான். சிலசமயம் பொய்யாகவும் ஓலை எழுதி அனுப்பினான். இவ்வாறு ஓலை அனுப்பி ஆறுமாதம் ஆகியும் எங்கிருந்தும் சேனைகள் வந்து சேரவில்லை. பாண்டியன் கவலையுற்றவனாய்ச் சுந்தரசாமந்தனை அழைத்துக் கேட்டான்; 'நீ நாளை சூரியன் மறைவதற்குமுன்பே எல்லாச் சேனைகளையும் அழைக்கக்கடவாய்' என்று ஆணையிட்டான்.

மன்னன் உத்தரவுக்கு இணங்கிய சுந்தரசாமந்தன் உடன் சோமசுந்தரக்கடவுளிடம் சென்று வணங்கி

பெருமானே! பாண்டியன் கொடுத்த பொருள்களனைத்தையும் கொண்டு எளியேனுக்கு அருள் காட்டினீர்; இனிச் சேனைகளுக்கு நான் யாது செய்வேன்? என்று கூறிக் குறையிரந்தான்.

குறையிரந்து நின்ற சுந்தசரசாமந்தனின் குறையைப் போக்கியருள எண்ணினுன் இறைவன். உடன் இறைவனது திருவருளால் விண்ணினின்றும் 'நாளை நாம் சேனையோடும் வந்து சேருவோம்; நீ போய் பாண்டியன் அவையில் இரு' என்று அசரீரிவாக்குத் தோன்றிற்று. சேனாதிபதி பெருமகிழ்வு கொண்டான்.

மறுநாள் வைகறைப்போதிலே சுந்தரசாமந்தன் உறக்கத்தினின்றும் எழுந்து, திருக்கோயிலை அடைந்தான். பொற்றாமரைவாவியில் நீராடினுன். இறைவனை வணங்கி, அரண்மனையை அடைந்தான். அவ்வமயம் சங்குகன்னர் முதலாய பிரதம கணங்களும், குண்டோதரர் முதலாய பூத வீரர்களும் சேனைகளாக வடிவங் கொண்டு பதினெண் படைக்கலங்களைக் கையிலேந்திப் புறத்தே வந்தார்கள்: நந்தி, மாகாளர், பிருங்கி, நிகும்பர், கும்போதரர் முதலிய கணநாதர்கள் அனைவரும் நெற்றியில் திரிபுண்டரம் தரித்து, சட்டையணிந்து வாளைக் கைகளிலேந்திக் குதிரைச் சேவகர்களாய்ச் சூழ்ந்து வந்தார்கள்; இறைவன் தமது இடபத்தையே அழகிய குதிரையாக்கி அதன்மேல் ஏறிக்கொண்டு ஒற்றைச் சேவகராய் எழுந்தருளிவந்தார். சேனைகளின் வரவைக் கண்ட சுந்தரசாமந்தன் பாண்டியனிடம் கூறினுன். பாண்டியன் கடைவாயிலை அடைந்து அங்குள்ள ஒரு மண்டபத்திலே சிங்காதனத்தில் வீற்றிருந்தான். சேனையின் சிறப்பை நோக்கிப் பெருங்களிப்புற்றுன்.

மன்னன் இவர்கள் எவ்வெத்தேசத்து வீரர்கள் என்று சுந்தரசாமந்தனை வினவினான். சுந்தரசாமந்தனும் சேனைகளை அணியணியாக நிறுத்தி, கையில் பிரம்பு கொண்டு இன்ன இன்ன தேசத்து வீரர்கள் இவர்கள் என்று சுட்டிக் கூறுவானாயினான். கொங்கதேசத்தார் முதல் காஞ்சிதேசத்தார் ஈறாக இருபத்தாறு தேசங்களிலிருந்து வந்துள்ளார்கள் என்று மெய்க்காட்டி அறிவித்தான். இத்துணை தூரதேசத்து வீரர்களெல்லாரும் இங்கு எவ்வாறு வந்தார்கள் என்று வினவினான். உம்முடைய திரவியம் முழுவதையும் வரையாது வழங்கி இவர்களை அழைத்தோம் என்று விடையிறுத்தான்.

அவ்வமயம் ஒரொற்றன் ஓடோடியும் வந்து மன்னன்முன் நின்றான். அரசே! சேதிராயன் வேட்டையாடச் சென்ற இடத்தில் புலியால் இறந்தான் என்றான். இதனைக்கேட்டதும் பாண்டியன் சுந்தரசாமந்தனுக்கு மிகுந்த வரிசைகள் நல்கி, தலைமையுங்கொடுத்து இந்தச் சேனைகளையெல்லாம் அந்தந்த நாட்டுக்கு அனுப்பிவிடு என்று கூறினான். சுந்தரசாமந்தனும் அவ்வண்ணமே செலுத்துவான் போன்று நிற்ப, இறைவன் வீரர்களோடும் நின்றவண்ணமே மறைந்தான்.

பாண்டியன் இவ்வற்புத நிகழ்ச்சியைக் கண்டு அதிசயித்தான். இது எல்லாம்வல்ல இறைவனுடைய திருவிளையாடல் என்று எண்ணிக் கண்ணீர் சொரிய, உரோமம் சிலிர்ப்ப அன்புவடிவமாயினான். தனக்கு உயிர்த்துணையாக இருந்த சுந்தரசாமந்தனை நோக்கி, உனக்கு இறைவன் எளிவந்து அருள்செய்தாரென்றால் எனக்கு அச்சிவபெருமான் நீரே என்று அவனுக்கு எல்லாப்பொருளும் கொடுத்து வாழ்ந்திருந்தான்.

# 31. உலவாக்கிழியருளிய படலம்

குலபூடணபாண்டியன், சோமவார விரதம் முதலாகிய சிவவிரதங்கள் அனைத்தையும் வழுவாது மேற்கொண்டு இருந்துவந்தான். அவ்விரதம் மேற்கொண்டொழுகும் நிலைமையால் தன்னுட்டிலுள்ள பிராமணர்களை அவமதித்தான். அதன் காரணமாக நாட்டில் மழையில்லாது போயிற்று. விளைவு குன்றியது. பிராமணர்கள் தங்கள் குலத்தொழில்களை விட்டு இழிந்த தொழில்களையாவது செய்து வயிற்றை வளர்க்கும் பொருட்டு வேற்று நாட்டுக்குப் போனார்கள். மக்கள், நாம் அனைவரும் எங்கே செல்வது என்று அறியாது திகைக்கலானார்கள்.

இந்நிலையறிந்த பாண்டியன் மனம் இரங்கி, சோமவாரத்தன்று பொற்றாமரைவாவியை அடைந்து நீராடினான். சித்திவிநாயகரைப் பூசித்தான். ஆயிரத்தெட்டு தேங்காய் அவர்முன் உடைத்தான். சோமசுந்தரக் கடவுளையும் வணங்கினான். அப்பெருமானுக்கு முன்னின்று குறையிரப்பானானான். பெருமானே! உயிர்கட்கெல்லாம் உயிராய் விளங்குபவர் நீரல்லவா? அவ்வுயிர்கள் பசியால் வருந்தும் வருத்தம் அடியேனை வருத்துகின்றது; நான் தேடிய பொருள்கள்முழுதும் அறவழியிலே செலவழிந்தன; இனி உம் அருளால்தான் என் குறை நீங்கவேண்டும் என்று இறைவனிடம் குறையிரந்தான். இறைவனோ பாண்டியனது இவ்வேண்டுகோளைச் செவியேற்காது இருந்தார். பாண்டியனும் இறைவனை வழிபட்டு அவரது சிந்தனையாகவே அரண்மனையை அடைந்து தரையில் படுத்து உறங்கினான்.

அவ்வமயம் சிவபெருமான் பாண்டியன் கனவில் ஒரு சித்தராக எழுந்தருளினார். பாண்டியனே! நீ நம்பால் மிக்க அன்புடையை; செங்கோல் சிறப்பும் உடையவன்; ஆயினும் உன்பால் ஒரு குறையுண்டு; உன்னுடைய நாட்டில் இக்காலம் யாகங்கள் குறைவு பட்டுவிட்டன; வேதமே நாம், நாமே வேதம்; அவ் வேதமே ஆன்மாக்களுக்கு விதி விலக்குகளை எடுத்துச் சொல்லி இன்பத்தையும் வீடுபேற்றையும் அளிப்பது; அன்றியும் வேதமோ நமது செங்கோல்; அவ்வேத விதிப்படி யாகம் முதலியவற்றைச் செய்தால் நாடு மலிய மழை பொழியும் என்று திருவாய்மலர்ந்தருளி னார். நீ மேலும் பல அறங்களைச்செய்து செங்கோல் வழுவாது அரசாளுக என்றும் அருள்செய்தார்.

இறைவன் பாண்டியன் தொண்டினுக்கு வியந்து ஓர் உலவாக்கிழி கொடுத்து, இந்தக்கிழியில் எவ்வளவு பொன்னை எடுத்துச் செலவழித்தாலும் நாம் கொடுத்த அளவில் ஒரு சிறிதும் குறையாது என்றும் கூறினார். இக்கிழியினை வைத்துக்கொண்டு உன்னாட்டில் ஏற்பட் டுள்ள வறுமையை ஓட்டிவிடு என்றார். அவ்வுலவாக் கிழியினைப் பாண்டியன் கையில் கொடுத்து, அவனது மனக்கவலை நீங்கும்படி நெற்றியிலே திருநீறணிந்து மறைந்தருளினார்.

கனவு கண்ட பாண்டியன் உறக்கத்தினின்றும் எழுந்தான். உலவாக்கிழியைத் தலைமேற்கொண்டான். மகிழ்ச்சி மேலோங்கக் கூத்தாடினான். அமைச்சர்களுக் கும் சேனாதிபதிகளுக்கும்அக்கிழியினைக்காட்டி அவர்க ளிடம் தான் கண்ட கனவினையும் கூறினான். இறைவ னால் கொடுக்கப்பட்ட உலவாக்கிழியை இரத்தின

சிங்காதனத்தின்மேல் ஏற்றினான். பலவித வாத்தியங்கள் முழங்க, அந்தக் கிழியைச் சிவமாகவே எண்ணிப் பூசித்தான். பின்னர் அக்கிழியினை அவிழ்த்துப் பொருளினையெடுத்தான். தான தருமங்களும் யாகங்களும் நாட்டில் குறைவின்றி நடக்க ஏற்பாடுசெய்தான்.

பாண்டியன் உலவாக்கிழியில் உள்ள பொன்னைக் கொண்டு, இறைவன் இறைவி விமானங்கள் அறுகாற்பீடம் முதலியவைகளை அழகு விளங்குமாறு வேய்ந்தான். இவ்வாறு வேந்தன் நாள்தோறும் தவறாது தான தருமங்களைச் செய்து, தருமமாகிய பயிரைத் தழைத்தோங்குமாறு செய்தான். அதனால் பாண்டிய நாடு குபேரனது அளகாபுரிபோல் பொலிவுற்று விளங்கியது. பாண்டிய நாட்டிலும் அன்றுமுதல் பலவித யாகங்கள் குறைவின்றி நடைபெறலாயின. நாடுமலிய மழையும் பெய்தது. அரசனும் மிக்க மகிழ்ச்சியோடு நாட்டினை ஆண்டுவந்தான்.

# 32. வளையல்விற்ற படலம்

சிவபெருமான் தாருகவனத்துள்ள முனிவர்களின் மனைவியர்களது கற்பை அளந்துகாட்டத் திருவுளங் கொண்டார். கௌபீனம் அணிந்த கோலத்துடன் நீறணிந்து இனிய பாடலைப் பாடிக்கொண்டு வருவா ராயினர். மேலும் கிங்கிணியணிந்த கால்கள் அசையத் திருவோட்டைக் கையினில் ஏந்தி, பிச்சையெடுக்கும் கோலத்தினராய் தாருகாவனத்தை அடைந்தார்.

இறைவனது திருச்சிலம்பொலி, இனிய பாடலொலி, தமருக ஒலியாகியவற்றைக் காதுகொடுத்துக் கேட்டார்கள் இருடி பன்னியர்கள். உடன் விரைந்து பிச்சை போடுவார்போல வீட்டின் புறத்தை அடைந் தார்கள். வந்தவர்கள் மூர்த்தியின் பேரழகைக் கண் டார்கள். அவ்வழகில் ஈடுபட்டார்கள். அது காரண மாகக் காமநோய் அவர்களை விழுங்கிற்று. அதனால் அவர்கள் குழல் சோர்ந்தது. உடுத்தியிருந்த உடை நெகிழ்ந்தது. கைவளையல்கள் எல்லாம் கழன்றன. மேனியெல்லாம் பசலைநிறம் பூத்தது. இந்நிலையே காம பரவசர்களாய் எதிரே நின்றார்கள்.

இறைவனும் இவ்வண்ணம் அவர்களையெல்லாம் மோகத்திற்குள்ளாக்கினார். கருமமே கருத்தா என்று பிதற்றும் மீமாஞ்சகர்களுடைய செயலினை உலகத்தார் கட்கு உணர்த்திவிட்டு மறைந்தருளினார்.

இருடிகள் தங்கள் மனைவிமார்கள் நிற்கும் நிலை யினைக் கண்டனர். இவர்களுடைய கற்பையும், நாணை யும் அடியோடு களைந்துகொண்டு போனவர் மதுரை

சோமசுந்தரக்கடவுளே என்று துணிந்தார்கள். நீங்கள் யாவரும் கற்பினின்று வழுவினமையால் மதுரையில் வைசியப் பெண்களாகப் பிறக்கக்கடவீர்கள் என்று சாபங்கொடுத்தார்கள். அதற்கு அப்பெண்கள் இந்தச் சாபமானது எங்களுக்கு எப்போது நீங்கும் என்று வினவினார்கள். இருடிகள் அம்மதுரைமா நகரத்துக்கு அரசராகிய சோமசுந்தரக்கடவுள் உங்கள் கைகளைத் தீண்டும்போது இச்சாபம் நீங்கும் என்றார்கள்.

முனிவர்களது சாபத்தைபேற்ற அவர்களது மனைவியர்கள் மதுரைநகரத்தில் வைசியகுலத்தில் பெண்களாகப் பிறந்து வளர்ந்து வருவாரானார்கள். அவர்கள் பெதும்பைப் பருவத்தை அடைந்த நிலையில் இறைவர் வளையல்விற்கும் வணிகராக வேடங்கொண்டு வைசியர் வசிக்கும்வீதியினை அடைந்தார். அடைந்தவர் வளையல்களின் விலையைக் கூறிக்கொண்டு வீதியின்வழியே நடந்தார்.

வளையல் விற்கும் ஓசையைக் கேட்ட வணிகப் பெண்கள் யாவரும் தாம் தாம் செய்த வேலைகளைவிட்டு வீதியின் புறத்தே புறப்பட்டு வந்தார்கள். வந்தவர்கள் வணிகரது பேரழகினைக் கண்டார்கள்; காமத்தினால் அறிவு மயங்கினார்கள்; வணிகரைச் சூழ்ந்து தங்கள் தங்கள் கைகளை நீட்டி வளையல் இடுமாறு வேண்டினார்கள். இறைவராகிய வணிகரும் அவரவர்களுக்கு வளையல்களை அணிந்து மறைந்தருளினார்.

அவ்வாறு மறைந்த வணிகர், அப்பெண்களும் ஏனைய நகரமக்களும் காணத் திருக்கோயில் விமானத்து உள்ளொளியாகிய திருவுருவாய்த் தோன்றியருளினார். அதனைக் கண்டோரனைவரும் வளையல்விற்ற வணிகர்

சோமசுந்தரப்பெருமானே என்று அறிந்து வியப்படைந்தார்கள். ஆனந்தக்கண்ணீர் சொரிய உவகை வெள்ளத்துள் ஆழ்ந்தார்கள்.

பெருமான் தன்திருக்கரத்தால் தொட்டு வளையல் இட்டமையினால் அவ்வைசியப்பெண்கள் அனைவரும் கருப்பங்கொண்டார்கள். அளவற்ற மக்களைப் பெற்றெடுத்தார்கள். அப்பிள்ளைகள் எல்லாம் அளவற்ற வலிமையும், வீரமும், புகழும் பெற்று வாழ்ந்தார்கள். வைசியப்பெண்கள் சிவபெருமான் அருளைப்பெற்று, சிலநாள் மதுரையில் இருந்து வாழ்ந்து பின் சிவலோகத்தை அடைந்தார்கள்.

## 33. அட்டமாசித்தியுபதேசித்த படலம்

திருக்கயிலாய மலையில் இறைவன் ஆலமரநிழலில் போககுருவாய் வீற்றிருந்தார். அவ்வமயம் உமாதேவி அருகில் இருந்து இறைவனுக்கு வெற்றிலை மடித்துக் கொடுத்தார். அங்கிலையில் பெருமான் நந்தி, பிருங்கி, மாகாளர் முதலாய சிவகண நாதர்களுக்கும், சனகர் முதலாய நான்கு முனிவர்களுக்கும் சிவதருமநெறிகளை உபதேசித்தருளுவாராயினர். அக்காலை முருகப்பெருமானுக்குப் பால் கொடுத்து வளர்த்த இயக்கமகளிர் அறுவரும் விபூதி உருத்திராக்கம் தரித்துவந்து சிவபெருமானை வணங்கி நின்றூர்கள்.

இறைவன் அப்பெண்களை நோக்கி யாது விரும்பி இங்கு வந்தீர்கள் என்று வினவினர். உடன் அவர்கள் பெருமானே! எளியேங்கட்கு அட்டமாசித்திகளையும் உபதேசித்தருளும் என்று கேட்கலானூர்கள். உடன் இறைவன் தமது அருகில் வீற்றிருக்கும் உமையை அப்பெண்களுக்குச் சுட்டிக்காட்டினர். பெண்களே! இவ்வுமை எங்குந்நிறைந்த பராசத்தியும், மகேசையுமாயுள்ளவள்; அணிமா முதலிய எட்டுச் சித்திகளும் தோழியர்களாகத் தன்னைச்சூழ்ந்திருக்க நடுநாயகமாகத் தான் இலங்கிக்கொண்டிருப்பவள்; இவளை வழிபட்டால் நீங்கள் அட்டமாசித்திகளை அடையலாம் என்று கூறியருளினர்.

இறைவன் கூறியவாறு அப்பெண்கள் அறுவரும் உமையைநோக்கித் தவஞ்செய்யலானூர்கள். உமையும் அவ்வறுவர்க்கும் அட்டமாசித்திகளையும் உபதேசித்

தருளினர். அவர்கள் முன்செய்த வினையால் அதனை மறந்தார்கள். இறைவன் அக்குற்றத்தை எண்ணிக் கல்லாகக் கடவீர்கள் என்று சபித்தார். சாபத்தினை ஏற்ற ஆறு பெண்களும் பட்டமங்கை என்னும் தலத்தில் உள்ள ஆலமரநிழலில் கருங்கல்லாகக் கிடந்தார்கள். சாபம் ஏற்ற அப்பெண்கள் அறுவரும் தமக்குப் பெருமான் அருள்செய்தபடி, எப்போது எழுந்தருளிச் சாபத்தினைப் போக்குவார் என்று எஃணிய வண்ணமே மிக நீண்டகாலம் கிடக்கலானார்கள்.

பெருமான் அப்பெண்களுக்கு அருள்செய்தவாறு சாபத்தை நீக்கி அட்டமாசித்திகளையும் உபதேசிக்கத் திருவுளங்கொள்வாரானார். மதுரையினின்றும் பட்டமங்கை என்னும் தலத்திற்கு எழுந்தருளினர்.

இயக்கிமார்கள் அறுவரும் பட்டமங்கையிலுள்ள ஆலமரத்து அடியிலே கருங்கல்லாகக் கிடந்தார்கள். ஆயிரம் ஆண்டுகள் கழிந்தன. சோமசுந்தரக்கடவுள் ஆசாரிய வடிவங்கொண்டு அங்கு வந்தார். அக்கருங்கற்களைக் கடைக்கண்ணால் நோக்கினர். உடனே இயக்கிமார்கள் அறுவரும் கல்லுருவம் நீங்கி முன்னைய உருவத்தை அடைந்தார்கள்; தமது எதிரில் தோன்றிய ஆசாரியரை வழிபட்டார்கள். ஆசாரியர் அவர்கள் தலையின்மீது தமது கையை வைத்து எட்டுச் சித்திகளையும் அவர்களுக்கு உபதேசித்தருளினர்.

அணிமா, மகிமா, லகிமா, கரிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்னும் எட்டுச் சித்திகளையும் அப்பெண்கள் நன்கு உணர்ந்துகொள்ளலானர்கள். அவற்றின் விளக்கங்களையும் இறைவன் அவர்களுக்குக் கூறியருளுவாரானர்.

அணிமா என்பது மிகவும் சிறிய உயிர்தோறும் சென்று தான் பரமாணுவாய் இருக்கும் சிறுமையாம். மகிமா என்பது பிருதிவி முதல் சிவதத்துவம் ஈருக உள்ள முப்பத்தாறு தத்துவங்களின் உள்ளேயும் புறத்தேயும் நிறைந்து விளங்கும் பெருமையாம். லகிமா என்பது மேரு மலையைப்போன்று பாரமாக இருக்கும் யோகியைத் தூக்கினுல் மிகவும் இலகுவாக இருப்பதாம். கரிமா என்பது அணுவைப்போல் இலகுவாக இருக்கும் யோகியைத் தூக்கினுல் மேருமலையைப் போன்று பாரமாக இருப்பதாம். பிராப்தியாவது என்னவென்ருல், பாதாளத்தினின்று பிரமலோகம் அடைதலும், திரும்பவும் பாதாளத்தை அடைதலும் ஆகும். பிராகாமியம் என்பது பிறர் உடம்பில் புகுதலும், ஆகாயத்தில் சஞ்சரித்தலும், தான் அடைய விரும்பிய இன்பமனைத்தையும் தான் இருக்குமிடத்தில் வருமாறு செய்துகொள்ளுதலுமாம். அல்லாமல் வேதம் இதனை, சூரிய ஒளியால் எல்லாப்பொருளும் விளங்குதல்போல, மண் விண் இவற்றிடையுள்ள பொருள்களையும் முக்காலங்களையும் தன் உடலிடையுள்ள ஒளியால் அறிதல் என்று கூறும். ஈசத்துவம் என்பது முத்தொழில்களையும் தன் விருப்பப்படி செய்து சூரியன் முதலிய கிரகங்கள் தன்னேவல் கேட்ப வாழ்தலாம். வசித்துவம் என்பது இந்திரன் முதலிய தேவர்களையும், அசுரர்களையும், மனிதர்களையும், பூதங்களையும், விலங்குகளையும், பறவைகளையும் தன்வசமாக்கிக் கொள்ளுதலாம்.

இவைகளையெல்லாம் நம்மை நன்ருக அறிந்த யோகிகள் விரும்பமாட்டார்கள். ஆயினும் இவைகள் அவர்களை நிழல்போல நீங்காதடைந்து யோகிகளது பெருமையை உலகத்தாருக்கு எடுத்து அறிவிக்கும்

என்று அந்தப் பெண்கள் அறுவருக்கும் பெருமான் விளக்கிக்கூறினர்.

இறைவனுடைய அக்கூற்றைக்கேட்ட இயக்கிமார்கள், உடன் உமாதேவியை முறைப்படி தியானிக்கலானார்கள். தியான வலிமையால் அச்சித்திகள் யாவும் அவர்களுக்கு நன்கு கைகூடிவிட்டன. உடன் அனைவரும் சித்தியின் வலிமையால் விண்ணின்வழியே சென்று திருக்கயிலாயமலையை அடைந்தார்கள். அங்கு சென்று இறைவனையும் இறைவியையும் வழிபட்டு என்றும் மாறா இன்பத்தைப் பெற்று வாழும் பேற்றினைப் பெற்றார்கள்.

# 34. விடையிலச்சினையிட்ட படலம்

சோழமன்னன் ஒருவன் காஞ்சியைத் தலைநகர மாகக்கொண்டு அரசாட்சி செய்துவந்தான். அவன் காஞ்சியைச் சுற்றியுள்ள காடுகளையெல்லாம் வெட்டி அழித்தமையினாலே காடுவெட்டிய சோழன் என்னும் பெயரினைப்பெற்றான். சிவபெருமானை என்றும் அவன் மறவாது வழிபடும் கடப்பாட்டினை உடையவன். சிவ னடியார்களில் மேம்பட்டவன் என்றும் மக்களால் பாராட்டப்பட்டான்.

காடுவெட்டிய சோழன் வேதங்கள் வேதாங்கங்க ளாகிய அனைத்தையும் வல்லார்வாய்க் கேட்டு உணர்ந் தான். சிவபுராணங்களை நாள்தோறும் தவறாதுகேட் பான். கலவைச் சாந்திலும் இரத்தினாபரணங்களிலும் ஒருசிறிதும் விருப்பங்கொள்ளாமல், திருநீறு உருத்தி ராக்கம் இவைகளையே அணிந்துகொள்வானாயினான்.

அச்சோழன் மதுரையில் எழுந்தருளியுள்ள சோம சுந்தரக் கடவுளுடைய திருவிளையாடல்களைக் கேட்டு உணர்ந்தான். அவரை வழிபட எண்ணினான். ஒருநா ளிரவு சோமசுந்தரக்கடவுளை எப்பொழுது கண்டு வழி படுவேன் என்று கவலைகொண்டு உறங்குவானாயினான். அவ்வமயம் இறைவன் சோழனுடைய கனவில் ஒரு சித்தராய்த் தோன்றினார். சோழனே! நீ ஒருசிறிதும் மனம் வருந்தாதே; நீ இன்று வேற்றுருவம் கொண்டு புறப்பட்டு மதுரைக்குத் தனித்து வந்து வணங்கிப் போவாயாக என்று கூறியருளினார்.

உடன் சோழன் விழித்தெழுந்தான். இறைவனது பெருங்கருணையை எண்ணி வியப்படைந்தான். அமைச்சர்கள் சேனுதிபதிகள் முதலிய உழையர்கள் ஒருவருமின்றி, அன்று இரவே இறைவன் திருவருள் துணை கொண்டு தனித்து வழிநடக்கலானுன். வைகைக்கரை அடைந்தான். வைகை நதியோ இருகரையும் புரண்டு பெருவெள்ளமாகப் பெருக்கெடுத்தோடிற்று. அந்த வெள்ளப்பெருக்கைக் கண்ட சோழன் மனங்கலங்கினுன், சோமசுந்தரக்கடவுளை வழிபட இடையூறு நேர்ந்துவிட்டதே; விடிந்தால் அனைவரும் தெரிந்து கொள்வார்களே என்று மனம் வருந்தினுன்.

சோழனது உள்ளக்குறிப்பையுணர்ந்த பெருமான் கனவிடைத்தோன்றிய சித்தராக வந்து வைகைநதியை வற்றிப்போகுமாறு அருள்செய்தார். உடன் வைகை நதியும் வற்றியது. அவ்வாறு வற்றியவுடன் சித்தர் சோழனை அழைத்துக்கொண்டு, வடக்கு வாயிலைத் திறந்து உள்ளேசென்றுர். வீதிகளையெல்லாம் கடந்தார். பொற்றுமரைவாவியில் நீராடச்செய்தார். திருக்கோயிலினுள் புகவிட்டார். சோழன் இறைவனையும் இறைவியையும் தோத்திரித்து வழிபட்டான்.

எண்ணிய வெண்ணி யாங்கே
யான்பெற முடித்தாய் போற்றி!
பண்ணியல் மறைகள் தேருப்
பான்மொழி மணுள போற்றி!
புண்ணியர் தமக்கு வேதப்
பொருளுரை பொருளே போற்றி!
விண்ணிழி விமான மேய
சுந்தர விடங்க போற்றி!

எவ்வுடல் எடுத்தேன் மேனள்
　　எண்ணிலாப் பிறவி தோறும்
அவ்வுடல் எல்லாம் பாவம்
　　அறம்பொருட் டாக அன்றே !
தெவ்வுடல் பொடித்தாய் ! உன்றன்
　　சேவடிக்(கு) அடிமை பூண்ட
இவ்வுடல் ஒன்றே அன்றே ?
　　எனக்(கு) உடல் ஆன(து) ஐயா !

இவ்வாறு சோழன் துதிசெய்து இறைவன்பால் பல வரங்களையும் வேண்டிப்பெற்ருன். சித்தசுவாமி சோழனைநோக்கி, உத்தமனே! நீ இங்குவந்து வழிபட்டதைப் பாண்டியன் அறிந்தால் உனக்கு ஊறுசெய்வான் என்று கூறினர். உடன் அவர் அவனை வந்தவழியே அழைத்துச்சென்று வைகையாற்றின் வடகரைவரை சென்று அவன் நெற்றியில் திருநீறு சாத்தி உனக்கு உற்றதுணை கிடைக்கும்; சென்றுவருவாயாக என்று சொல்லி வழியனுப்பினர். இப்படியாக வழியனுப்பிய சித்தர் வடக்கு வாயிற்கதவைப் பூட்டி அதில் இடப முத்திரையையிட்டு, உள்ளேசென்று தமது விண்ணிழி விமானத்தில் எழுந்தருளினர்.

சூரியன் உதிக்கும்வேளையில் கதவினைத் திறப்போர் கதவில் இடபக்குறி இட்டிருப்பதைக்கொண்டு ஐயங் கொண்டார்கள். ஏனைய வாயில்களை விரைந்துசென்று பார்த்தார்கள். அம்மூன்று வாயில்களிலும் முன்னுள் இட்ட கயற்குறியே இருத்தலைக் கண்டார்கள். உடன் குலபூடணபாண்டியன் திருமுன்பு சென்று வடக்கு வாயில்மட்டும் கயற்குறி மாற்றி இடபக்குறி இட்டுள்ளநிலையை எடுத்துக்கூறினர்கள். இட்டவர் யார் என்று நாங்கள் அறியோம் என்றும் கூறினர்கள்.

அவர்களது கூற்றைக்கேட்ட பாண்டியமன்னன் விரைந்துவந்து பார்த்தான். இஃதென்ன அநியம்? இச் செயலை எவர் துணிந்து செய்திருப்பார்? என்று ஐயங் கொண்டநிலையில் தன் அரண்மனையை அடைந்தான். அடைந்தவன் உணவு உண்ணுமல் தரையில் படுத்து உறங்கினுன். அன்றிரவு சோமசுந்தரக்கடவுள் பாண் டியன் கனவில் தோன்றினுர். பாண்டியனே! நம்மீது வைத்த அன்பால் காஞ்சியில் உள்ள காடுவெட்டிய சோழன் நம்மை வந்து வழிபட விரும்பினுன்; நாம் அவனை வடக்கு வாயிலைத் திறந்து அழைத்துவந்து தரிசனம் செய்வித்தோம்; தரிசனம் செய்தபின்னர் திரும்பவிடுத்துக் கதவினைப்பூட்டி நாமே நமது இடபக் குறியினை இட்டோம் என்று கூறினுர்.

உடன் பாண்டியன் உறக்கத்தினின்றும் எழுந்து, இறைவனின் கருணையை எண்ணி எண்ணி மனம் நைந்தான்; ஆனந்தவெள்ளத்துள் அழுந்தினுன்; தன் மாளிகையினின்றும் வெளிப்போந்து எல்லோருக்கும் இறைவன் திருவிளையாடலை எடுத்துக்கூறினுன். பின் தன் பிள்ளையாகிய இராசேந்திரபாண்டியனுக்குத் தன் அரசைக் கொடுத்துவிட்டுத் தான் சிவபதம்பெற்றுன்.

# 35. தண்ணீர்ப்பந்தல்வைத்த படலம்

இராசேந்திர பாண்டியன் நெறிமுறை தவருது பாண்டியநாட்டை ஆண்டுவந்தான். அவனுடைய காலத்தில் காடுவெட்டிய சோழன் சோமசுந்தரக் கடவுளை வெளிப்படையாக வந்து வழிபட எண்ணி, அதன்பொருட்டுச் சோழன் பாண்டியனது நட்பைப் பெறவிழைந்தான். அதன்பொருட்டு அவன் பாண்டிய னுக்குரிய வரிசைப் பொருள்களாகப் பொன்னுடை இரத்தினுபரணம் ஆகியவைகளை அனுப்பிவைத்தான். நட்பினரான நிலையில் சோழன் தன்மகளைப் பாண்டிய னுக்குக் கொடுக்க இசைந்தான்.

இச்செய்தியை எவ்வாறே இராசேந்திரபாண்டிய னுடைய தம்பியாகிய இராசசிங்கன் என்பவன் அறிந் தான். சோழன்மகளைத் தான் மணந்துகொள்ளக்கருதி அண்ணனை வஞ்சித்துக் காஞ்சியை அடைந்தான். பாண்டியன் வருகைகேட்ட சோழன் சேனைகளோடு வந்து இராசசிங்கனை அழைத்துக்கொண்டுபோய், தன் மகளை அவனுக்கு மணஞ்செய்துகொடுத்தான்.

காடுவெட்டியசோழன் தன் மருமகன்பொருட்டு பாண்டியநாட்டைப் போரில் வெல்ல எண்ணினுன். தன் மருமகனேடு எண்ணில்லாத சேனைகள் சூழக் காஞ்சியைவிட்டுப் புறப்பட்டு வந்து மதுரைமாநகர எல்லையையடைந்தான். போர்முரசு முழக்கினுன். இரு யோசனை தூரத்துக்கப்பால் சோழனுடைய சேனைகள் தங்கியிருந்தன.

சோழன் தன்னைப் படைகளுடன் எதிர்க்கவந் துள்ளான் என்பதைப் பாண்டியன் ஒற்றரால் அறிந் தான். திருக்கோயிலை அடைந்தான். சோமசுந்தரக் கடவுளை வணங்கினுன். பெருமானே! முன்னமே நடு இரவில் தனித்து வந்து உமதருளால் உம்மை வழிபட் டுக்கொண்டு சென்ற உண்மை அன்பனுகிய சோழன், பின்பு எளியேனுக்கு வரிசைகள் பல விடுத்தான்; எனக்கு நண்பனுமாயினுன்; இப்பொழுதோ எனக்கு விரோதமாகப் படையெடுத்து வந்திருக்கிறுன்; முன்பு அவன் அறச்செயலுக்கு ஆட்பட்டு அருள்செய்த நீர், இப்பொழுது அவன்செய்யும் மறச்செயலுக்கு ஆளாகி அருள்செய்வீரோ என்றுகூறிக் குறையிரந்தான்.

பாண்டியன் முறையீட்டைக்கேட்ட பெருமான் விண்ணிடை அசரீரியாகப் பின்வருமாறு கூறலானுர். பாண்டியனே! நீ நாளை உன் சேனைகளோடு சென்று எதிர்க்க வந்துள்ள பகைவர்களை எதிர்த்துச் சண்டை செய்வாயாக என்பதே அவ்வசரீரியாகும். அதனைக் கேட்டு மகிழ்ந்து வணங்கி விடைபெற்றுக்கொண்டு தன் இருப்பிடத்தை அடைந்தான்.

அடைந்த பாண்டியன் சூரியோதய வேளையில் நித்திரைவிட்டெழுந்தான். காலையில் செய்யவேண்டிய கடன்களை எல்லாம் முறைப்படி செய்துமுடித்தான். சிவபூசையும் செய்தான். தன்னுடைய சேனைகளோடு இறைவன் கூறியவாறு போர்க்களத்தை அடைந்தான். கடலை ஒரு ஆறு எதிர்ப்பதுபோலச் சோழனது பெரிய சேனையைப் பாண்டியனது சிறிய சேனை எதிர்த்துத் தாக்கத் தொடங்கியது. பாண்டியனுடைய சேனைகள் இறைவன் திருவருளால் சோழனுடைய சேனைகளின்

கண்ணிற்கு ஒன்று பலவாகத்தோன்றின. இருவர்களுடைய சேனைகளும் ஒன்ருேடொன்று கலந்து இடைவிடாது போர்செய்தன.

இவ்வாறு உக்கிரமாகச் சண்டை செய்யுங்கால் இரு சேனைகளுக்கும் உடம்புநிழல் அடியில் ஒதுங்கச் சூரியன் உச்சியை அடைந்தான். சேனைகள் யாவும் வெப்ப மிகுதியைத் தாங்கவொண்ணுமல் தவித்தன. குடிக்கத் தண்ணிரோ ஒதுங்கி நிற்க நிழலோ நெடுந் தூரத்திற்குக் காண இபலவில்லை. படைகள் யாவும் வருந்தின.

அவ்வமயம் சோமசுந்தரக்கடவுள் பாண்டியன் படைநடுவே ஒரு தண்ணிர்ப்பந்தலைத் தோற்றுவித்தார். அவரே நெற்றியில் திருநீறணிந்து புன்முறுவலோடு தவவேடங்கொண்டு அந்தத் தண்ணிர்ப்பந்தரில் எழுந்தருளியிருந்தார். கையில் ஒரு பாத்திரத்தை ஏற்றுத் தாமெருவரே படைகள் யாவற்றுக்கும் தண்ணிர் வார்த்துத் தாகத்தைத் தணித்தருளினுர்.

பாண்டியனுடைய சேனைகள் யாவும் தண்ணிர் குடித்ததால் தாகந்தணியப்பெற்று இளைப்பு நீங்கின. அந்நிலையில் வலிமையடைந்தசேனைகள் சோழனுடைய சேனைகளை எதிர்த்து வென்ருர்கள். பாண்டிய விரர்களில் சிலர் சோழனையும், அவனது மருமகனுகிய இராசசிங்கனையும் சிறைபிடித்துப் பாண்டியன்முன் கொண்டுவந்து நிறுத்தினுர்கள்.

இராசேந்திரபாண்டியன் அவ்விருவரையும் சோமசுந்தரக்கடவுள் சந்நிதியின்முன் கொண்டு நிறுத்தினுன். பெருமானே! உமது திருவுள்ளம் எதுவோ? என்று

குறையிரந்தான். அவ்வமயம் விண்ணினின்றும் ஓர் அசரீரி தோன்றிற்று.

பாண்டியனே! நீ தருமவழி நன்ருகத்தெரிந்தவன்; உன் அறிவுக்குத் தோன்றியபடி செய்க என்று ஒலி எழுந்தது. அச்சொல்லைக் கேட்ட பாண்டியன் சோழ னுக்குச் சில யானைகள், குதிரைகள், ஆபரணங்கள் ஆகிய இவைகளைக் கொடுத்துச் சோழநாட்டுக்கு அனுப்பிவிட்டான். பின்பு தம்பியாகிய இராசசிங்க னுடைய கர்வம் அடங்கும்வண்ணம், அவன் அனுப விக்கும் செல்வங்களுள் சிலவற்றை மாற்றி அவனை வேருக ஒதுக்கிவைத்தான். இவனே பிறவுயிர்களைத் தன்னுயிர்போலப் பாவித்து நாட்டை நன்முறையில் அரசாண்டுகொண்டு சிறக்க வாழ்ந்திருந்தான்.

# 36. இரசவாதஞ்செய்த படலம்

திருப்பூவணம் என்னும் சிவதலம் பாண்டிய நாட்டில் உள்ள சிறந்த சிவதலங்களுள் ஒன்றாகும். அவ்வூரில் உள்ள அனைத்துப் பொருள்களும் சிவலிங்க வடிவமாம். இந்திரன், சூரியன் முதலிய தேவர்கள் எல்லாம் அங்கு வந்து இறைவனைப் பூசை செய்து வரங்கள் பலவற்றைப் பெற்றுச் சென்றுள்ளார்கள்.

அத்தகைய பதியில் பொன்னனையாள் என்னும் பெயரினையுடைய உருத்திரகணிகை ஒருத்தி இருந்தாள். அவள் திருக்கோயிலில் பணிசெய்யும் உரிமை பெற்றவள். அவள் ஆடல் பாடல்களிலும் அழகிலும் தேவமாதர்கட்கு ஒப்பானவள். அறவழியில் செல்வதிலும் அத்தேவமாதர்கட்கு மேலானவள்.

இத்தகைய அப்பொன்னனையாள் நாள்தோறும் சூரியன் தோன்றுமுன்னே நித்திரைவிட்டெழுவாள். நித்தியகடன்களை முடித்து நீராடுவாள். சிவபூசையை முடிப்பாள். தன் பரிவாரங்களோடு திருக்கோயிலை அடைவாள். சிவபெருமானை வழிபடுவாள். சந்நிதியில் சுத்தநிருத்தமாடுவாள். பின் தன்வீட்டினை அடைந்து சிவனடியார்களைச் சிவனெனச் சிந்தித்து அவரடிகளில் மலரிட்டு அருச்சிப்பாள். அவர்கள் உண்டு எஞ்சிய உணவையே உண்பாள், இது பொன்னனையாளின் அன்றடவாழ்க்கையில் நடைபெறும் செயல்களாம்.

பொன்னனையாள் இவ்வாறு கடப்பாடு வழுவாது நடந்துவருநாளில், இறைவன் அவளுடைய அன்பை

உலகினருக்கு வெளிப்படுத்தத் திருவுளங்கொண்டார். அந்நிலையில் இறைவன் பொன்னனையாளுக்குத் தன் திருவுருவைச்செய்து வழிபடும் ஆசையை உண்டாக்கினார். சிவபெருமானுடைய திருவுருவைக் கருவினால் செய்வித்தும், தினந்தோறும் தனக்குக் கிடைக்கப் பெறும் பொருளெல்லாம் அடியார்களது வழிபாட்டுக்கு ஆயிற்றேயன்றி மிகுதிப்படவில்லை. திருவுருவை எப்படி அமைப்பது என்று வருத்தமுற்றாள்.

சிவபெருமான் திருநீறணிந்த திருவுடம்பும், செம் பவளச்சடையும், கௌபீன உடையும், கட்டுவாங்கம் பிடித்த திருக்கரமும், யோகபட்டமும், திருநீற்றுப் பையும் உடைய சித்தவேடங்கொண்டார். பொன்னனையாள்வீட்டிற்கு வந்தார். உணவுண்ணும் அடியார் கூட்டத்தோடு உள்ளே புகாமல் புறத்தே ஒதுங்கி அமர்ந்திருந்தார். சிவனடியார்களெல்லாம் அமுதுண்டு போயினார்கள். அந்நிலையில் பொன்னனையாளுடைய தோழியர்கள், புறத்தே ஒதுங்கி அமர்ந்திருக்கும் சிவனடியாரைக் கண்டார்கள். ஐயரே! அமுதுசெய்ய உள்ளே எழுந்தருளும் என்றார்கள். சிவனடியவரோ தோழிகளைப் பார்த்து உங்களது தலைவியை இங்கே அழைத்து வாருங்கள் என்றார். தோழியர்கள் அடியவர் கூறியதைத் தங்கள் தலைவியாகிய பொன்னனையாளிடம் கூறினார்கள். உடன் பொன்னனையாள் சென்றாள். அடியவரைக் கண்டாள். மலர்கொண்டு அருச்சித்து வழிபட்டாள். பெருமானே! நீர் இங்கு எழுந்தருள இம்மனை யாது தவஞ்செய்ததோ? உள் எழுந்தருளுக; அடியாள் செய்யும் பணியை அறிவித்தருளுக; உமது திருவுள்ளத்துக்கிசைய அதனைச் செய்துமுடிப்பேன்; நான் உங்கள் அடிமை என்றாள்.

பொன்னனையாளின் கூற்றைக்கேட்ட சித்தசுவாமி உண்ணகை செய்தார். பெண்ணே! நீ மிக்க அழகு உடையை: சிறிது உடல் இளைத்துள்ளாய்; அதற்கு என்னை காரணம்? என்று வினவினர். பெருமானே! அடியேனுக்கு ஒன்ருனும் குறையில்லை. ஆனல் ஒன்று உண்டு. சிவபெருமானுடைய திருவுரு வார்ப்பிக்க ஆசைப்பட்டுக் கருச்செய்வித்தேன். திருவுரு வார்ப் பிக்கப் பொருள் இல்லை. நாள்தோறும் கிடைக்கும் பொருள்கள் யாவும் அடியார் பூசைக்கே ஆகின்றன. கொஞ்சமும் மிஞ்சுவதில்லை என்ருள்.

சித்தசுவாமி பொன்னனையாளின் அக்கூற்றைச் செவிமடுத்தார். பெண்ணே! உடல், இளமை, செல் வம் ஆகியமூன்றும் நீர்க்குமிழிபோல நிலையில்லாதவை என்று நீ உணர்ந்தாய்; அறமே நிலைத்தது என்பதனை அறிந்துள்ளாய். அவ்வறங்களுள்ளும் சிவபெருமானை நோக்கிச் செய்யும் அறமே சிறப்புடையது என்றும் துணிந்தாய். அவற்றுள்ளும் சிவபூசை; அவற்றுள்ளும் அடியார்களுக்குச் செய்யும் பூசையே மிகவும் சிறப்பு உடையது அதனை நன்குணர்ந்தே நீ அடியார்பூசை செய்கின்ருய். அதனல் இருமையிலும் நீ நற்பயனைப் பெற்றுள்ளாய். ஆகவே உன் விருப்பப்படி இறைவ னுடைய திருவுருவத்தைப் பொன்னல் சமைக்கலாம் என்று அருள்பாலித்தார்.

இவ்வாறு கூறிய சித்தர் பொன்னனையாளைநோக்கி, உன்னுடைய வீட்டிலுள்ள பித்தளை, ஈயம் ஆகிய அனைத்தையும் இங்கே கொண்டுவந்து வை என்ருர். உடனே பொன்னனையாளும் விரைந்து வெள்ளி செம்பு இரும்பு ஈயம் பித்தளை வெண்கலம் தரா ஆகிய எல்லா

உலோகங்களையும் கொண்டுவந்து முன்னர் வைத்தாள். சித்தசுவாமி அவைகளின்மீது திருநீற்றினைச் சிதறினர். பெண்ணே! இன்றிரவு இவைகளை நெருப்பிலிட்டுவை; நாளை இவைகள் பொன்னாய்விடும். அப்பொன்னைக் கொண்டு இறைவனது திருவுருவத்தை வார்ப்பிக்கக் கடவாய் என்றார்.

பொன்னனையாள் எம்பெருமானே! நீவிர் இன்று இங்கு தங்கி உணவுண்டு இக்காரியத்தையும் முடிக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டாள். அதற்குச் சித்தசுவாமியோ நாம் மதுரையிலுள்ள சித்தர் என்று கூறி மறைந்தருளினர்.

பொன்னனையாள் சித்தராக வந்தவர் மதுரைப் பெருமானே என்று தெளிந்தாள். மறைந்துவிட்டாரே என்று சிறிது துக்கம் கொண்டாள். ஆயினும் தன் மனக்கவலையை நீக்கியதால் மகிழ்ச்சியுங்கொண்டாள். திருநீறு தெளித்த உலோகங்களையெல்லாம் அச்சித்தர் கூறியபடி தீயிலிட்டாள். யாவும் பொன்னாக மாறிய தைக்கண்டு மகிழ்ந்தாள். அந்தப் பொன்னைக்கொண்டு இறைவன் திருவுருவைச் செய்தாள். செய்த உருவின் அழகினைக்கண்டு அழகிய பிரானே என்று கூறி அள்ளி முத்தமிட்டாள்.

பின்னர் அவ்வுருவினை முறைப்படி பிரதிட்டை செய்வித்தாள். திருவிழா முதலியன நடக்க ஏற்பாடு செய்தாள். சிலநாள் சென்றபின்னர் பொன்னனையாள் வீடுபேறு அடைந்தாள். அவ்விறைவனது உருவம் பொன்னனையாள் இட்ட கைக்குறியும், ஏமநாதர் என்னும் காரணக்குறியுங்கொண்டு இருந்துவருகிறது.

## 37. சோழனை மடுவில்விட்டிய படலம்

இராசேந்திர பாண்டியனுக்குப்பின் ஆறு தலை முறைகள் கழிந்தன. அதற்குப் பின்னர் சுந்தரேசபாத சேகரன் என்னும் பாண்டியன் அரசாட்சியை ஏற்று நடத்தி வந்தான். அவன் சோமசுந்தரக் கடவுளிடம் மெய்யன்புடையவனாய் ஒழுகிவந்தான்.

இவன் தன்னுடைய படைக்கலச் செலவைக் குறைத்தான். பத்துத் தேர், நூறு யானை, ஆயிரம் குதிரை, பதினாயிரங்காலாள் இவைகளே இவனுடைய நால்வகைச் சேனைகள். இவைகட்கு ஒரு சிறிதளவு தொகைகளே செலவிட்டான். ஏனைய பொருள்களை எல்லாம் சோமசுந்தரக்கடவுட்கே உரிமையாக்கினான். அவருக்கு முடி, கண்டிகை முதலிய இரத்தினாபரணங் களைச் செய்வித்தான். கோபுரம், மாடம் ஆகியவை கட்கெல்லாம் பொன்வேய்ந்து இரத்தினமிழைத்தான்.

ஆயிரம் பரிக்கோர் சேவகன் என்னும் சோழன் ஒருவன் பாண்டியனுடைய சேனைகளின் சுருக்கத்தை அறிந்தான்; பாண்டியனை வெல்லக்கருதினான்; எண் ணற்ற தன்னுடைய சேனைகளோடு மதுரைநகரை அடைந்தான். பாண்டியன் ஒற்றர்மூலம் சோழன் வருகையை அறிந்தான்; திருக்கோயிலை அடைந்தான்; பெருமானை வழிபட்டான். பெருமானே! நான் உமது திருவருள்வலிமையால் அரசாளுகிறேன்; அந்த அருள் வலிமையை நோக்காது, என் சேனையின் சிறுமையை நோக்கிச் சோழன் தன் படைவலிமையினால் எனது

நாட்டைக் கொள்ள எண்ணியுள்ளான்; அளவில்லாத சேனைகளோடு இந்நகரத்தை அணுகியுள்ளான் என்று குறையிரந்தான். அவ்வமயம் இறையருளால், பாண்டியனே! கவலையுருதே; நீ வெற்றியடையும்படி நாமே வந்து சோழனுடன் போரிடுவோம் என்று அசரீரி விண்ணிடை தோன்றிற்று.

அசரீரியின் உரை கேட்ட பாண்டியன் மனம் மிக மகிழ்ந்தான். புறத்தேபோந்தான். சேனைகள்சூழ்ந்துவர சோழனது சேனையை எதிர்த்தான். சோழனுடைய சேனக்குப் பாண்டியன் சேனை சிவபிரான் அருளால் ஒரு கடல்போலத் தோன்றிற்று.

சோமசுந்தரக்கடவுள் வேடுவவடிவம் கொண்டு வேலைக் கையில் ஏந்தினர். சோழனுக்கு ஒரு யமன் போல் பாண்டியன் சேனையின்முன் நின்றுர். சோழன் வேடராகிய அவரைக்கண்டான். கடுங்கோபங்கொண்டான். ஆயிரம் குதிரைக்கோர் சேவகன் வந்தேன் என்று சொல்லிச்சென்று எதிர்த்தான். வேடவடிவங் கொண்டபெருமான், ஆயிரம் குதிரைக்கோர் சேவகன் நீ அன்றோ? அனந்தங்குதிரைக்கு ஒற்றைச் சேவகன் நான் என்று கூறிச் சோழனெதிரே சென்று மிகுந்த கோபத்தோடு வேலாயுதத்தைச் சுழற்றினர்.

அதுகண்ட சோழன் நாம் இனி இவ்வேலாயுதத்தினல் இறப்பது உறுதி என்று எண்ணினன். உடன் குதிரையோடும் ஓடத் தொடங்கினன். உடன் வேடவடிவம் கொண்ட பெருமானும் மறைந்தருளினர். பாண்டியன் சோழனைத் துரத்திக்கொண்டு பின்சென்றுன். சிறிதுதூரம் ஓடியவுடன் சோழன் திரும்பிப்

பார்த்தான். வேடுவனைக் காணவில்லை. அச்சம் நீங்கினான். பாண்டியனை மதுரைவரை துரத்திவந்தான்.

பாண்டியன் ஓடோடியும் வந்தான். மதுரைநகருக்கு மேற்குத்திசையிலுள்ள ஒரு ஆழமாகிய மடுவில் விழ்ந்தான். சோழனும் தன் குதிரையுடன் அம்மடுவில் விழுந்தான். இறைவன் அருளால் பாண்டியன் கரையேறிவிட்டான். சோழனே அந்த மடுவில் ஆழ்ந்து குதிரையுடன் இறந்துவிட்டான்.

பாண்டியமன்னன் சோழனுடைய படைகளையும், குதிரைகளையும், சேனைகளையும், யானைகளையும், தேர்களையும், ஆபரணம் ஆடை ஆகியவைகள் அடங்கிய பெட்டிகளையும் கைக்கொண்டான். சோமசுந்தரக் கடவுள் அணியத்தக்க ஆபரணங்களையும், ஆடைகளையும் கொடுத்து இறைவன் கருணைக்கு ஆளாகி நாட்டை இனிதே அரசாண்டுகொண்டிருந்தான்.

# 38. உலவாக்கோட்டை அருளிய படலம்

அடியார்க்குநல்லான் என்னும் ஒரு வேளாளன் மதுரைமாநகரில் இருந்தான். அவ்வேளாளன் சிவ பத்தி, அடியார் பத்திகளில் தலைசிறந்து விளங்கினான். அவனுக்கு வாழ்க்கைத் துணைவியாக வாய்த்தவள் தருமசீலை என்னும் பெயரினையுடையாள். கற்பொழுக் கத்தில் மேம்பட்ட காரிகைநல்லாளாக அவள் விளங் கினாள். தன்னைக்கொண்ட கணவனுக்கு வீடுபேறடை யும் நெறியிலே தனித்துணையாக விளங்கினாள்.

அடியார்க்குநல்லான் தன் வேளாள குலத்துக்கு உரிய வேளாண்மையை முறைப்படி செய்துவந்தான். அதனால் அடையப்பெறும் ஊதியத்திலே அரசனுக்கு உரிய இறையைக் கொடுத்து எஞ்சிய பொருள்களைத் தனது மனையாளாம் தருமசீலையின் துணைகொண்டு அடியார்பூசையில் செலவிட்டு வருவானாயினான். அக் காரணத்தினால் அவனுடைய செல்வம் தொடுமணற் கேணிபோல் நாளுக்குநாள் பெருகலாயிற்று.

செல்வம் நிறைந்துள்ள காலத்து அறஞ்செய்வது இயற்கை. செல்வம் குறைந்தகாலத்து நியதிகுன்றாமல் அறத்தைச் செய்பவனே குறிக்கோளில் வழுவாதவன். அடியார்க்குநல்லான் குறிக்கோளினின்று ஒருசிறிதும் பிறழாதவன் என்னும் உண்மையை உலகினருக்கு உணர்த்த இறைவன் திருவுள்ளத்துள் எண்ணினார். அது காரணமாக அவனது விளைநிலங்கள் எல்லாம் விளைவு இல்லாது ஒழிந்தன. விளையுள் குறையினும்

அவன் அதனைப் பொருட்படுத்தாது பண்டுபோலவே பொருள் கடன்கொண்டு கடமை வழுவாமல் அறஞ் செய்துவருவாறுறன். எவ்விதக் குறைவும் ஏற்படாத வண்ணமும் பார்த்துக்கொண்டான். பின் இறைவன் அவ்வேளாளனுக்குக் கடனும் கிடைக்காதவண்ணம் நிலையினை மாற்றிவிட்டார்.

அடியார்க்குநல்லானே, சிவனடியார்களை உணவு ஊட்டினாலன்றி உணவு உட்கொள்ளமாட்டான். இது அவனுடைய நியதியாகும். இதன் காரணமாக அவ்விருவரும் பட்டினி கிடக்கலானார்கள். கவலையால் உள்ளம் வருந்தினர். பசியினால் உடம்பு இளைத்துப் போயிற்று. இந்நிலையில் வேளாளன் உடம்பின் நிலை யில்லாமையை உணர்ந்தான். இந்நிலைமையை மனைவி யோடும்சென்று சோமசுந்தரக்கடவுளிடம் கூறிவிட்டு உயிரை விட்டுவிடுவது என்ற முடிவிற்கு வந்தான். உடன் தன் மனையாளோடு திருக்கோயிலடைந்தான். சிவபிரானை வணங்கினான். முறையிடலானான்.

பெருமானே! அடியேனுக்கு விளைவு குன்றியது. வயல்கள் இருந்தும் பயனில்லை. அதனால் அடியார் பூசைக்குத் தடையேற்பட்டது. கடன் வாங்கிக் கடமை செய்தேன். கடனும் கிடைக்கவில்லை. கடன் கொடுப்பாரை நீர்தான் காட்டியருளவேண்டும். நீர் காட்டியருளாவிட்டால் நான் இப்பொழுதே எனது உயிரினை விடுவேன் என்று மனையாளோடு இறைவ னிடத்தே சென்று குறையிரந்தான்.

இறைவனருளால் அவ்வேளாளன் கேட்குமாறு விண்ணிடையே ஒரு ஒலி எழுந்தது. அன்பனே! நீ

சிறிதும் மனம் தளராதே. நாம் இன்று உன் வீட்டில் வெள்ளிய அரிசிக்கோட்டை ஒன்று வைத்துள்ளோம். அக்கோட்டையில் எவ்வளவு எடுப்பினும் எடுக்க எடுக்கக் குறையாது நிறைவுபெற்று விளங்கும். நீ அக்கோட்டையை நாடோறும் பூசித்து, வேண்டியன கொண்டு அடியார்பூசை செய்க என்று கூறினர்.

அடியார்க்குநல்லான் அதனைக் கேட்டு மனம் மிக மகிழ்ந்தான். மனையாளோடு இல்லினை அடைந்தான். இறைவன் கூறியபடியே உலவாக்கோட்டையைக் கண்டான். வியந்தான். உடனே நறுமலர் முதலியன கொண்டு வழிபட்டான். அன்றன்று அடியார்களுக்கு உணவு அளிக்க எவ்வளவு பொருள் வேண்டுமோ அவ்வளவே கொண்டு நியமம் தவருமல் அறங்களைச் செய்துவந்தான்.

இவ்வாறு நியமமாக அறங்கள் செய்ததன் காரணமாக இம்மண்ணிடைக் குபேரன்போல் நெடுங்காலம் வாழ்ந்திருந்தான். பின்னர், தன் மனைவியோடும் உறவினரோடும் சிவசாருப்பியம்பெற்றுச் சிவலோகத்தில் சிறக்க வாழ்ந்திருந்தான்.

# 39. மாமனாக வந்து வழக்குரைத்த படலம்

மதுரைநகரில் தனபதி என்னும் வணிகனொருவன் வாழ்ந்துவந்தான். அத்தனபதிக்கு வாய்த்த மனைவி சுசிலை என்னும் பெயருடையாள். இவ்விருவர்களும் நெடுங்காலம் பிள்ளைப்பேறில்லாமல் வருந்தினார்கள். அதனால் தனபதி தன் மருமகனைத் தனக்கு மகனாகக் கொண்டு மனையாள்கைக் கொடுத்தான். அவளும் அன்புடன் வளர்த்துவந்தாள்.

தனபதி, தங்கை தான் வருந்திப்பெற்ற பிள்ளை யைத் தனக்குப் பிள்ளையாகக்கொடுத்த பெருநன்றியை மறந்தான். மனையாள்பால் வைத்த ஆசைமயக்கினால், தங்கையோடு நாளும் திராதுசண்டையிட்டுக்கொண்டு வந்தான். அண்ணனின் இச்செயலுக்கு ஆற்றாது ஒரு நாள் இளையாள் கோபங்கொண்டு, பிள்ளைப்பேறற்ற பாவி! உனக்கேன் பெருமிதம்; என் அருமைப்பிள்ளை யாலன்றோ இருமைப்பயனும் அடைவாய் என்றாள். தங்கையின் இச்சுடுசொல்லைக் கேட்ட தனபதி மிக நாணி 'வரும் பிறவிக்காயினும் மகப்பேற்றைத் தர வல்ல தவத்தைச் செய்யவேண்டும்' என்று மனத் துணிவுகொண்டு, தன் பொருள் அனைத்தையும் தன் மருமகனுக்கே ஆக்கிவிட்டு, மனையாளோடு தவஞ் செய்யக் காடுபோயினான்.

நீண்ட நாளாகியும் தனபதி வருகை தாழ்த்தமை யால், அவன் மருமகனுக்குக் கொடுத்த வீடு, நிலம்,

பொன், பொருள் ஆகிய அனைத்தையும் தாயத்தார்கள் வல்வழக்குப் பேசித் தன்னதாக்கிக் கொண்டார்கள். அதனால் தனபதியின் தங்கை மனந்தளர்ந்தாள். தன் புதல்வனோடு திருக்கோயிலையடைந்தாள். சார்பில்லா தார்க்குக் களைகணாக விளங்கும் பெருமானே! நீரே எங்களுக்குத் தாயும்தந்தையும் உற்றாரும் உறவினரும். அடியேனுடைய தமையன் தனக்குப் பிள்ளைப்பேறு இல்லாமையால், என்னுடைய பிள்ளையையே தன் பிள்ளையாக ஏற்றுக்கொண்டு தன் செல்வமனைத்தையும் இப்பிள்ளைக்கே ஆக்கி அன்றே தவஞ்செய்யப் போயி னான். பின்பு தாயத்தார்கள் அச்செல்வங்களையெல்லாம் தங்கள் வலிமையினால் கவர்ந்துகொண்டுவிட்டார்கள். நானோ ஒருத்தி. ஒருத்திக்கு இவ்வொருவனே மகன். இவனும் கருத்திலாச் சிறுவன். அடியேங்கட்கு வேறு துணை யாருமில்லை. கருணைக்கடலே! எங்கும் நிறைந் திருக்கின்ற நீர் அறியாதது ஒன்றுமில்லை என்று கூறி முறையிட்டாள். தரையில்விழுந்து இறைவனை வணங் கியவள் சற்றுக் கண்ணயர்ந்தாள்.

அவ்வமயம் சிவபெருமான் அவளுடைய கனவில் தோன்றினார். பெண்ணே! கேள்; விடிந்தபின் உனது தாயத்தார்களை அரசன் ஆணையின் துணைகொண்டு அரசவைக்கு வருமாறு செய்துவிடு; அவர்களை நீ ஆணையிட்டு மறித்துவிடு; நாம் அங்குவந்து வழக்குத் தீர்த்துத் தருவோம் என்றுகூறி மறைந்தார்.

உடன் அவள் விழித்தெழுந்தாள். இறைவன் கருணையை எண்ணி வியந்தாள். 'திக்கற்றவர்கட்குத் தெய்வமே துணையாம்' என்னும் மொழி என்னளவில் உண்மையாயிற்று என்று கூறி இறைவனை வணங்கி,

மகனோடு வீட்டினை அடைந்தாள். துயில்கொண்டாள். விடிந்தபின்னர் எழுந்தாள்; திருக்கோயிலின் வாயிலை அடைந்தாள். இறைவனை வணங்கினாள்.

பின்னர் தாயத்தார் வீட்டினை அடைந்தாள். எல்லோரும் கேட்கக் கூறத்தொடங்கினாள். தாயத்தார்களே! நீங்கள் அடுப்பில் நெருப்பிடாதீர்கள்; வேறிடம் செல்லாதீர்கள்; உமது பொய்வழக்கால் வென்றுபோக விடேன்; பலரறிய அரசாணையிட்டுள்ளேன். யாவரும் அரசவைக்கு வாருங்கள்; ஆன்றோர்கூறும் தீர்ப்பைக் கேட்டு எங்களது உரிமைப் பொருளைக் கொடுத்துப் போங்கள் என்று கூறி மறித்தாள். மறித்த அவள் முறையோ! முறையோ! என்று ஓலமிட்டுக்கொண்டு அரசவையை அடைந்தாள். அவையினரிடம் தன் வழக்கை எடுத்துக்கூறினாள். அவளது வழக்கைக் கேட்ட அவையினர் ஏவலர்களைவிடுத்து, தனபதியின் உரிமைத்தாயத்தார்களை மறித்து அவைக்கு அழைத்து வருமாறு ஆணையிட்டார்கள்.

அவ்வமயம் பெருமான் தனபதிபோல் திருவுருக் கொண்டார். தனது காதுகளிலே இரத்தினகுண்டலங்களும், மார்பில் கண்டிகைகளும் விளங்க மோதிரம் இட்ட கைகளைவிசிச் சிங்கஏறுபோலப் பெருமிதநடை நடந்து வந்தார். வரும்பொழுது இந்நாட்டில் அரசன் இல்லையோ! ஆன்றோர்கள் இல்லையோ! செங்கோல் கோடியதோ! தெய்வமும் இல்லையோ! என்று கூறிக் கொண்டு அரசவையை அடைவாராயினர்.

இவர் வருகையைக் கண்ட தாயத்தார்கள் மனம் தளர்ந்தார்கள். வியப்பு அடைந்தார்கள். வெல்வோம்

என்னும் மனவலியினை இழந்தார்கள். முன்பு பொய் வழக்கால் வென்றதை எண்ணி எண்ணி அச்சமும் நாணமும் கொண்டு நின்றார்கள். தனபதியாக வந்த அவ்விறைவன் மருமகனையும் தங்கையையும் தழுவிக் கொண்டு அந்தோ! வறியராகிவிட்டீர்களே என்று கூறி அழுதார். தங்கையும் புதல்வனும் தனபதியார் திருவடியில் விழுந்தழுதார்கள்.

தனபதியார் உடன் அவர்களை எடுத்துத் தழுவிக் கொண்டார். தமது கண்ணீராகிய வெள்ளத்தினுள் ஆழ்த்தினார். புதல்வனைப் பார்த்து, உனது மார்பில் ஐம்படைத் தாலியைக் காணவில்லையே. காற்சிலம்பு, தோளணி, நெற்றிச்சுட்டி, குண்டலம் ஆகியவைகளை யும் காணவில்லை. வெற்றுடம்பைக் காண்கின்றேன். என்பெறும் என்று இந்தப் பிள்ளையின் அணிகளையும் கவர்ந்துகொண்டார்கள்.

ஐம்படை மார்பிற் காணேன்
சிறுசிலம் படியிற் காணேன்
மொய்ம்படை மதாணி காணேன்
முகத்தசை சுட்டி காணேன்
மின்படு குழைகள் காணேன்
வெற்றுடல் கண்டேன் அப்பா!
என்பெறு மென்று பிள்ளைப்
பணிகளும் கவர்ந்தார் என்று.

இவ்வாறு சொல்லி வாய்விட்டு அழுதார். தங்கை யையும் மகனையும் ஆறுதல்செய்தார். நீங்கள் உங்கள் கவலையை விட்டொழியும்; தாயத்தார்கள் வழக்குத் தோற்றுவிடுமென்று கூறினார்.

இவ்வாறு கூறியவர் தனக்குப் பொருள் சேர்ந்த வழியினையும் கூறுவாரானுர். நட்பினரை வஞ்சித்தும், நம்பினவரை மோசஞ்செய்தும், இரவலருக்கு இம்மியளவும் கொடாது உலோபஞ்செய்தும், கடுவட்டி வாங்கியும் தேடியதல்லவே என் பொருள். அறவழியிலல்லவா தேடப்பட்டது. ஆதலின் இந்தப் பொருள் அழியாது என்று கூறினுர். கூறியவர் சோமசுந்தரக் கடவுள் எழுந்தருளியிருக்கும் திசைநோக்கித் தொழுதார். மாணிக்கம் விற்ற பெருமானே! இத்தாயத்தார் வழக்கை இவ்வவையார் முன்பாகத் தீர்த்தருளும் என்ருர். பின்பு அவையாரை நோக்கி அரசனது செங்கோலாகிய கயறு கட்டிய அறமாகிய தட்டிலே உங்கள் நாவாகிய துலாக்கோலையிட்டு நமது வழக்கையும் தாயத்தார் வழக்கையும் ஒப்பிட்டு நீதி வழங்குங்கள் என்ருர்.

அவர் கூற்றைக் கேட்ட அவையினர் இருவருடைய வழக்கினையும் கேட்டார்கள். நன்ருக ஆராய்ந்தார்கள். தாயத்தார் தொடுத்த வழக்குப் பொய்யான வழக்கு என்று தீர்ப்பு வழங்கினுர்கள். முடிவு கேட்ட தாயத்தார் இவர் தனபதி செட்டியாரல்லர் என்றனர். தாயத்தார் கூறியதைக் கேட்ட அவர் கைகொட்டி நகைத்தார். உடன் அவரவர் குடி, பட்டம், காணி, தந்தை, தாய், மாமன், மாமி முதலிய உறவினர் குணங்குறிகள் யாவற்றையும் விளக்கமாக அவையினர்கள் கேட்குமாறு கூறினுர். அதுகேட்ட பெரியோர்கள் இவரே தனபதிச்செட்டியார் என்றுகூறினர்.

உடனே தாயத்தார்கள் நம் வழக்குத் தோற்றது; இதனைப் பாண்டியன் அறிந்தால் நம்மைத் தண்டிப்பான் என்று எண்ணினுர்கள். சிலர் வீட்டுக்குப்போய்

வருகின்றேன் என்றூர்கள்; குளத்துக்குப் போய்வரு கிறேன் என்றூர் சிலர். இவ்வாறு கூறி அவரவர்களும் அவ்விடத்தை விட்டு அகன்றூர்கள். பெரியோர்களும் செல்வமெல்லாம் அப்புதல்வனுக்கே உரியது என்று தீர்ப்பளித்தார்கள். தனபதியாக வந்த இறைவனும் எல்லாருங்காண மறைந்தார்.

சுந்தரேசபாதசேகரபாண்டியன் இதனைக் கேள்வி யுற்று, தனபதியினுடைய புதல்வனுக்குப் பலவகைப் பரிசுகளைக் கொடுத்தான். சோமசுந்தரக்கடவுளுடைய திருக்கோயிலைப் பொன்னுல் புதுப்பித்தான். சிலநாள் சென்றபின் தன் புதல்வனுகிய வரகுணபாண்டியனுக்கு அரசினைக்கொடுத்துத் தான் சிவபிரானது திருவடியினை அடைந்தான்.

# 40. வரகுணனுக்குச் சிவலோகம்காட்டிய படலம்

---

வரகுணபாண்டியன் பாண்டிய நாட்டைச் செங்கோன்முறை வழுவாது அரசாண்டுவந்தான். ஒருநாள் பாண்டியன் வேட்டையில் விருப்பமுடையவனாகக் காட்டிற்குச் சென்றான். சூரியன் மறையும்வரை காட்டிலிருந்து வேட்டையாடினான். சூரியன் மறைந்தபின் மதுரைநகர் திரும்பினான். மதுரைக்குத் திரும்புங்கால் அவன் ஏறிச்செலுத்திய குதிரை மிகவேகமாகவந்தது. காட்டில் அயர்ந்து உறங்கிய பிராமணன் ஒருவன்மேல் குதிரை கால்வைக்க அவன் இறந்தான். பாண்டியன் அஃதறியாது தன் அரண்மனை அடைந்தான்.

இறந்த பிராமணனுடைய உறவினர்கள் அப்பிரேதத்தை எடுத்துச் சென்று பாண்டியனது அரண்மனையின் கடைவாயிலில் போட்டார்கள். நடந்த நிகழ்ச்சியை எடுத்துச் சொன்னார்கள். பாண்டியன் மனம் வருந்தியவனாய் வேண்டும் பொருள்களை அவர்கட்குக் கொடுத்து இறந்த பிராமணனுக்கு இறுதிக்கடன்கள் செய்யுமாறு கூறினான். பாண்டியனைப் பிரமகத்தி பிடித்துக்கொண்டது.

வரகுணபாண்டியன் பிரமகத்தியினால் மிகவும் துன்பமடைந்தான். அதனை எவ்வாறு போக்குவது என்று அறிஞர்களோடு ஆராயலானான். அவர்கள் கூற்றுப்படி அடியார்கட்கு அன்னமளித்தான். அரசப்பிரதட்சிணம் செய்தான், அறுகு கொய்து பசுவுக்குக்

கொடுத்தான். வேள்விகள் பல வேட்டான். பஞ்ச கவ்வியம், பசுக்கொம்பு தோய்ந்த தீர்த்தம் ஆகியவை களை உட்கொண்டான். கோதானம், பூதானம் முதலிய பல தானங்களைச் செய்தான். இவ்வளவு தானங்கள் செய்தும் அவனைப்பற்றிய பிரமகத்தி நீங்கவில்லை. நெய் ஊற்றிய நெருப்புப்போல் அவனைச் சூழ்ந்துகொண்டது.

பாண்டியனைப் பற்றிய பிரமகத்தியானது பெரு மூச்சுவிடும்; கையோடு கைதட்டும்; கோபித்து ஆர வாரிக்கும்; முன்னும் பின்னும் பக்கமும் தொடரும்; சிரிக்கும்; பழி தா என்று வந்து பற்றும்; இன்னும் பல வாறு பாண்டியனை நலிவுறுத்தும். இதனைக் கண்ட பெரியோர்கள் பின்னும் பாண்டியனை நோக்கி, அரசே! விரதமிருந்து நியமமாகச் சோமசுந்தரக்கடவுளை ஆயிரத் தெட்டுதரம் நீ பிரதட்சிணம் செய்துவரக்கடவாய்; இவ்வாறு பத்து நாட்கள் இடைவிடாது செய்தால் இப்பிரமகத்தி நீங்கும்வழியினைப் பெருமான் உனக்கு அருள்செய்வார் என்று கூறினார்கள்.

அவர்கள் கூற்றைக் கேட்ட பாண்டியன் திருக் கோயிலை அடைந்தான். சோமசுந்தரக் கடவுளை வழி பட்டான். பெருமானே! நீர் இந்திரனுக்கு ஏற்பட்ட பழியைப் போக்கியருளினீர். பிராமணனுடைய மகா பாதகத்தைப் போக்கியருளினீர். அதுபோல எளியே னுடைய பழியையும் போக்கியருளும் என்று கூறி அடியற்ற மரம்போல் கீழ்வீழ்ந்து பணிந்தான். பின்பு எழுந்தான். பெரியோர்கள் கூறியவாறு இறைவனை ஆயிரத்தெட்டுமுறை வலம்வந்து இறைஞ்சினான்.

இறைவன் அருளால் விண்ணினின்றும் ஒரு ஒலி எழுந்தது. பாண்டியனே! பிரதட்சிணம் செய்வோர்

ஒரு அடிக்கு ஒரு அஸ்வமேத யாகத்தைச் செய்த பலத்தினைப் பெறுவர்; நீயோ அத்தகைய முறையில் ஆயிரத்தெட்டு பிரதட்சிணம் செய்துள்ளாய்; இதனால் நாம் மனம் மிகமகிழ்ந்தோம்; நீ பயப்படவேண்டாம்; உன்னைப்பற்றி வருத்தும் பிரமகத்தி நீங்கும் என்று மேலும் கூறுவாராயினர்.

பாண்டியனே! சோழன் உன்னோடு போர்செய்ய வருவான். நீயும் அவனைப் போரிலே எதிர்ப்பாய். போருக்கு ஆற்றாது சோழன் புறங்காட்டி ஓடுவான். நீயும் அவனைவிடாது பின்பற்றி ஓடு. அவ்வாறு அவனை எட்டிப்பிடிப்பவன்போல் துரத்தி ஓடுகிறபொழுது நம்மை நாம் பூசித்துக்கொண்டிருக்கும் தலமாகிய திருவிடைமருதூரை அடைவாய். அத்தலத்தில் உன்னைப் பற்றியிருக்கும் பிரகத்திப்பழியைப் போக்கியருள்வோம் என்றும் கூறி அருள்செய்தார். இறைவனது கூற்றைக்கேட்ட பாண்டியன் மனம் மிக மகிழ்ந்து இறைவன் திருவருளை எண்ணித் தனது அரண்மனை அடைந்தான்.

சிலநாட்சென்றபின் சோழ அரசன் வரகுணபாண்டியனோடு போர்செய்ய எண்ணித் தன் சேனைகளோடு மதுரைமாநகரை அடைந்தான். சோழனது சேனைகள் வந்துள்ளதை ஒற்றர்மூலம் பாண்டியன் அறிந்தான். தன் சேனைகளோடு சோழனை எதிர்க்கத் துணிந்தான். பாண்டியனது சேனைக்கு ஆற்றாது சோழன்சேனை தோற்றது. சோழனும் நாணிப் புறங்காட்டி ஓடினான். பாண்டியனும் அவனை விடாமல் பின்பற்றித் துரத்திக் கொண்டு ஓடினான். அவ்வமயம் பாண்டியன் காவிரி நதியை அடைந்தான்.

காவிரிநதியை அடைந்த மன்னன் பூசத்துறையில் நீராடினன். காவிரிநதிக்குத் தென்பாலுள்ள திருவிடை மருதூர் திருத்தலத்தை அடைந்தான். திருக்கோயிலின் கீழவாயிலைக் கடந்து உள்ளே சென்றான். செல்லுதலும் அப்பாண்டியனைப் பற்றி வருத்திய பிரமகத்திப்பழியும் பாசமும் புறத்தேநின்றுவிட்டன. வரகுணபாண்டியன் உள்ளேசென்று மூலலிங்கத்தை வழிபட்டான். அன லிடைப்பட்ட மெழுகுபோல் உருகினன். மனம், வாக்கு, காயம் ஆகியவைகள் ஒன்றாகச் செயற்பட நீண்டநேரம் நின்று பல தோத்திரங்கள்கூறி இறைவனை வழிபட்டான். அவ்வமயம் இறைவன், பாண்டியனே! உன் பிரமசாயை கீழவாயிலில் நிற்கின்றது; ஆதலால் அவ்வழியே திரும்பாதே; மேலைவாயிலின் வழியாகச் சென்று மதுரையை அடைக என்று கூறியருளினர்.

வரகுணபாண்டியன் அச்சொல்லைக் கேட்டான். சிவபெருமானைப் பிரிந்திருப்பதற்கு மனம் மிக வருந்தினன். வாயில்கள்தோறும் இடைவிடாது விழுந்து வணங்கினன். மேலைவாயிலின் வழியாக வெளியே சென்றான். மேலைக்கோபுரத்தைத் தனது பெயரால் திருப்பணி செய்து முடித்தான். வேறு சில இன்றியமையாத திருப்பணிகளும் அக்கோயிலிற்செய்து சில நாள் அத்தலத்தில் தங்கியிருந்து பின் தலைநகரமாகிய மதுரையை அடைந்தான்.

பாண்டியன் தன்னைப்பற்றி வருத்திய பிரமகத்திப் பழியைப் போக்கியருளிய சோமசுந்தரக் கடவுளை நாடோறும் இடைவிடாது சென்று வழிபட்டான். பாண்டியநாட்டை நீதியினின்றும் வழுவாது அரசு ஆண்டு வந்தான். பல அறிஞர்களைக்கொண்டு சிவ

புராணம் சொல்லச்செய்து கேட்டான். சிவபுராணங் களும் ஆகமங்களும் ஒருசேர உலகங்களுள் சிறந்தது சிவலோகம் என்று கூறலாயிற்று. பாண்டியனும் அச் சிவலோகத்தைக் காண ஆசைகொண்டான். அன்று இரவே திருக்கோயிலை அடைந்தான். சோமசுந்தரக் கடவுளை வழிபட்டான்.

பெருமானே! நீர் அடியார்கள் சூழச் சிவலோகத் தில் எழுந்தருளியிருக்கும் காட்சியைக்கண்டு வணங்க எளியேன் ஆசை கொண்டுள்ளேன் என்று விண்ணப் பித்துக்கொண்டான். உடனே சிவபெருமான் அப் பாண்டியருடைய அன்புக்கெளியராகி, நம் உலகத்தை இன்று இங்கு வரச்செய்து இந்தப் பாண்டியனுக்குக் காட்டியருளுவோம் என்று திருவுளங்கொண்டார். அப்பொழுது சிவலோகம் கோடிசந்திரர்கள் பேரொளி பரப்பி ஒருங்கு உதித்ததைப்போல அங்கே வந்து தோன்றியது.

சிவபெருமான் திருநந்திதேவரை அழைத்து நமது உண்மை அன்பனாகிய வரகுணபாண்டியன் நமது உலகத்தைக்காண விரும்பினான்; நீ அதை அவனுக்குக் காட்டு என்று உத்தரவிட்டருளினார். அது கேட்ட நந்திதேவர் இறைவனை வணங்கிக்கொண்டு புறத்தே வந்தார். வரகுணபாண்டியனை அழைத்துக்கொண்டு போயினார். நதிகள், ஓடைகள், அமுத வாவிகள், பொற்றாமரைத் தடாகங்கள், பூஞ்சோலைகள், அகழி கள், திருமதில்கள், திருக்கோபுரங்கள், திருவிதிகள், திருமாளிகைப்பந்திகள், திக்குப்பாலகர்களுடைய புரங் கள், பிரமாவுடைய புரங்கள், விட்டுணு புரங்கள், உருத்திரர்களுடைய புரங்கள் இவற்றைக் காட்டினார்.

அதன்பின் சிவனடியார் திருக்கூட்டத்தையும் காட்டி உரைப்பாராயினர்.

பாண்டியனே! இவ்வடியார்களின் சிறப்பைக் கேள். இவர்களனைவரும் சூரியன் தோன்றுமுன்னே எழுந்து நீராடிப் பின் திருக்கோயிலை அடைவார்கள். அடைந்து திருவலகிடுவார். பின்னர் மெழுகுவார். நந்தவனஞ்சென்று மலர்கொய்து திருமாலை கட்டிக் கொடுப்பார். மணத்தோடுகூடிய தூபமிடுவார். திருவிளக்கேற்றுவார். சிவபெருமானின் புகழினைக் கேட்பார். இத்தகைய புண்ணியச் செயல்மிகுதியால் சிவசாலோக்கிய பதவியைப்பெற்று வாழ்கிறார்கள் காண் என்றார். இவர்களெல்லாம் சிவசாமீப்பிய பதத்தைப் பெற்ற அடியார்கள். இவர்களனைவரும் மலர், சந்தனம், தூபதீபம், திருமஞ்சனம், திருவமுது ஆகிய இவைகளைத் தேடிவைத்துக்கொண்டு, பஞ்சசுத்தி செய்து சிவலிங்கப்பெருமானைச் சிவாகம விதிப்படி உள்ளன்போடு பூசைசெய்து வழிபட்டவர்கள். இக்கூட்டத்தினரனைவரும் மூலாக்கினியை வாயுவால் எழுப்பிப் பிரமரந்திரம்வரையும் கொண்டுசென்று அங்கு உள்ள சந்திரமண்டலத்தை இளகப்பண்ணி அதனின்றும் இடை, பிங்கலை, சுழுமுனை ஆகிய மூன்று நாடிகள் வழியாகச்சொரியும் அமுதினை உண்டு, இறைவனைப் புருவநடுவில் தியானித்துச் சிவசாரூப்பிய பதத்தைப் பெற்றவர்கள் ஆவார்கள்.

மேலும் சிலரைக்காட்டி இவர்கள் சிவபெருமான் பொருட்டு வேள்வி செய்தவர்கள். புகழ் பயன் ஆகிய இவற்றைக் கருதாது தண்ணீர்ப்பந்தல் முதலாய பல தருமத்தைச் செய்தவர்கள். ஆகம விதிப்படி திருநீறு

உருத்திராட்சம் அணிந்து பஞ்சாட்சர ஜபஞ்செய்த வர்கள். இவர்கள் சதருத்திர மந்திரத்தை உச்சரித்த வர்கள். இவர்களெல்லாம் சிவனடியார்களைச் சிவ மாகவே பாவித்தவர்கள். இவர்கள் நிருவாணதீட்சிதர் கட்குச் சிவஞான நூல்களைத் தானஞ்செய்தவர்கள். இவர்கள் சிவபூசை செய்பவர்களுக்கு வேண்டும் பொருள்கள் கொடுத்து உதவிசெய்தவர்கள். இவர்கள் அடியார்கட்குத் தொண்டு செய்வதே கடமை என்று எண்ணிச் செய்தவர்கள். இவர்கள் அனைவரும் உன் குலத்து முன்னோர்கள் என்று வகைப்படுத்திக் கூறிக் காட்டினார் திருநந்திதேவர். பாண்டியனும் அவர்களை யெல்லாம் பணிந்தான். பின்னர் பாண்டியனை எல்லா உலகங்களுக்கும் தலைவராக விளங்கும் இறைவன் திருமுன்பு விடுத்தார்.

திருக்கயிலையில் இறைவன் இறைவியோடு இனிது வீற்றிருப்பதை வரகுணபாண்டியன் கண்குளிரக்கண்டு வணங்கினான். இறைவனின் இருபக்கத்தும் வேதமும் சிவாகமமும் நின்று வாழ்த்தின. தும்புரு நாரதர் முத லானோர் இசைபாடினர். தேவமாதர்கள் நடனமாடி னார்கள். விநாயகர், சுப்பிரமணியர், வீரபத்திரர் முதலா னோர் வணங்கி ஒருபுறம் நின்றனர். பிரம விட்டுணு இருவரும் ஆடையொதுக்கி வாய்பொத்திநின்றார்கள். இந்திரன் முதலிய தேவர்கள் எல்லாம் ஒருபுறத்தே ஒதுங்கி நிற்கலானார்கள். இந்நிலையில் இறைவன் இறைவியோடு இரத்தினத்தாலாகிய சிங்காதனத்தில் நடுநாயகமாக வீற்றிருந்தான். பாண்டியன் உரை தடு மாற, உரோமம் சிலிர்ப்ப இறைவனை உள்ளமுருக எண்ணி வழிபட்டான். அன்பாகிய ஆற்றில் மிதந்து சென்று அருட்கடலில் மூழ்கினான்.

இந்நிலையில் சிவபெருமான் வரகுணபாண்டியன் எதிரே சிவலோகம் முன்போல் மதுரையாகக் காட்சி தருமாறு திருவுள்ளம்பற்றினர். அவ்வாறே அதுவும் ஆயிற்று. இறைவனும் இறைவியும் பண்டுபோலாயினர். அந்நிலையைக் கண்ட பாண்டியன் எதிரேநின்று இறைவனைத் துதித்துப் பாடுவானாயினன்.

நாயினேன் றன்னை நடுக்கும் பழியகற்றித்
தாயினே ராகித் தலையளித்தாய் தாள்சரணம்
சேயினேன் காணச் சிவலோகம் காட்டிப்பின்
கோயினேர் நின்றவருட் குன்றேநின் தாள்சரணம்.

வெங்கட் பழியின் வினையேனை வேருக்கித்
திங்கட் குலக்களங்கந் தீர்த்தாய்நின் தாள்சரணம்
அங்கட் சிவபுரமுண் டன்புடையார்க் கென்பதையின்று
எங்கட்குக் காட்டி இசைவித்தாய் தாள்சரணம்.

பின்னர் வரகுணபாண்டியன் சோமசுந்தரக் கடவுளுக்குப் பூசை முதலியவைகளைச் சிறப்பாக நடத்துவித்து, செங்கோன்முறைமை வழுவாமல் அரசாண்டு கொண்டிருந்தான்.

இவ்வாறு கூறிய அகத்தியமுனிவரை முனிவர்கள் நோக்கி முனிவரே! சோமசுந்தரக் கடவுள் இந்திரனுடைய பழியையும், வெள்ளையானையின் சாபத்தையும், மகாபாதகத்தையும் இம்மதுரையிலே போக்க, வரகுணபாண்டியனுடைய கொலைப்பழியை மதுரையில் போக்காது திருவிடைமருதூரில் போக்கியமைக்கு யாது காரணம்? என்று வினவலானார்கள்.

முனிவர்களது இக்கூற்றைக் கேட்ட அகத்தியர் முனிவர்களே! சோமசுந்தரக்கடவுள் புண்ணிய மூர்த்தி

என்பதை அறிவீர்கள். தமது மதுரை நகரத்துள்ள அடியார்கள் மனம் போனவாறு நடந்து பாதகஞ் செய்து கெட்டுப்போதல் கூடாது என்று மனத்துட் கொண்டே இவ்வாறு மாற்றியருளினுர். இதனுல் மக்கள் பாதகம் செய்தற்கு அஞ்சுவார்கள் என்பது இறைவனுடைய திருவுள்ளக் குறிப்பாகும். இந்தக் குறிப்பை உளங்கொண்டே வரகுணபாண்டியனுக்கு ஏற்பட்ட பழியை மதுரையில் தீராது திருவிடைமருதூரில் தீர்த்தருளினுர் என்ருர். அப்போது முனிவர்கள் தங்கள் தலையசைத்து, சோமசுந்தரக் கடவுளுடைய திருவருளை எண்ணி வியந்து பேரானந்தப் பெருங்கடலில் மூழ்கினுர்கள். அன்றுமுதல் மதுரைநகர் பூலோக சிவலோகம் என்னும் பெயரினைப் பெற்று விளங்கிக் கொண்டிருக்கிறது.

## 41. விறகுவிற்ற படலம்

வரகுணபாண்டியன் முறை தவறாது பாண்டிய நாட்டினை அரசாண்டு வருவானாயினான். அவ்வமயம் வடநாட்டினின்று ஏமநாதன் என்னும் பெயருடைய ஒரு யாழ்ப்பாணன் மதுரையை வந்து அடைந்தான். அவன் பலநாட்டரசர்கள் முன்னிலையில் பாடிப் பரிசில் பெற்றவன். பாண்டியன் அரண்மனை அடைந்து யாழ் வாசித்து, பாண்டியனைத் தன் இசைக்கு ஆளாக்கினான். பாண்டியனும் ஏமநாதனுக்குப் பல வரிசைகள் நல்கி ஒரு வீட்டினைக்கொடுத்து இருக்குமாறு பணித்தான்.

ஏமநாதன் தனக்குப் பாண்டியமன்னன் செய்த வரிசையை எண்ணிக் களிப்படைந்தான். தன்னோடு இசை பாடவல்ல யாழ்ப்பாணர்கள் மதுரைமாநகரில் எவருமே இல்லையென்று கர்வங்கொண்டான். பாண்டியன் அதனை அறிந்து தன் அவைப்புலவனாகிய பாணபத்திரனை அழைத்தான். அழைத்தவன் நீ வடதேசத்தினின்றும் இங்குவந்த யாழ்ப்பாணனோடு இசைபாட வல்லையோ? என்றான். பாணபத்திரர் வணங்கி நின்று அரசே! சோமசுந்தரக் கடவுளுடைய திருவருளாலும், உமது பெருங்கருணையினாலும் யான் அவனோடு பாடி வென்று அன்னவன் பெற்றுள்ள விருதுகளை வாங்கி அவனது செருக்கினையும் அடக்குவேன் என்றார். பாண்டியன் பாணபத்திரனை 'நாளை பாடு; போ' என்று விடை கொடுத்தனுப்பினான்.

ஏமநாதன் பாண்டியன் அளித்த இல்லில் சென்று தங்கியிருந்தான். அவனுடைய மாணவர்களில் பலர்

கடைவீதி, அம்பலம், மாடங்கள், வீதிகள் ஆகியவிடங்களில் இசைபாடிக்கொண்டு திரியலானுர்கள். பாணபத்திரர் அவர்களது இசையினைக் கேட்டு வியந்தார். மாணவர்கள் பாடும் முறை இதுவானுல் ஏமநாதன் எவ்வாறு பாடுவானே என்று மனத்துள் எண்ணினுர். நான் நானை எம்முறையில் பாடி இவனை வெல்வது? என்று எண்ணினுர். உடன் திருக்கோயிலை அடைந்து, இறைவனை வணங்கிப் பெருமானே! நானை எளியேனுக்குத் துணைவந்து அருளவேண்டுமென்று வேண்டிக்கொண்டு வீடு திரும்பினுர்.

இறைவன் என்றும் அடியார்க்கெளியவராகலின் ஒரு வயதுமுதிர்ந்த மானுடவடிவந்தாங்கினுர். அழுக்கு நிறைந்த ஆடையை இடையிலுடுத்தார். கொடுவாள் ஒன்றை வலப்பக்கம் செருகிக்கொண்டார். தேய்ந்த பழைய செருப்பினைக் காலில் கொண்டார். கிழிந்துபோன உறையில் யாழ் ஒன்றை இட்டுத் தோளில் தாங்கினுர். குடுமி சரியத் தலையில் சும்மாடு தாங்கினுர். அந்தச் சும்மாட்டின்மீது வெட்டிய விறகுசுமையை ஏற்றிக்கொண்டார். பல இடங்களிலும் சுற்றியலைந்து குறுவியர்வரும்ப நடந்து ஏமநாதனின் வீட்டுவாயிலை அடைந்தார்.

அவ்வமயம் மாலைக்காலமும் வந்தது. பெருமான் விறகுசுமையைக் கீழிறக்கி வைத்தார். அவ்வீட்டின் புறந்திண்ணையில் அமர்ந்தார். இளைப்பாறிச் சிறிது இசை பாடினுர். ஏமநாதன் இசையைக் கேட்டான். புறத்தே வந்தான். விறகு சுமந்துவந்து அமர்ந்திருந்த கிழவர்முன் வந்து, நீ யார்? என்ருன். நான் பாணபத்திரருடைய அடிமை என்ருர் அவர்.

பாணபத்திரரிடம் பல மாணவர்கள் இசை பயில்கிருர்கள். நானும் அம்மாணவருள் ஒருவனுய் இசை கற்றுக்கொண்டிருந்தேன். பாணபத்திரர் ஒரு நாள் என்னை நோக்கி, நீ தசையெல்லாம் சுருங்க வயதில் மூத்துவிட்டாய்; இனி இசை கற்பதற்கு உரியையல்லை என்றுசொல்லி என்னை நீக்கிவிட்டார்; அதனுல் நான் விறகு வெட்டியாயினும் விற்று வயிறு வளர்க்கலாம் என்று எண்ணி இத்தொழிலினை மேற்கொண்டேன் என்ருர். அச்சொல் கேட்ட ஏமநாதன், நீ சற்றுமுன் பாடிய இராகத்தை இன்னெருமுறை பாடு என்ருன். விறகுசுமையாளர் யாழோசையோடு இயைந்து இனிய முறையில் பாடினுர்.

இவர் பாடியதைக் கேட்ட ஏமநாதன் மிகவும் வியப்புற்ருன். உலகிலுள்ள அனைத்துப் பொருளுமே இவரது இசைக்கு உருகி அசைவற்றிருந்தன. எவரும் எத்தொழிலினையும் செய்யாமல் திகைத்து நின்ருர்கள். ஏமநாதனுடைய உயிரையும் உடம்பையும் ஒருசேர உருக்கியது. ஏமநாதன் அவ்விசைவயப்பட்டு மயங்கி இருப்ப, விறகாளாக வந்து இசை பாடி மகிழ்வித்த பெருமான் விறகுசுமையோடு மறைந்தருளினுர்.

ஏமநாதன் இச்சாதாரிப்பிசை நான் அறிந்த சாதாரி அன்று. உலகில் எவரும் இவ்வாறு பாட நான் கேட்டதில்லை. இது தேவகானம். இதனை இவனுக்கு உணர்த்தியவர் கடவுளாகத்தான் இருக்கவேண்டும்; மனிதராக இருக்க முடியாது என்று எண்ணி வியந்தான். பாணபத்திரனுலே நீக்கப்பட்ட இக்கிழவனின் இசை இதுவானுல், அவ்வாசானின் இசை எத்தன்மையதோ என்று மனத்திடை யெண்ணினுன். எண்ணியவுடன்

எழுந்தான்; மாணவர்களை மறந்தான்; பெற்ற விருது களையும், கொண்டுவந்த பொருள்களையும் துறந்தான்; மானமும் பயமும் இழுத்துச்செல்ல அன்று இரவே வடதிசையைநோக்கி ஓடிவிட்டான்.

அன்றிரவு பெருமான் பாணபத்திரரது கனவில் தோன்றினர். 'அன்பனே! நாம் இன்று ஏமநாதனிடம் விறகாளாய்ப் போய், பாணபத்திரனுக்கு அடிமை என்று சொல்லி இசைபாடி வென்று, உன் வேண்டு கோளை முடித்தோம்' என்று கூறியருளுவாராயினர். உடன் பாணபத்திரர் விழித்து எழுந்தார். அன்பும் அச்சமும் உடையவராய் ஆலயத்தையடைந்து சோம சுந்தரக்கடவுளை வணங்கிப் பெருமானே! எளியேன் உம்மிடம் குறை இரந்தது காட்டுக்குச் செல்லவா? திருமுடியில் விறகுப்பொதி சுமக்கவா? வேதமறியாத திருவடி நடந்துவரவா? அந்தோ அடியேன் திறத்துக் குற்றம் விளைந்து விட்டதே: நீர் அடைந்த துன்பம் என்றால் அளவிட்டு உரைக்க முடியவில்லையே என்று பலவாறு கூறி வழிபட்டு அரண்மனையை அடைந்து வரகுணபாண்டியனையும் வணங்கினர்.

வரகுணபாண்டியன் பாணபத்திரர் வருகையைக் கண்டவுடன், ஏமநாதனை அழைத்துவரும்படித் தன் ஏவலர்களைவிடுத்தான். ஏவலர்கள் ஏமநாதனை வீட்டில் காணாது தேடினார்கள். அதனைக்கண்ட அயல்வீட்டார் சிலர், நேற்றிரவே ஒரு விறகாள் பாடிய பாட்டைக் கேட்டுப் பயந்து அவன் ஓடிவிட்டானென்று கூறினர். ஏவலர்கள் உடனே அரசனிடம் சென்று அதனைக் கூறினார்கள். பாண்டியன் வியந்து எதிர்நின்ற பாண பத்திரரை நோக்கி, நடந்தது யாது? என வினவினான்.

பாணபத்திரரோ தான் இறைவனை வேண்டியதையும், இறைவன் தனக்குக் கனவில் கூறியதையும் எடுத்துக் கூறி, இதுதவிர நான் வேறொன்றும் அறியேன் என்று கூறினார்.

ஏவலர்கள் விறகாள்பாடக் கேட்டு ஏமநாதன் ஓடிவிட்டான் என்றுகூறிய நிகழ்ச்சியும், பாணபத்திரர் கூறிய கனவுநிகழ்ச்சியும் ஒன்றாயிருக்கக்கண்டு இவை யாவும் இறைவன் திருவிளையாடலே என்று துணிந்தான். கோயிலை அடைந்து இறைவனை வணங்கினான். பாணபத்திரரை யானைமீதேற்றி நகர்வலம் செய்வித்துச் சிறப்புச் செய்தான். பல வரிசைகளையும் நல்கினான். முடிவாக 'நீர் இன்றுமுதல் இறைவரைப் பாடுதலையே கடனாகக்கொண்டு வாழ்க்கை நடத்தும்' என்று கூறி விடை கொடுத்தான்.

பாணபத்திரரோ தனக்கு வரகுண பாண்டியன் அளித்த வரிசைப்பொருள்களை அறிஞர்கட்கும் மாணவர்கட்கும் பகிர்ந்துகொடுத்தார். பின் பலரும் தன்னைச் சூழ்ந்துவர இனிமையாகப் பாடிக்கொண்டு வீட்டினை அடைந்து இன்புற்று வாழ்ந்திருந்தார்.

## 42. திருமுகங்கொடுத்த படலம்

---

வரகுணபாண்டியனுடைய வேண்டுகோளின்படி பாணபத்திரன் மூன்றுபொழுதும் திருக்கோயிலுக்குச் சென்று இறைவன்முன்பு இசைபாடும் நியமத்தை மேற்கொண்டான். அரசன்முன் பாடுதலை விடுத்தான். பாணபத்திரனுக்கு இசைத்தொழிலைத் தவிர வேறு எத்தொழிலும் செய்யத்தெரியாது. அதனால் பாணபத்திரன் பொருளின்றி வறுமையடைந்தான்.

இறைவன் பாணபத்திரன் வறுமையை நீட்டிக்க விரும்பவில்லை. பாண்டியனது கருவூலத்தில் உள்ள பொருள்களையெல்லாம் காவலர் அறியாதபடி திருப்படியில் கொண்டுவந்து வைத்தார். அப்பொருளைப் பாணபத்திரன் எடுத்துச் சென்று பிறரறியாவண்ணம் உருக்கி விற்றுச் செலவழித்து வந்தான். சிலகாலஞ் சென்றபின் சிவபெருமான் பாணபத்திரனுக்கு ஒன்றுங் கொடாதொழிந்தார். பாணபத்திரனும் இறைவன்முன் சென்று பாடிப்பாடி ஒன்றும் பெறாது வறிதே திரும்பி வந்தான்.

ஒருசமயம் பாணபத்திரர் தமது உறவினரோடு பசியினால் மிகவருந்தி உறங்கிக்கொண்டிருந்தார். சிவபெருமான் அவர் கனவில் தோன்றி, பாணபத்திரனே! நாம் இதுவரை உனக்குப் பாண்டியனுடைய கருவூலத்திலிருந்து இப்பொருள்களையெல்லாம் கவர்ந்து கொடுத்தோம்; பாண்டியன் அதுவறிந்தால் சந்தேகம் கொள்ளுவான்; எல்லாக்காவலும் அழியாமல் இருக்க,

பொருளைக் கவர்ந்தது அதிசயம்; இக்கள்வன் எங்கும் நிறைந்து விளங்கும் கள்வனோ அறியேன் என்பான்; அல்லாமலும் பண்டாரம் காக்கும் காவலர்களுக்கும் மிக்க தண்டனையும் கொடுப்பான் என்றார்.

மேலும் இறைவன் பாணபத்திரனை நோக்கி, நம்மிடம் உன்னைப்போல அன்புவைத்தவன் சேரநாட்டு மன்னனாகிய சேரமான்பெருமாள்; அவனுக்கு இதுபொழுது ஒரு ஓலை எழுதித்தருகிறோம் என்று கூறி, திருமுகப் பாசுரத்தை எழுதிப் பாணபத்திரன் கையில் கொடுத்து மறைந்தருளினார். பாசுரம் வருமாறு;-

மதிமலி புரிசை மாடக் கூடற்
பதிமிசை நிலவும் பால்நிற வரிச்சிற(கு)
அன்னம் பயில்பொழில் ஆல வாயில்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்(கு)
உரிமையின் உரிமையின் உதவி ஒளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க!
பண்பால் யாழ்பயில் பாண பத்திரன்
தன்போல் என்பால் அன்பன் தன்பால்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே.

பாணபத்திரன் இறைவன் அளித்த இத்திருமுகப் பாசுரத்தைக் கையில் ஏற்றான். பட்டாடைகொண்டு சுற்றினான். திருக்கோயிலை அடைந்து வலம் வந்தான். மேற்குத்திசைநோக்கி நடக்கலானான். மலைநாட்டைச் சார்ந்த திருவஞ்சைக்களத்தை அடைந்தான். அங்கு உள்ள தண்ணீர்ப்பந்தரில் தங்கியிருந்தான்.

அன்று இரவு சோமசுந்தரக் கடவுள் சேரமான் பெருமாளின் கனவில் தோன்றினர். அன்பனே! நாம் மதுரைநகரில் உள்ள ஒரு சித்தர்; உன்னைக் கண்டு பொருள் பெற்றுப் போகும்பொருட்டு நம்முடைய பாணபத்திரன் நம்முடைய திருமுக ஓலை கொண்டு இங்கே வந்துள்ளான்; பாணபத்திரனுக்கு வேண்டிய பொருளைக் கொடுத்து மதுரைநகருக்கு அனுப்பிவிடுக என்று கூறி மறைந்தார்.

உடன் சேரமான்பெருமாள் துயில்நீத்தெழுந்தார். தான் கண்ட கனவைத் தம்மவர்களுக்குச் சொன்னர். பாணபத்திரனைத் தேடிக் கொணரும்பொருட்டுத் தன் ஏவலர்களை விடுத்தார். ஏவலர்கள் எங்கும் தேடிக் காணுமல் தண்ணீர்ப்பந்தரில் அவர் இருக்கக்கண்டு விரைந்து சென்று சேரமான் பெருமானரிடம் கூறினர்கள். உடனே சேரமான்பெருமானர் சேனையோடு சென்று பாணபத்திரரைக் கண்டு அஞ்சலி செய்து பாடியாடிக் கீழேவிழ்ந்து வணங்கினர். அவரிடம் உள்ள திருமுகத்தைக் கையேற்று வாங்கிக் கண்ணில் ஒற்றிக்கொண்டார்.

சேரமான்பெருமானர் திருமுகத்தைத் தன் முடிமேல் வைத்தார். பின் கையேற்று வாசித்தார். எல்லையில்லாத இன்பக்கடலில் அழுந்தினர். திருமுகத்தைப் பொற்பலகையில் வைத்து யானையின்மீது ஏற்றினர். பாணபத்திரரை யானையின்முன்றல் உட்காரவைத்துத் தான் அவர்பின்னிருந்து அவருக்குக் கவரியிரட்டினர். பலவகை வாத்தியங்கள் முழங்க அவரை நகர்வலஞ் செய்வித்தார். தெருவில் உள்ளோரெல்லாரும் இந்த அரிய காட்சியைக் கண்டு களிக்கலானர்கள். பின்னர்,

பெண்கள் எல்லாம் அட்டமங்கலம் ஏந்திவரப் பாண பத்திரரைத் திருமாளிகைக்கு அழைத்துச்சென்ருர்.

பின் பாணபத்திரரை மங்கலநீரால் நீராடச்செய்து மகிழ்ந்தார். முறைப்படி ஆசனத்தில் அமரச்செய்து மலர்கொண்டு அருச்சனை புரிந்தார். திருவமுது உண்ண வேண்டுமென்று வேண்டிக்கொண்டார். உணவுண்ட பின்னர் அவர்க்குப் பஞ்சவாசம் முதலியன கொடுத்து நன்முறையில் உபசரித்தார்.

பின்பு சேரமான்பெருமானுர் பொன்னறையைத் திறந்துகாட்டிப் பாணபத்திரரைநோக்கி நீர் வேண்டும் பொருள்களை எல்லாம் எடுத்துச் செல்வீராக என்ருர். பாணபத்திரர் சேரமான்பெருமானுரை வணங்கி நீர் விரும்பி அளிப்பது எளியேனுக்குப் போதும் என்ருர். பின், சேரமான்பெருமாள்நாயனுர் விரும்பிக் கொடுப்ப வேண்டும் பொருள்களை அவர்பால் பெற்று யானைமேல் ஏற்றிக்கொண்டு பாணபத்திரர் மதுரைநகர் மீண்டார். சேரமான்பெருமாளும் பாணபத்திரரைச் சிறிது தூரம் உடன் வந்து வழிவிட்டார். மதுரையை அடைந்த பாணபத்திரர் சோமசுந்தரக்கடவுளை உடன் சென்று வணங்கினுர். தன்னைச் சார்ந்தவர்கட்கெல்லாம் பொன் னையும் பொருளையும் வாரிவாரி வழங்கிக் குபேரனைப் போல் வாழ்ந்திருந்தார்.

# 43. பலகையிட்ட படலம்

பாணபத்திரர் மூன்றுபோதும் சென்று இறைவன் திருமுன் இசையுடன் பாடல் பாடித் திரும்புவதை நியமமாகக் கொண்டவர். சேரமான் பெருமானாரிடம் இறைவன் அருளால் பொருளைப் பெற்றபின்பு அர்த்த யாமத்திலும் சென்று வணங்கி இடபதேவருக்குப் பின்புறமாக நின்று இசைபாடிவரும் ஒரு நியமத்தை மேற்கொண்டார்.

அவ்வமயம் ஒருநாளிரவு சோமசுந்தரக் கடவுள் முத்துச் சிவிகைமேற்கொண்டு திருப்பள்ளியறைக்கு எழுந்தருளினார். அப்பொழுது பெருமழை பெய்தது. பாணபத்திரர் மழையில் நனைந்து பாடவேண்டிய நிலைமை ஏற்பட்டது. என்ன நேரிடினும் கொண்ட கடமையில் ஒரு சிறிதும் வழுவாதவர் பாணபத்திரர். பாணபத்திரர் அன்பை உலகினருக்கு வெளிப்படுத்த, பெருமான் மழையினைச் சொரியச் செய்தார். பாண பத்திரர் மழையில் நனைந்துவந்து நியமம் தவருமல் இடபதேவருக்குப் பின்னின்று யாழை இடத்தோளிற் கிடத்தி நரம்பெறிந்து மிடற்றெலி செய்து, நரம்பு நனைந்து இசை மழுங்க, உடல் நனைந்து நடுங்க, விரல் மிறைத்து வலிக்க, கால் சேற்றிலே புதைய நின்று கொண்டு இனிய இசையில் பாடுவாரானார்.

*மாதர் ரகையாய்! மதுரேசர்*
*உண்பலிக்(கு)எம் மனைவாய் வந்து*
*காதன் முகத்தரும்பிக் காட்டியென்*
*சிந்தை கவர்ந்தார் போலும்;*

காதன் முகத்தரும்பக் கையறவு
திரக் கலப்பேன் பாதி
பேதையுரு வாயிருந்தார் நாணிவிழித்(து)
ஆவி பிழைத்தேன் போலும்.

ஐயரியுண் கண்ணாய்! திருவால
வாயுடையார் ஐயங் கொள்வான்
மையனகை செய்தென் வனமுலையின்
மேற்செங்கை வைத்தார் போலும்;
மையனகை செய்தென் வனமுலைமேற்
கைவைப்ப மாழ்கிச் சோர்வேன்
தையலிடங் கண்டு நடுநடுங்கி
விழித்(து)ஆவி தரித்தேன் போலும்.

பாட்டுக்கு இரங்கும் தமிழ்ச்சொக்கர் பாணபத்திரருடைய தொண்டைக்கண்டு அருள்புரிய எண்ணினார். பாணபத்திரா! இந்தப் பலகை உனக்கே; இப்பலகைமேல் நீ நின்று பாடு என்று விண்ணிடைக்கூறி ஒரு பலகையை இட்டருளினார். பாணபத்திரரும் இறைவனது ஆணைக்கு அஞ்சிப் பலகையின்மேலேறி நின்று இசைபாடி முடிந்த பின்னர் பலகையோடு வீட்டினை அடைந்தார். மழையும் நின்றுவிட்டது.

மறுநாள் காலையிலே வரகுண பாண்டியர் அச்செய்தியைக் கேள்வியுற்றுப் பாணபத்திரரை அழைத்து வரச் செய்தார். அவரை அப்பலகைமீது இருத்தினார். பலவகை ஆபரணங்களும் விளைநிலங்களும் அவருக்கு அளித்தார். பாணபத்திரர் நான்குகாலமும் முறையாக விடாது சென்று சோமசுந்தரக் கடவுளை வழிபட்டுக் கொண்டு வந்தார். சிலநாள் கழித்து வரகுணபாண்டியனும் சிவசாருப்பிய பதத்தினைப் பெற்றான்.

# 44. இசைவாதுவென்ற படலம்

---

வரகுண பாண்டியன் சிவசாருப்பியம் அடைந்தவுடன் அவனது குமாரனாகிய இராசராசபாண்டியன் முடிசூடிக்கொண்டு அரசாளத் தொடங்கினான். இவனுக்குப் பல மனைவியர்களும் காமக் கிழத்தியர்களும் உண்டு. காமக்கிழத்தியர் பலருள் ஒருத்தியை அரசன் தன் உயிரினும்மேலாகப் பாராட்டிப் போற்றிவந்தான். அவள் நல்ல இசையோடு பாடி அரசனை மகிழச்செய்வாள். அம்மங்கைக்கும் பாணபத்திரனது மனைவிக்கும் இசைபாடுவதிலே யார் உயர்வு என்ற பகைமூண்டது. காமக்கிழத்தி அதுபொழுது பாணபத்திரனுடைய மனைவிக்கு எதிராகப் பான்மகளொருத்தியைப் பாடவிட்டு அவள்செருக்கை அடக்கவேண்டும் என்று எண்ணிப் பாண்டியனிடம் கூறினாள்.

பாண்டியன் ஈழநாட்டிலிருந்து ஒரு விறலியை அழைப்பித்தான். அவ்விறலி பாடல்மகளிர்கள் இருபுறமும் சூழப் பாண்டியனெதிரே சென்று வணங்கி இசையோடு பாடல் பாடினாள். பாண்டியன் அவளை நோக்கி நீ நாளைக்குப் பத்திரன் மனைவியை நம்மெதிரில் பாட அழை; அவள் அவ்வமயம் மறுத்தாலும், நாம் அவன் சார்பாகி உன்னை விலக்கினாலும் நீ விடாமல் தொடர்ந்து சபதமிடு; போகாதே நில் என்று தடுத்துக் கொள் என்று சொல்லி விடுத்தான்.

பின்னர் பாண்டியன் பாணபத்திரர் மனைவியை அழைப்பித்தான். பெண்ணே! தன்னோடு இசைபாட

வல்லவர் உண்டோ என்று இங்கு ஒரு விறலி வந்திருக்கிருள்; நீ அவளோடு இசை பாடி வெல்லவல்லையோ என்றுன். அதற்கு அவள், அரசே! அடியேனிடம் சோமசுந்தரக் கடவுளின் அருளும் கற்பும் இருப்பதால் அவளோடு பாடி வெல்வேன்; ஒருபோதும் பின்னிட மாட்டேன் என்றுள். பாண்டியன் அவளையும் நாளை வா; போ என்று கூறி அனுப்பிவிட்டான்.

மறுநாள் பாண்டியன் அவ்விருவரையும் தன்சபையில் அழைப்பித்துப் பாடும்படி பணித்தான். ஈழநாட்டு விறலி பாணபத்திரன் மனைவியை வைதாள். இசை பாடலிலே உள்ள குற்றங்கள் எத்தனை? குணங்கள் எவ்வளவு? யாழுக்குரிய தெய்வம் யாது? உயிரெழுத்துக்கு மாத்திரை எத்தனை? மெய்யெழுத்துக்கு மாத்திரை எத்தனை? இவைகட்கு விடை கூறிவிட்டுப் பின் என்னேடு பாடு; இல்லையேல் உனக்குவசை என்றுள்.

பாணபத்திருடைய மனைவி 'இவள், தன் கல்வியின் பெருமையையும் வாதின் பெருமையையும், பலர் விரும்பும் பெண்மையின் செருக்கையும் அரசவை அறிய வாய் திறக்கவேண்டா? பெண்ணே! உன்னேடு வாது செய்வதற்கு உரியவளேயன்றி வையும் சண்டைக்கு உரியவளல்லேன்; உன்போன்று மானத்தை விற்றுப் பிழைப்பவர்களே அதற்கு உரிமையானவர்கள் என்றுள். பாண்டியன் சமாதானம் செய்வது போல் பேசி, 'இருவரும் பாடுங்கள்; தோற்றவர் வென்றவர்களுக்கு அடிமையாகிவிடுவதே முறை' என்று சொல்லி ஊக்கினுன்.

உடன் இருவரும் யாழ்மீட்டிப் பாடினர். முன் ஈழநாட்டு விறலி பாடினுள். பாணபத்திரன் மனைவி

பின்னர் பாடினுள். கேட்ட சபையினர்கள் உண்மையாகப் பாணபத்திரனுடைய மனைவியைப் பாராட்டினார்கள். அவர்கட்குப் பாண்டியனுடைய உட்கிடை தெரியாது. பாண்டியனே ஈழநாட்டு விறலியின் பாடலைப் புகழ்ந்தான். சபையோர்களும் அரசன் குறிப்பு அறிந்து ஈழநாட்டு விறலியையே பாராட்டினார்கள். பாண்டியன் அவையினரை நோக்கி 'இது ஒரு நாளில் முடிவுபெறக்கூடியதல்ல; ஆதலின் நீங்கள் இருவரும் செல்லுங்கள்' என்று விடை கொடுத்தான். ஈழநாட்டு விறலி களிப்புடன் தன் இருக்கையை அடைந்தாள்.

பாணபத்திரனுடைய மனைவியோ சோமசுந்தரக் கடவுளையடைந்து வழிபட்டு, கண்ணீர்சொரிய நின்று, பெருமானே! பாண்டியன் ஓரவழக்குப் பேசுகின்றான்; நான் என்செய்வேன் என்று புலம்பினுள். பெருமான் விண்ணிடை பெண்ணே! நாளை நீயே சபையிடை வெல்லுமாறு செய்வோம்; நீ அஞ்சாதே என்று கூறியருளினர். பாணபத்திரனுடைய மனைவி அதுகேட்டு விட்டுக்குப் போனுள்.

பாண்டியன் முன்னுள்போல மறுநாளும் இருவரையும் அழைத்துப் பாடச்செய்தான். அன்றும், அரசனும் அவையினரும் முன்னுள் கூறியவாறு ஈழநாட்டு விறலியே வென்றுள் என்று கூறினுர்கள். உடன் பாணபத்திரன் மனைவி அரசே! நீர் ஓரவழக்குச் சொல்லுகின்றீர்; அவையினரும் அவ்வாறே சொல்லத் துணிந்தார்கள்; ஆகையால் நாங்கள் இருவர்களும் இறைவன் சந்நிதியின்முன் பாடுகின்றேம்; எங்கள் இருவருடைய பாடலையும் கேட்டு இவள் வென்றுள் என்றுற்போதும் என்று கூறினுள். பாண்டியனும் அவ்வாறே செய்யுங்கள் என்று கூறினுன்.

அடுத்தநாள் பாண்டியன் தன் அமைச்சரோடும், அறிஞரோடும் சோமசுந்தரக் கடவுளின் சந்நிதியை அடைந்தான். விறலியர்கள் இருவரையும் அழைத்து வருமாறு ஏவலாளர்களை அனுப்பினன். ஈழநாட்டு விறலியோ, இன்று பாணபத்திரர் மனைவி எனக்கு அடிமையாகிவிடுவாள் என்ற செருக்கோடு வந்தாள். பாணபத்திரர் மனைவியோ, கற்பும் சிவபத்தியும் மிக்கு விளங்கப் பைய வந்தாள். சோமசுந்தரக் கடவுளும் அறிஞருள் ஒருவராக வந்து கூட்டத்திலமர்ந்திருந்தார். அவ்வவையில் முன்னர் ஈழநாட்டு விறலி பாடினாள். சபையார் ஒன்றுமே கூருது வாளா இருந்தார்கள். பின்னர், பாணபத்திரருடைய மனைவி கையில் யாழ் கொண்டு இனிய இசையோடு பாடலைப் பாடினாள்.

குடங்கை நீரும் பச்சிலையும்
இடுவார்க்(கு) இமையாக் குஞ்சரமும்
படங்கொள் பாயும் பூவணையுந்
தருவாய்; மதுரைப் பரமேட்டி!
படங்கொள் பாயும் பூவணையும்
தருவாய் கையிற் படுதலைகொண்(டு)
இடங்கள் தோறும் இரப்பாயென்(று)
ஏசு வார்க்கென் பேசுவனே.

பாணபத்திரர் மனைவி யாழ்மீட்டிப் பாடுங்கால் கழுத்து வீங்கவில்லை. கண் இமைக்கவில்லை. பற்கள் வெளியே தெரியவில்லை. புருவம் நிமிராமலும் கதுப்பு துடியாமலும் இருந்தன. இதனை நன்கு கண்ணுற்ற சபையினர் பெருமகிழ்வுற்றார்கள். பாண்டியன் தான் இசையில் வல்லவனாக இருந்தும் முன்புபோல் கூற முனைந்தும் இறைவன் திருவருளால் மனக்கோட்டம்

நீங்கிப் பாணபத்திரர் மனைவியே வென்ருள் என்ருன். அவையினரும் அவ்வாறே கூறினர்கள்.

பின்னர் பாண்டியமன்னன் ஈழநாட்டு விறலியின் கழுத்தில் பாணபத்திரரின் மனைவியை இருக்கச்செய் தான். அறிஞர்வடிவிலிருந்த இறைவன் இது அற்புதம் இது அற்புதம் என்று கூறிக்கொண்டு எல்லாருங்காண மின்னல்போல மறைந்தார். அதைக்கண்ட யாவரும் வியந்து இது இறைவனுடைய திருவிளையாடல் என்று தெளிந்தார்கள். இறைவனுடைய அருளையும் அடியவ ருடைய அன்பையும் எண்ணிப் பேரானந்தப்பெருங் கடலில் திளைத்தார்கள்.

பாண்டியன், முன்பு ஓரவழக்குச் சொன்னதை எண்ணிப் பயந்து ஈழநாட்டு விறலியினுடைய கழுத்தி லிருந்த பாணபத்திரர் மனைவியை இறக்கினன். உடன் அவளுக்குப் பற்பல வரிசைகள் கொடுத்தான். ஈழ நாட்டு விறலிக்கும் சில வரிசைகளைக் கொடுத்தான். இறைவனுக்கும் பொன்னுபரணங்கள் பல அளித்தான். அரசனின் ஆற்றல் தெய்வ ஆற்றலுக்குமுன் நில்லாது என்னும் உண்மை இப்பாணபத்திரன் மனைவியால் வெளிப்பட்டது. மன்னன் சிவபெருமானை வலஞ் செய்து வணங்கிக்கொண்டுபோய் தன் மாளிகையை அடைந்தான். சுகுணபாண்டியன் என்னும் புத்திரனைப் பெற்று வாழ்ந்தான்.

# 45. பன்றிக்குட்டிக்கு முலைகொடுத்த படலம்

குருவிருந்தத்துறை என்னும் ஒரூர் வைகையாற்றுக்குத் தெற்கேயுள்ளது. அவ்வூரில் தேவகுரு இருந்து தவம்செய்தார். பெருமான் அவருக்கு வரங்கொடுத்து, குருநாதர் என்னும் பெயரோடு அங்கே எழுந்தருளியிருக்கின்றார்.

அவ்வூரிலே சுகலன் என்னும் பெயரையுடைய வேளாளனொருவன் இருந்தான். அவன் மனைவியின் பெயர் சுகலை. அவளுக்குப் பன்னிரண்டு குழந்தைகள். அவர்கள் செல்வச் செருக்கினால் தமது பிள்ளைகளைக் கண்டியாது அன்புடன் வளர்த்தார்கள். வளர்க்கும் நாளிலே திடீரென்று தாய் தந்தையர்கள் இறந்துவிட்டார்கள். பிள்ளைகள் யாவும் வேடரோடு கூடிக் காட்டிலே வேட்டையாடித் திரிந்தன. ஒருநாள் அக்காட்டில் வெய்யில் புகாத செடியின் கீழே தவஞ்செய்து கொண்டிருந்த பிருகற்பதியைக் கண்டு கைகொட்டிச் சிரித்தார்கள். கற்களை அவர்மீது வாரியெறிந்தார்கள்.

உடன் பிருகற்பதி தமது தவத்துக்கு இடையூறு செய்த அப்பிள்ளைகளைக் கோபித்து, நீங்கள் உங்கள் குலத்தொழிலைமறந்து வேடர்தொழிலைப் பூண்டீர்கள்; நீங்கள் பன்றிக்குட்டிகளாகப் பிறந்து தாய் தந்தையர்களை இழந்து வருந்தக்கடவீர்கள் என்று சாபங்கொடுத்தார். உடனே அப்பிள்ளைகள் பன்னிருவரும் பயந்து

அடியேங்கட்கு இச்சாபம் எப்போது நீங்கும் என்ருர்கள். பிருகற்பதி கோபம் தணிந்து சோமசுந்தரக்கடவுளே உங்கட்குத் தாயாகவந்து முலேதந்து உங்களேக் காத்து, பாண்டியனுக்கு மந்திரிகளாக்கிப் பின் வீடுபேற்றையும் தந்தருளுவார் என்ருர்.

அவ்வேளாளப் பிள்ளேகள் பன்னிருவரும், அந்தக் குருவிருந்த துறைக்குப் புறத்தில் உள்ள காடுகளில் சஞ்சரிக்கும் பன்றிகளுக்கு அரசாகிய பெண்பன்றியின் வயிற்றிலிருந்து குட்டிகளாகப் பிறந்தார்கள். அந்தச் சமயம் பாண்டியன் காட்டில் வேட்டையாடிவிட்டுச் சேனேகள்சூழ மேற்கே போவாளுயினன்.

அவ்வமயம் ஒரு பன்றி, பன்றியரசன்முன்சென்று நின்று, எங்களரசே! பாண்டியன் இக்காட்டில் உள்ள மிருகங்கள் எல்லாவற்றையும் கொன்று வருகின்ருன் என்று கூறிற்று. உடனே பன்றி அரசன் அச்சொல் கேட்டு மிகவும் மகிழ்ந்தான். தன் மனேவியை நோக்கினன். நான் இன்று பாண்டியனுடன் போர் செய்யப் போகின்றேன்; வெற்றி தோல்வி யாருக்கு என்று தெரியாது; நீ உன் குட்டிகளேப் பாதுகாத்துக்கொண்டு இங்கேயே இரு என்று கூறினன். அதைக்கேட்ட பெண்பன்றி நாதனே! நான் உன்னேப் பிரிந்து தனியே இருக்கமாட்டேன்; நானும் கூடவருவேன் என்றது; வென்ருல் இருவரும் திரும்புவோம், இறந்தால் இருவரும் ஒருசேர இறப்போம் என்று கூறிக்கொண்டு தன் குட்டிகளுடன் புறப்பட்டது.

பன்றியரசு, பன்றிக் கூட்டமாகிய தன் சேனேகள் சூழ இடிபோல் முழங்கிக்கொண்டு முன்னடைந்தது. முன்சென்ற பன்றிகளில் பல, பாண்டியன் அம்புக்கு

இலக்காகி இறந்தன. எஞ்சிய பன்றிகள் பாண்டிய வீரர்கள் பலரைக் கொன்றன; பலரை ஊறுபடுத்தின. அவற்றைக் கண்ட வீரர்கள் அனைவரும் பன்றிகளை யெல்லாம் கொன்றொழித்தார்கள்.

இதனைக்கண்ட பெண்பன்றி நம் சேனைகள்யாவும் இறந்தொழிந்தன; நாமும் வீணாக இறக்கவேண்டாம்; தப்பிச் சென்றுவிடுவோம் என்றது. ஆண்பன்றி நுண்ணறிவுடையராகி நூலொடு பழகினும், பெண்ணறிவு என்பது பெரும் பேதைமைத்து ஆதலால் நீ உன்னறிவுக்கு ஏற்ப இது கூறினாய்; இது அறிவுடையோருக்கு இழுக்கைத் தருவதாகும்; அன்றியும் இரண்டு சிங்கங்கள் நிற்கும் நீர்த்துறையில் ஒரு பன்றி வந்து தண்ணீர் குடித்துத் திரும்பும். ஆனால் ஒரு பன்றி நிற்கின்ற நீர்த்துறையில் இரண்டு சிங்கங்கள் வந்து தண்ணீர் குடித்தற்கு அஞ்சும். நான் அத்தகைய வீரக் குடியில் பிறந்தவன். ஒன்று வெற்றி, அல்லது அழிவு என்று கூறிப் பாண்டியனை எதிர்த்தது.

இப்படி பன்றி எதிர்ப்பதைக்கண்ட பாண்டியன் பன்றியின்மீது பல பாணங்களைச் சொரிந்தான். விட்ட பாணங்களையெல்லாம் அப்பன்றி அழித்துவிட்டது. பாண்டியன் பொருது ஒரு இருப்பு உலக்கையை ஒரு யானையின்கையில் கொடுத்துத் தாக்கச்செய்தான். பன்றியரசு தனது கொம்பினால் யானையைக் குத்திக் கொன்றது. இதுபோன்று பாண்டியன் தேர் குதிரை ஆகியவற்றையும் அழித்தது. முடிவில் பாண்டியன் ஒரு இருப்பு உலக்கையால் பன்றியின் தலையில் மோத, அது இறந்தது. உடனே விமானமேற்கொண்டு தேவ உலகத்தை அடைந்தது.

கணவன் இறந்ததைக்கண்ட பெண் பன்றி, இனி தான் உயிருடன் இருப்பது முறையன்று; தன்னால் போர்செய்து வெல்லமுடியாது; ஆயினும் சுவர்க்கம் அடையலாம் என்ற எண்ணத்தால் மன்னனை எதிர்த்தது. பெண்ணை எதிர்ப்பது அரசனுக்கு முறையன்று என்ற காரணத்தால், வேடவிரர்கள் தலைவனாகிய சருச்சரன் என்பான் அப்பன்றியை எதிர்த்தான். பெண் பன்றியும் அவனை அடித்துப் பூமியில் விழ்த்த, அவன் இருப்புத்தண்டினால் அதன் தலையில் அடித்துவிட்டு, விழுந்திறந்து சுவர்க்கமடைந்தான். பெண்பன்றியும் இறந்து சுவர்க்கமடைந்தது. பாண்டியன் மதுரையை அடைந்தான். பன்றி விழுந்து மலையாயிற்று. அன்று முதல் இன்றுவரை அது பன்றிமலை என்று வழங்குகின்றது. அம்மலையில் சித்தர், முனிவர், தேவர்கள், யோகிகள் ஆகியோர் விடுபேறு அடையும்பொருட்டு என்றும் தவஞ்செய்துகொண்டிருப்பார்கள்.

இவ்வாறு கூறிய அகத்தியமகா முனிவரை முனிவர்கள் நோக்கி, சுவாமி! சடமாகிய பன்றிமலையின் மீது சித்தர், விஞ்சையர் முதலானோர் தவஞ்செயற்குக் காரணம் என்ன? என்று வினவினார்கள். அதற்கு அம் முனிவர் ரங்கவித்தியாதரன் என்னும் ஒரு கந்தருவன் புலத்திய முனிவருடைய தவத்தினுக்கு இடையூறாக இசை பாடினான். அவர் அவனைப் பன்றியாகுமாறு சபித்தார். உடன் வித்தியாதரன் அடியேனுக்கு இச் சாபம் எப்பொழுது நீங்கும் என்று வினவினான். அதற்கு அவர் இராசராசபாண்டியன் வந்து உன்னைக் கொல்வான்; அப்பொழுது நீங்கி முன்னை உருவம் பெறுவாய் என்றார். அவன் சரீரம் இம்மலையாகக் கிடப்பதால் இது பரிசுத்தமானது; முனிவர்கள் தவஞ்

செய்வதற்கு ஏற்றது; இறைவனும் அங்கு இனிது வீற்றிருப்பார் என்று கூறியருளினர்.

பன்றியரசும் பெட்டையும் இறந்தபின் பன்றிக் குட்டிகள் பன்னிரண்டும் திகைப்புற்று ஓடின; முலைப்பாலை விரும்பி வாடின; பசியால் துயருற்றன; வெயிலில் நிற்க ஆற்ருது நிழலைத் தேடிச் சென்றன. இறைவியோடு இறைவன் விண்ணிடைச் சென்ற போது இக்காட்சியைக் கண்டார். உடனே தாய் வடிவங்கொண்டு சென்று அப்பன்றிக் குட்டிகளைத் தழுவினர்; முலைப்பால் கொடுத்தார். அதனுல் அக் குட்டிகள் மிக்க வலிமையும், ஞானமும், நற்குணங் களும் பெற்றுவிளங்கின. உடன் அவைகட்கு முகம் மாத்திரம் பன்றி முகமாகவும், உடம்பு முழுவதும் மனித உடம்பாகவும் மாற்றி அருள்செய்து மறைந்தார்.

## 46. பன்றிக்குட்டிகளை மந்திரிகளாக்கிய படலம்

---

பன்றியின் முகத்தைக்கொண்ட பன்னிரு குமாரர்களும் இறைவனருளால் பன்னிரு சூரியர்கள் போல் விளங்கிப் பன்றிமலையில் இருந்தார்கள். பல கலைகளிலும் வல்லவர்களாக விளங்கினார்கள். அவ்வமயம் மீனாட்சியம்மையார் இறைவனது கருணை எல்லாவுயிர்கட்கும் சமமானதே என்னும் உண்மையை உலகத்தாருக்கு விளக்கத் திருவுள்ளம்பற்றினார். எண்ணிய அம்மையார் இறைவனை நோக்கி வினவலானார்.

பெருமானே! விலங்குகள் எல்லாவற்றுள்ளும் மிகவும் பொல்லாங்கை உடையது பன்றி. மேலும் அசேதனமானது. அப்பன்றிக்குட்டிகளுக்கு இரங்கி நீர் முலைகொடுத்து அதன் பண்டைய அறிவை மாற்றினீரே; என்ன காரணம்? என்று வினவினார். அதற்குப் பெருமான் வேதாகமங்கள் யாவும் நம்மைச் 'சகல சிவ தயாபரர்' என்று போற்றும். அதனால் சேதனம் அசேதனம் என்னும் இரண்டும் நமக்குச் சமமே. அது காரணமாகவே நாம் தாயை இழந்து பசியால் வருந்தும் பன்றிக்குட்டிகளுக்கிரங்கி முலைகொடுத்து அவைகளைக் காப்பாற்றினோம் என்றார். அது காரணமாக அவைகள் வலிமை, கல்வி, ஞானம் ஆகியவைகளைப் பெற்று விளங்குகின்றன. இனி அப்பன்றிக் குமாரர்கள் பாண்டியனுக்கு அமைச்சர்களாயிருந்து நம் கணத்தவர் ஆவார்கள் என்று கூறியருளினார்.

அன்றிரவு சோமசுந்தரக்கடவுள் இராசராசபாண்டியன் கனவில் தோன்றினர். பாண்டியனே! பன்றிமலையிலே பன்றிமுகமுடைய பன்னிரண்டு குமாரர்களிருக்கின்றார்கள்; அவர்கள் அளவில்லாத வலிமை, கல்வி, ஞானம் எல்லாமுடையவர்கள்; அப்பிள்ளைகளை நீ உனக்கு அமைச்சர்களாக ஆக்கிக்கொள் என்று கூறி மறைந்தார். உடன் பாண்டியன் உறக்கத்தினின்று எழுந்தான். பெருங்களிப்படைந்தான். உடன் தனது அமைச்சர்களை அனுப்பி அந்தக் குமாரர்களை அழைத்து வருமாறு செய்தான். அவர்களும் வந்து பாண்டியனை வணங்கினர்கள். உடன் பாண்டியன் அவர்கட்குப் பல வரிசைகளைக் கொடுத்தான். அவர்களைத் தனக்கு அமைச்சர்களாக ஆக்கிக்கொண்டான். பின்னர் முன்னைய அமைச்சர்களின் பெண்களை அவர்களுக்கு மணஞ்செய்துவைத்தான்.

பன்றிமுக வீரர்கள் பன்னிருவரும் அப்பாண்டியனுக்குக் கண்போன்று விளங்கிச் செயலாற்றினர்கள். அவர்கள் பன்னிருவரும் மிகுந்த ஒற்றுமையோடும் வாழ்ந்து வரலானர்கள். இறுமாப்பு என்பதே அவர்கட்கு இன்னதென்று தெரியாது. அரசன் விரும்பும் எதையும் அவர்கள் விரும்ப அஞ்சுவார்கள். அழலிடை அணுகாது விலகாது குளிர்காய்தல் போல இவர்கள் அரசனை அணுகாதும் விலகாதும் அஞ்சி அவனது நிழல்போல் ஒழுகும் தன்மையுடையவர்களானர்கள். நாட்டு மக்களைத் தங்கள் கண்ணைப்போலக் காத்து இறைப்பொருள் ஒன்றைமட்டுமே தம் அரசனுக்கு ஆக்கினர். தண்டித்த பொருளையோ அல்லது ஊறு செய்த பொருளையோ அவர்கள் ஈட்டுவதே இல்லை. அறத்தைத் தவிர வேறு எதனையும் செய்யார்கள்.

இவ்வாறு இவர்கள் நடந்துவருவதால் பாண்டிய மன்னனுக்குப் பெரும்புகழும் பெருகுவதாயிற்று. எல்லாத் திக்கினும் வெற்றியே கிட்டிற்று. இவ்வாறு சிலகாலம் சிறப்பாக வாழ்ந்திருந்து சிவலோகத்தை யடைந்து சிவகணநாதரானார்கள். இராசராசபாண்டிய மன்னனும் சிவபதவி அடைந்தான்.

இன்னவா றெழுகும் பன்னிரு வோரும்
ஈகையும் தருமமும் புகழும்
தென்னர்கோ மகற்கு வைகலும் பெருகத்
திசையெலாம் விசயமுண் டாக்கிப்
பன்னகா பரணன் சிவபுர மடைந்து
பரன்கண நாதருட் கலந்து
மன்னிவிற் றிருந்தார் மன்னர்மன் னவனும்
வான்பத மடைந்துவிற் றிருந்தான்.

## 47. கரிக்குருவிக்குபதேசித்த படலம்

இராசராசபாண்டியனுக்குப்பின் அவனது மகனுகிய சுகுணபாண்டியன் அரசினை ஏற்ருன். அக்காலத்தே ஒருவன் முற்பிறவியில் தருமத்தை மிகுதியுஞ்செய்தும் சிறிது பாவஞ்செய்தமையால் கரிக்குருவியாகப் பிறந்தான். அக்கரிக்குருவி, தனக்குக் காகம் முதலியவை ஊறு செய்ய, இரத்தம் சொரியும் தலையையுடையதாயிற்று, பறவைகளுக்கெல்லாம் எளியதும் ஆயிற்று. அதனுல் அது அஞ்சிப் பட்டணத்தைவிட்டு நீங்கிக் காட்டினை அடைந்தது. ஒரு மரத்தின்மேல் பெருமூச்சு விட்டுக்கொண்டு இருந்தது.

அவ்வமயம் திருநீறு உருத்திராக்கம் அணிந்த ஒரு அடியார் அவ்வழியேவந்து அம்மரநிழலில் ஒதுங்கினுர். அங்கு வந்தவர்களுக்கெல்லாம் மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்ருனும் சிறப்புடைய மதுரையைப் பற்றிக் கூறினுர். மதுரையிலுள்ள சோமசுந்தரக்கடவுள் தம்மை வழிபடுபவர்களுக்கு எளியராகி அவர்கள் விரும்பிய அனைத்தையும் இம்மையிலேயே கொடுத்தருளுவார்; ஏனைய மூர்த்திகளோ மறுமையிலேதான் இன்பத்தை அருளுவார்; ஆதலால் சிறப்புடைய மூர்த்தி சோமசுந்தரப் பெருமானே என்று அறிவுறுத்தினுர்.

இவ்வாறு அடியார் கூறியதை மரத்தின்மேலிருந்த கரிக்குருவி கேட்டது. நல்ல அறிவைப் பெற்றது. தன்னுடைய முற்பிறவியையும், கரிக்குருவியாகப் பிறந்தமையையும் அறிந்தது. உடன் பிறப்பை ஒழித்தற்கு இவ்வடியார் இங்குச் சொல்லியதே உறுதி என்று

துணிந்தது. காட்டினின்றும் நீங்கி மதுரைப்பதியை அடைந்தது. பொற்றாமரைவாவியில் நீராடிச் சோம சுந்தரக்கடவுளை வலமாக வந்தது. மனதினால் எண்ணி வழிபட்டது. இவ்வாறு மூன்றுநாள் அது நியதியாகச் செய்துவந்தது.

குருவியின் செயலைக்கண்ட அம்மையார் இறை வனை நோக்கி, இக்கரிக்குருவியின் செய்கை யாது? என்று வினவினார். பெருமான் அதன் வரவனைத்தையும் அம்மையாருக்கு அருளிச்செய்தார். அக்கரிக்குருவியி னிடத்துத் திருவருள்நோக்கம் காட்டினார். பண்டு மார்க்கண்டருக்கு மரணத்தை ஒழித்து நித்தியத்துவத் தைக் கொடுத்த மிருத்தியுஞ்சய மந்திரத்தை அந்தக் குருவிக்கு உபதேசித்தருளினார். உடன் அக்குருவியும் சிற்றறிவு நீங்கிப் பேரறிவு அடைந்தது. பெருமானைப் பலவாறு போற்றித் துதித்தது.

*எண்ணி லாவுயிர்க்(கு) இறைவ போற்றி! வான்*
*தண்ணி லாமதிச் சடில போற்றி! என்*
*புண்ணி யப்பயன் போற்றி! அங்கயற்*
*கண்ணி நாத! நின் கருணை போற்றியால்!*

இவ்வாறு துதித்துக்கொண்டு, எம்பெருமானே! அறிவின்றிச்செய்த தீமையால் இடையூறடைந்தேன். எளியேனை எதன்பொருட்டு ஆண்டுகொண்டருளினீர். யான் முன்செய்த புண்ணியத்தால் அல்லவோ எனக்கு இப்பொழுது இம்மந்திரத்தை உபதேசித்தருளினீர். எனக்கு இம்மந்திரம் இனி வரும்பிறவிக்கு நன்னெறி யடையும் வழியினைக்கொடுக்கும். ஆதலால் தமியேன் மும்மையிலும் நலமுடையேன் ஆயினேன் என்றும் கூறிற்று.

பின்னர் இறைவனை நோக்கி அக்குருவியானது வரம் கேட்கலாயிற்று. பெருமானே! என்னை எல்லாப் பறவைகளும் தீங்கு செய்கின்றன; அதனால் அந்தப் பறவைகளை அடக்கும் வலிமையைக் கொடுத்தருளும் என்றது. இறைவனும் அவ்வாறே நீ வலியையாகுக என்று அருள்செய்தார். மேலும் அந்தக் குருவியானது இறைவனை நோக்கி இவ்வலிமையை என் இனத்தார் எல்லாருமே பெற்று வாழ அருள்செய்யவேண்டும் என்றும் கேட்டு வரம் பெற்றது. இறைவனும் அவ் வாறே ஆகுக என்றார்.

அக்கரிக்குருவி தன்னைப்போலவே தன் குலமும் சிவபெருமானது திருவருளினால் வலியான் என்னும் சிறப்பினைப் பெற்று வாழலாயிற்று. கரிக்குருவியும் சிவபிரானுடைய திருவடியை அடைந்தது. தன்னோடு தன் குலமும் சிறக்க வாழவேண்டும் என்னும் வரத் தினைப் பெற்றமையை அறிஞர்கள் எண்ணி எண்ணி இன்புற்றார்கள். தக்கவன் ஒருவன் தான்வாழத் தன் கிளையும் வாழ எண்ணுவான் என்னும் உண்மையை இதனால் ஒருவாறு உணரலாம்.

## 48. நாரைக்கு முத்திகொடுத்த படலம்

பாண்டியநாட்டின் தெற்கே ஒரு சிற்றூர் இருந்தது. அவ்வூரில் ஒரு தாமரைத்தடாகம் உண்டு. அத்தடாகத்திலுள்ள மீன்களெல்லாவற்றையும் ஒரு நாரை உண்டுகொண்டிருந்தது. சிலநாள் மழை இல்லாமையால் அக்குளம் வற்றிப்போயிற்று. அந்நாரை இரையை விரும்பி அவ்விடத்தினின்றும் நீங்கி ஒரு காட்டை அடைந்தது. அக்காட்டிலே மிகப்பெரிய அளவில் ஒரு குளம் நான்கு பக்கமும் படித்துறைகளுடன் விளங்கிக் கொண்டிருந்தது.

இரையின்றிக் கீழே விழுந்த அந்நாரை இரையை விரும்பி அக்குளத்தின் கரையை அடைந்தது. அக்குளத்தில் முனிவர்கள் முழுகி முழுகி எழுந்தோறும் அவர்களுடைய தோட்புறத்திலே உள்ள சடையில் மீன்கள் தத்தி விழுவதைக் கண்டது. அம்மீன்களைக் கண்டு 'இவைகள் இம்முனிவர்களைத் தீண்டுவதற்கு என்ன தவஞ்செய்தனவோ? இம்மீன்களை நாம் உண்ணுதல் கூடாது' என்று இரையை வெறுத்துக் குளக் கரையில் இருந்தது.

முனிவர்களெல்லாரும் அந்தக் குளத்தில் முழுகிக் கரையேறி நித்திய கருமத்தை முடித்தார்கள். சந்தியா மடத்தில் இருந்து மதுரைப் புராணத்தைப் படிக்கலானார்கள். அவர்கள் மதுரைத் தலவிசேடம், சோமசுந்தரக் கடவுளாகிய மூர்த்திவிசேடம், பொற்றாமரையாகிய தீர்த்தவிசேடம் ஆகியவைகளை எடுத்துக் கூறினார்கள். சோமசுந்தரக்கடவுளுடைய திருவிளையாடல்

களையும் அவர் தம்மை அடைந்தவர்களுக்கு எளியவர் என்பதையும் அவர்கள் கூறினார்கள். அவைகளை அந்த நாரை கேட்டுக்கொண்டிருந்தது.

இறைவன் புகழைக் கேட்ட நாரை தனது அறியாமை நீங்கி, உண்மையறிவடைந்து, இறைவன்பால் கொண்ட அன்பு வா வா என்று இழுப்ப எழுந்து மதுரையை அடைந்தது. பொற்றாமரை வாவியிலே நீராடியது. சோமசுந்தரக்கடவுளை வலமாக வந்தது. சந்நிதியில் விழுந்து வணங்கியது.

இவ்வாறு பதினைந்துநாள் முறையாக இறைவனை நாரை வழிபட்டது. ஒருநாள் பொற்றாமரை வாவியில் நீராடும்பொழுது பசி மிகுதியும் வருத்தியது. அந்தக் குளத்துள் உள்ள மீன்களை உண்ணவேண்டும் என்று எண்ணியது. பின்பு இறைவனது அருளால் நல்லறிவு உண்டாயிற்று. அந்தோ இப்புண்ணிய தீர்த்தத்துள்ள மீன்களைப் புசிக்க எனக்கு ஆசை உண்டாகியதே; இப்பிறவி எனக்கு எப்போது நீங்கும் என்று பெரிதும் துக்கமடைந்தது. அதனால் பின்னும் பசியுடன் சோம சுந்தரக் கடவுளுடைய திருவடியைத் தியானித்துக் கொண்டிருந்தது.

அவ்வமயம் இறைவன் நாரையின்முன் தோன்றி, உனக்கு யாது வரம்வேண்டும்? கேள் என்றார். உடன் நாரை இறைவனை வணங்கிப் பெருமானே! இந்தப் பிறவியை நீக்கி எளியேனைச் சிவலோகத்தில் சேர்த்துக் கொள்ளல்வேண்டும் என்று வரம்கேட்டது. மேலும் என் இனப் பறவைகள் இப்புண்ணிய தீர்த்தத்துள் உள்ள மீன்களை உண்டால் என்றும் நீங்காத பழி வந்துசேரும்; ஆகையால் இந்தத் தீர்த்தத்தில் மீன்கள்

எக்காலமும் இல்லாது ஒழிதற்பொருட்டு தேவரீர் வரம் தரல்வேண்டுமென்று கேட்டது. சோமசுந்தரக் கடவுள், நாரை கேட்டவண்ணமே வரம் கொடுத்து மறைந்தருளினர். நாரையும் உடன் சிவசாரூப்பியம் பெற்று விமானமேறிக்கொண்டு தேவர்கள் மலர்மாரி சொரியச் சிவலோகத்தை அடைந்தது. கணநாதர் களுள் ஒருவராகவும் ஆயிற்று.

அன்று தொடங்கி இன்றுவரை பொற்றாமரை வாவியில் நீர்வாழுயிர்கள் ஒன்றும் இல்லாதொழிந்தன. இந்த நாரை தன் சுற்றமேயன்றி வேறு பறவைகளும் தன்போல் நற்கதியடையவேண்டும் என்று கேட்டு இறைவன்பால் வரம்பெற்றது வியத்தற்கு உரியதே. சுகுணபாண்டியனும் பாண்டியநாட்டில் சிவபுண்ணி யம் தழைக்கச்செய்து சுவர்க்கத்தை அடைந்தான்.

தன்கிளை யன்றி வேற்றுப்
பறவைகள் தாமும் தன்பால்
நன்கதி யடைய வேண்டிற்
றேகொல்இந் நாரை செய்த
அன்பினில் வியப்போ ஈசன்
அருளினில் வியப்போ அன்பர்க்(கு)
இன்புரு வான ஈசன்
அன்பருக் கெளிதே தைய.

# திருவாலவாய்க்காண்டம்

## 49. திருவாலவாயான படலம்

பாண்டியர்களுள் பெருஞ்சிறப்புடன் ஆண்டவன் சுகுணபாண்டியன். இம்மன்னனுக்குப் பின்பு சித்திர ரதன், சித்திரபூடணன், சித்திரத்துவசன், சித்திரவருடன், சித்ரசேனன், சித்திரவிக்கிரமன், இராசமார்த்தாண்டன், இராச சூடாமணி, இராசசார்த்தூலன், துவிசராச குலோத்தமன், ஆயோதனப் பிரவீணன், இராசகுஞ்சரன், பரராசபயங்கரன், உக்கிரசேனன், சத்துருஞ்சயன், விமரதன், விமபராக்கிரமன், பிரதாப மார்த்தாண்டன், விக்கிரமகஞ்சுகன், யுத்தகோலாகலன் அதுல விக்கிரமன், அதுல கீர்த்தி என்னும் இருபத்திரண்டு பாண்டியர்கள் வழிவழியாக ஒருவர் பின் ஒருவராய்ப் பாண்டியநாட்டை ஆண்டுவந்தனர்.

அதுலகீர்த்திக்குப்பின் அவன் குமாரனாகிய கீர்த்தி பூடணன் பாண்டிய நாட்டைச் சீரும் சிறப்புமாக ஆண்டுவரும்பொழுது பிரளயம் உண்டாயிற்று. அவ்வமயம் ஏழுகடல்களும் கரைகடந்து பேரார்வத்துடன் பொங்கிவரலாயிற்று. அது காரணமாக உலகமெல்லாம் அழிந்தன. சோமசுந்தரக் கடவுளுடைய விமானமும், இடபமலையும், யானைமலையும், நாகமலையும், பசுமலையும், பன்றிமலையும் அழியாதிருந்தன. வெள்ளமானது வடிந்தபின்னர் இறைவன் பண்டுபோல் உலகத்தைப் படைத்துச் சந்திரன், சூரியன், அக்கினி என்னும்

மூன்று குலத்தினின்றும் மூவேந்தர்களையும் படைத்தருளினர்.

அவ்வமயம் சந்திரகுலத்தில் தோன்றிய வம்மிச சேகரபாண்டியன், சோமசுந்தரக்கடவுளுடைய திருக்கோயிலுக்கு அருகில் ஒரு சிறு நகரினை உண்டாக்கி அந்த நகரிலிருந்து அரசாண்டான். அவ்வரசனுடைய ஆட்சிச்சிறப்பினுல் பாண்டியநாடு முழுவதும் வளங்கள் பெருகின. மக்கள் நல்லமுறையில் வாழ்க்கை நடத்தினர். மக்கள் தொகை பெருகிற்று.

பெருகிய மக்கள் அனைவரும் வாழ்வதற்கு ஏற்ற இடம் இல்லாது துன்பப்படலானுர்கள். இந்த நிலை அறிந்த பாண்டியன் திருக்கோயிலை அடைந்தான். இறைவனை வழிபட்டான். பெருமானே! அடியேன் எமது நாட்டிலுள்ள மக்களனைவரும் இடையூறின்றி இனிதுவாழ ஏற்றதொரு நகரம் அமைக்க வேண்டும்; மதுரை நகரத்தின் பண்டைய எல்லை எது என்று கண்டு கொள்ளக்கூடியதாக இல்லை; இதுபொழுது அடியேனுக்கு அவ்வெல்லை காட்டியருளவேண்டும் என்று வேண்டிக்கொண்டான்.

பாண்டியனது வேண்டுகோளைச் செவி மடுத்த சிவபெருமான் அரவாபரணம் அணிந்த ஒரு சித்தராய் மண்டபத்தின் ஒருபுறத்தே வந்து நின்றுர். அவ்வாறு வந்த பெருமான் தன் கையில் அணிந்துள்ள கங்கணமாகிய பாம்பைப் பார்த்து, நீ இப்பாண்டியனுக்கு இந்நகர எல்லையை அளந்து காட்டு என்று உத்தரவிட்டருளினுர். உடன் அவ்வரவு சித்தரை வணங்கிப் பெருமானே! இந்த நகரம் அடியேனுடைய பெயரால்

விளங்கும்படி அருள்காட்டும் என்று வேண்டிக் கொண்டது. இறைவனாகிய சித்தரும் அவ்வாறேயாகுக என்றார்.

உடன் அரவானது விரைந்து கிழக்குத் திக்கை அடைந்தது. அங்கு வாலைநீட்டி நகரத்தை வலமாகச் சூழும்படி உடலை வளைத்து, வாலை வாயில்வைத்துப் பாண்டியனுக்கு எல்லையைக் காட்டிவிட்டு, திரும்ப வந்து சித்தர்கையில் கங்கணமாயிற்று. சித்தரும் திருக் கோயிலில் எழுந்தருளினார்.

பாண்டியன் அப்பாம்பு எல்லை காட்டியபடியே சுவரெடுத்து மதில் அமைத்தான். தெற்குவாயிலுக்குத் திருப்பரங்குன்றமும், வடக்கு வாயிலுக்கு இடபமலை யும், மேற்கு வாயிலுக்குத் திருவேடகமும், கிழக்கு வாயிலுக்குத் திருப்பூவணமும் எல்லையாக வகுத்தான், அம்மதில் ஆலவாய்மதில் எனவும், அந்நகரம் ஆலவாய் நகரம் எனவும் அன்றுமுதல் பெயர் பெற்றன. பாண் டியன் நகரத்தையும் மண்டபம் கோபுரம் முதலியவை களையும் புதியனவாக அமைத்தான். இறைவனுக்குப் பலவகை ஆபரணங்கள் செய்து அணிவித்தான். அத் திருவாலவாய் நகரத்தில் பலவகைக் குடிகளையும் குடி யேற்றி அரசாண்டுகொண்டிருந்தான்.

# 50. சுந்தரப்பேரம்பெய்த படலம்

வம்மிசசேகர பாண்டியன் முறைதவருது பாண்டியநாட்டை அரசாண்டுவந்தான். அப்போது விக்கிரம சோழன் பாண்டியனை எதிர்க்க எண்ணினுன். தனக்குத் துணையாகக், கயபதி, நரபதி, துரகபதி என்னும் வடநாட்டரசர்களைச் சேர்த்துக்கொண்டான். அளவற்ற தன்னுடைய சேனைகளோடு பாண்டிய நாட்டை அடைந்தான். சோழன் தன்னையெதிர்க்க வருவதை அறிந்த பாண்டியன் திருக்கோயிலை அடைந்தான். இறைவனை வணங்கினுன். பெருமானே! விக்கிரம சோழன் எண்ணற்ற சேனைகளோடும், வடநாட்டரசர் சிலரோடும் என்னை எதிர்க்கவந்து நாட்டின் புறத்தே பாசறையில் தங்கியிருக்கின்ருன்; அவனோடு போர் செய்வதற்கு அடியேனிடம் அவ்வளவு சேனைகள் இல்லையே என்செய்வேன் என்ருன்.

பாண்டியனது அந்த வேண்டுகோளைக் கேட்ட பெருமான் ஆகாயத்தில் அசரீரியாகப் பின்வருமாறு கூறுவாராஞர். பாண்டியனே! பயப்படாதே; நீ முன் சென்று சோழனோடு போர்செய்; பின்னர் நாம் உனக்குத் துணையாகவந்து நீ வெற்றிபெறுமாறு அவனுடன் போர்செய்வோமென்று கூறியருளினுர். பாண்டியனும் அந்தச்சொல்லைக் கேட்டு மனமகிழ்ந்து கண்ணீர் சொரிய இறைவனை வணங்கிப் புறப்பட்டான். அவ்வமயம் ஓர் ஒற்றன் ஓடோடியும் வந்து சோழனுடைய சேனை இடபமலையைச்சார வந்துவிட்டது என்று கூறினுன்.

உடன் பாண்டியன் ஒரு தேர்மேற்கொண்டு பல வாத்தியங்கள் ஒலிசெய்ய, நால்வகைச் சேனைகளும் சூழப் போருக்குச் சென்றான். இருவர் சேனைகளும் எதிர்த்துப்போரிட்டன. ஒன்றை ஒன்று பின்னிடாது பொருதநிலையில், சோழனுக்குப் போர்த்துணையாக வந்த வடநாட்டரசர்கள் எதிர்த்துப் பொருதார்கள், பாண்டியனுடைய சேனைகளும் எதிர்க்கமாட்டாது உடைந்தன. அதுகண்ட சோழன் கர்வங்கொண்டு வெற்றிச்சங்கினை எடுத்து ஊதினான்.

இந்த நிலையில் சோமசுந்தரக்கடவுள் ஒரு வேட வடிவங்கொண்டு பாண்டியனுக்குச் சேனாதிபதியாகச் சென்று வில்லினை வளைத்துச் சுந்தரேசர் என்ற பெயர் பொறித்த அம்பைச் சோழசேனைமீது செலுத்தினார். அந்தப் பாணம் ஒன்று நூறாக ஆகிப் பல வீரர்களைக் கொன்றது. சோழன் இதனைக் கண்டு வியந்தான். ஒரு பாணத்தை எடுத்துப் படித்துப் பார்த்தான். அந்தப் பாணத்தில் சுந்தரேசரென்று பெயர் தீட்டியிருப்பதைக் கண்டான். மதுரைப்பெருமானே பாண்டியனுக்குத் துணையாக வந்துள்ளார் என்றறிந்து சோழன் திரும்பு வாராயினான்.

இதனைக் கண்ட வடநாட்டரசர்கள் சோழனை நில் நில் என்று கூறிக்கொண்டு சூழ்ந்துகொண்டார்கள். மன்னனே! நீ உன் ஆண்மையை மதியாது புறங் கொடுத்து ஓடுகின்றாயே; உன் ஆண்மைக்கு இது இழுக்கல்லவா? என்று கூறினார்கள். உடன் சோழ னுடைய சேனை பாண்டியனுடைய சேனையை எதிர்த் தது. இதனை அறிந்த பெருமான் மீட்டும் தன் பாணத் தைச் செலுத்திச் சோழன் சேனையை அழித்தார்.

சோழமன்னன் தன்னுடைய சேனைகளெல்லாம் அழிந்தமை கண்டு அஞ்சியவனாய், எஞ்சியுள்ள சிறு சேனைகளுடன் தோற்று ஓடுவானாயினான். இறைவனும் பாண்டியனுடைய மலர்ந்த முகத்தினைப் பார்த்தவராய்ப் புன்னகை கொண்டு மறைந்தருளினார். பாண்டியனும் தன்னுடைய வெற்றிச்சங்கினை ஊதி, யானைமீதேறி நகரத்தை அடைந்தான். பின்னர், இறைவனுக்குப் பல சிறப்புக்கள் செய்து பாண்டியநாட்டைச் சிறப்புற அரசாண்டு வருவானாயினான்.

## 51. சங்கப்பலகை தந்த படலம்

வம்மிசசேகரபாண்டியன் பாண்டியநாட்டை நீதி தவருது அரசாண்டு வந்தான். அந்நாளில் பிரமதேவர் காசியில் பத்து அசுவமேதயாகம் செய்து முடித்தார். முடிந்தவுடன் சரசுவதி, சாவித்திரி, காயத்திரி என்னும் தன் மனைவிமார் மூவருடன் கங்கைநதியில் நீராடச் சென்ருர். செல்லும்போது சரசுவதி தேவப்பெண் ஒருத்தியின் இசையைக் கேட்டுக்கொண்டு நின்ருள்.

கங்கைக்கரையை அடைந்த பிரமதேவர் சரசுவதியின் வருகை தாழ்த்தநிலையில் மற்றைய இரு மனைவியர்களோடு கங்கையில் நீராடிக் கரையேறினர். ஏறிய சமயம் சரசுவதி வந்து, என்னையின்றி நீர் முழுகியது என்னை? என்று கோபித்தாள். உடனே பிரமதேவர், குற்றம் உன்பால் இருக்க நீ நம்மைக் கோபிப்பது எதுகருதி? என்று வினவினர். பின்னர் நீ இத்தீங்கை எண்ணற்ற மனிதப்பிறவி எடுத்து போக்கிக்கொள்ளக் கடவாய் என்று சாபங்கொடுத்தார். உடன் சரசுவதி நடுங்கி உன்னுடைய துணைவியாகிய யான் மனிதப் பிறவியினை அடைந்து மயங்கலாமா? என்று கூறிக் குறையிரந்தாள்.

பிரமதேவர் உன் உடம்பாகிய முதலெழுத்து ஐம்பத்தொன்றினுள்ளே நாற்பத்தெட்டு எழுத்துக்கள் நாற்பத்தெட்டு புலவர்களாகப் பூமியில் பிறக்கும் என்ருர். நீ அந்த எழுத்துக்கள் எல்லாவற்றினும் நிறைந்து இருந்து அவ்வவ்வற்றினது தன்மையினை அடைக என்ருர். மேலும், இவ்வெழுத்துக்களின்

வேருயிருந்து இயக்குகின்ற 'அ' என்ற எழுத்துக்கு முதல்வர் சோமசுந்தரக்கடவுளேயாவார். அவரும் ஒரு புலவராகத் தோன்றி சங்கப்பலகையில் ஏறியிருந்து நாற்பத்தொன்பதாம் புலவராவார். ஏனைய நாற்பத்தெட்டு புலவர்கட்கும் அவரவர்கள் உள்ளம் விரும்பும் புலவராகி அவரவர்களுக்கு நல்லறிவையும் புகட்டி அருளுவார்.

பிரமன் கூறியவாறே நாற்பத்தெட்டு எழுத்துக்களும் வெவ்வேறு மக்களினத்தவராகத் தோற்றம் எடுத்தன. அவர்கள் அனைவரும் பதினெட்டு மொழிகளிலும் வல்லுனராய், தமிழிலே தலைமை சான்ற புலமையுடையவர்களாய் விளங்கினுர்கள். அப்புலவர்கள் அனைவரும் அக்குமாலையுடையவராய் அழகுற்று விளங்கினுர்கள். இறைவனுக்குப் பாமாலை சாத்துவதோடு அமையாது பூமாலையும் சாத்திச் சிவபூசை செய்துவருவாராஞர்கள்.

இவ்வாறு வாழ்ந்து வருகின்ற புலவர்கள், பல நாடுகளையும் அடைந்து, பெரிய புலவர்களையெல்லாம் வாதில் வென்றுர்கள். அதன் பின்னர், தாமிரபர்ணி ஆற்றினை அடைந்து மதுரையை நோக்கிச் செல்வாராஞர்கள். அந்நிலையில் பெருமான் ஒரு புலவருருக்கொண்டு அவரெதிரே சென்றுர். சென்றவர் அவர்களை வரவேற்று, நீங்கள் அனைவரும் மதுரைக்கு வந்து சோமசுந்தரக் கடவுளை வழிபட வேண்டும் என்று கூறுவாராஞர். அவர்களும் உடன்செல்ல ஆலயத்தை அடைந்து வணங்கச்செய்து மறைந்தருளினுர்.

புலவர்கள் அனைவரும் இச்செயல் கண்டு பெருவிருப்படைந்தார்கள். பலவாறு பாடல்களைப் பாடி

இறைவனை வழிபட்டார்கள். பின்னர் வம்மிசசேகர பாண்டியனையும்சென்று கண்டார்கள். பாண்டியனும் அவர்களது கல்வியறிவு ஒழுக்கங்களைக் கண்டு மிகவும் மகிழ்ந்து அவர்கட்கெல்லாம் பற்பல பரிசில்களை வழங் கினான். பின்னர் திருக்கோயிலுக்கு வடமேற்கே ஒரு சங்க மண்டபம் அமைத்து அந்தப் புலவர்களை அதில் வீற்றிருந்து தமிழாராயுமாறு பணித்தான். இப்புலவர் களைக் கண்ட பண்டைய புலவர்களெல்லாம் மனம் புழுங்கி அவர்களோடு வாதஞ்செய்து தோல்வியடைந் தார்கள். இவ்வாறு பலரும் வந்து அப்புலவர்களிடம் தோல்வியடைந்து திரும்பலானார்கள்.

இங்ஙிலையறிந்த புலவர்கள் ஒருநாள் இறைவனை வணங்கி மீளுங்கால் ஒருவரம் வேண்டலானார்கள். எமது பெருமானே! புலவர்கள் கூட்டங்கூட்டமாக வந்து வாதஞ்செய்து திரும்புகின்றார்கள்; அவ்வாறு வருபவர்களது புலமையை உள்ளவாறு அளந்தறிய வல்ல ஒரு சங்கப்பலகையை அடியேங்கட்குக் கொடுத் தருளும் என்று விண்ணப்பஞ்செய்தார்கள். அவ்வம யம் இறைவன் ஒருபுலவர் வடிவங்கொண்டு கையில் ஒரு பலகையை ஏற்று ஆங்கு காட்சி தந்தருளினார். புலவர்களே! இப்பலகை ஒருமுழச் சதுரமுடையது. சந்திரனைக்காட்டிலும் வெண்மையுடையது; மந்திர வலிமையுடையது; உங்கள் போன்ற புலவர்கட்கெல் லாம் ஒவ்வொரு முழமாக வளர்ந்து, இருக்க இடம் தரும்; இதுதான் புலமையை அளக்கும் அளவுகோல் என்று கூறி அப்புலவர்களது கையில் கொடுத்தார்.

சங்கப்புலவர்கள் அப்பலகையைக் கையிலேற்றுத் திருக்கோயிலை வலமாக வந்து சங்க மண்டபத்தை

அடைந்தார்கள். பலகையை ஆங்குவைத்துப் பூசை முதலாயின செய்தார்கள். அப்பலகையில் முன்னர் நக்கீரர் ஏறினர். பின் கபிலர், பரணர் இம்முறையில் ஒவ்வொருவராக ஏறி அமர்ந்தார்கள். எல்லாப்புலவர் கட்கும் பலகை ஒவ்வொரு முழம் வளர்ந்து இடங் கொடுத்தது.

சங்கப்புலவர்கள் அனைவரும் அளவற்ற செய்யுட் களைச் செய்யலானார்கள். அவைகளெல்லாம் சொல், பொருள், குறிப்பு ஆகியவைகளில் ஒற்றுமையுடை யனவாய் வேறுபாடறிய முடியாமல் இருந்தன. அது காரணமாக அப்புலவர்களுக்குள் கருத்துவேற்றுமை உண்டாகத்தொடங்கியது.

அங்கிலையில் சோமசுந்தரக்கடவுள் ஒருபுலவராகத் தோன்றினர்; அவர்களுடைய பாடல்களையெல்லாம் கொணரச்செய்து ஆராய்ந்து அவரவர் செய்யுட்களை அவரவர்கையில் கொடுத்தருளினர். வாங்கியபுலவர்கள் மனம் மகிழலானார்கள். அவரையும் தங்களோடு ஒரு புலவராக இருக்குமாறு வேண்டினர்கள். அவரும் அவர்களது வேண்டுகோளுக்கு இணங்கிப் புலவராக விற்றிருந்தார். பின் வம்மிசசேகரபாண்டியன் வம்மிச சூடாமணிக்கு முடிசூட்டிவிட்டுத் தான் இறைவன் திருவடியை அடைந்தான்.

# 52. தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்

---

வம்மிசசூடாமணி பாண்டியன் ஆலவாயண்ணல் பொருட்டு நந்தனவனம் வைத்தான். சம்பகவனமும் தனியே அமைத்தான். அவ்வனத்தில் பூத்த சம்பகமலர் களைக்கொண்டு இண்டை முதலாகிய பல மாலைகள் தொடுக்கச்செய்து, இறைவர்க்கு அணிவித்து மகிழ்ந் தான். அவ்வாறு அணிந்த இறைவனுடைய அழகிய கோலத்தை வழிபட்டான். உடன் அவரைச் சம்பக சுந்தரர் என்று அழைப்பது என்று முடிவுசெய்தான். இன்றும் அப்பெயர் இறைவனுக்கு வழங்கிவருகிறது. இக்காரணத்தால் பாண்டியனும் சம்பக பாண்டியன் என்னும் பெயரினைப் பெற்றான்.

ஒரு இளவேனில் காலத்தில் சம்பக பாண்டியன் தன் தேவியோடு சம்பகவனத்தையடைந்தான். அங்கு உள்ள ஒரு சந்திரகாந்தக் குன்றில் அமர்ந்திருந்தான். அவ்வமயம் நறுமணத்தோடு தென்றற்காற்று வீசிற்று. அதனைப் பாண்டியன் உணர்ந்தான். இந்த மணம் தென்றலால் சோலையில் கவரப்பட்டது அன்று. காற் றுக்கோ இயற்கையாக மணமில்லை. ஆயின் இது வேறு எம்மணம்? என்று ஐயப்பட்டு மனையாளைத் திரும்பிப் பார்த்தான். பார்த்த நிலையில் இம்மணம் மனையாளின் கூந்தலின் மணமே என்று துணிந்தான். இம்மணத்தை வண்டும் அறியாதே என்று எண்ணி மனத்துள் மகிழ்ந் தான். ஆயின் இம்மணம் கூந்தலுக்கு இயற்கையோ? செயற்கையோ? என்று ஐயங்கொள்ளலானான்.

ஐயங்கொண்ட பாண்டியன் ஆயிரம் பொன்னை ஒரு கிழியாகக் கட்டினன், என்னுடைய மனத்துள் எழுந்துள்ள ஐயத்தையறிந்து எவர் பாடல் பாடுகின்ருரோ அவர்கட்கு இவ்வாயிரம் பொன்னும் உரியது என்று கூறினன். பொற்கிழியை ஏவலாளர் கையில் கொடுத்து அதனைச் சங்கப்புலவர்பால் சேர்க்குமாறு கூறினன். சங்கப்புலவர்களும் அக்கிழியினைச் சங்க மண்டபத்தின்முன் தூக்கினர்கள். புலவர்களனைவரும் தனித்தனியே ஆராய்ந்தும் பாண்டியனின் கருத்தறிய முடியாது மனம் வருந்தலானர்கள்.

அவ்வமயம் தருமி என்னும் ஆதிசைவன் ஒருவன் இருந்தான் அவன் தாய் தந்தையர்களை இழந்தவன். பிரமசாரி. மணம் செய்துகொள்ளவேண்டும் என்ற எண்ணம் உடையவன். அந்த எண்ணம் காரணமாக ஒவ்வொரு நாளும் இறைவன்முன் சென்று வழிபட்டு, தன்குறையினைக் கூறிவருவானுயினன். பெருமானே! வேத சிவாகமங்களை ஓதியும் மணம் ஆகாமையால் நான் உம்மைப் பூசனைசெய்யும் பேறு பெற இயலாத நிலையினில் உள்ளேன். எனக்கு மணம் செய்து வாழ வேண்டுமென்ற எண்ணமும் உண்டாகின்றது. நீரோ எல்லாம் உணர்ந்தவர். ஆதலின், பாண்டியனின் மன எண்ணத்தை அறிந்து எனக்கு ஒரு செய்யுள் எழுதித் தந்தருளும். நான் அதனைக் கொண்டுகாட்டி, அந்தப் பொற்கிழியினைப் பெற்று திருமணஞ்செய்துகொண்டு உம்மைப் பூசிக்கும் பேற்றினையும் பெறுகின்றேன் என்று விண்ணப்பஞ்செய்தான். பெருமானும் அவன் வேண்டுகோளுக்கு இணங்கி,

**கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி!**
**காமஞ் செப்பாது கண்டது மொழிமோ**

**பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்**
**செறியெயிற்(று) அரிவை கூந்தலின்**
**நறியவும் உளவோ நீயறியும் பூவே.**

என்று ஒரு பாடலும் செய்துகொடுத்தருளினுர்.

தருமியும் வணங்கி அப்பாடலை ஏற்ருன். உடன் சங்க மண்டபத்தை அடைந்தான். சங்கப் புலவர்கள் கையிலே பாடலைக் கொடுத்தான். அந்தப் புலவர்கள் அனைவரும் அதனைக் கையில் ஏற்று வாசித்து, மிக நன்று என்று பாராட்டலானுர்கள். பாண்டியனிடம் சென்று கூறினுர்கள். பாண்டியனும் மனம் மகிழ்ந்து புலவனுக்கு ஆயிரம் பொன்னையும் கொடுத்து விடுங் கள் என்று கூறினுன்.

அரசனது கட்டளைப்படி தருமி புலவர்களோடு சங்க மண்டபத்தை அடைந்தான். பொற்கிழியை அறுக்க முற்பட்டான். அந்நிலையில் நக்கீரர் கண்டு கிழியை அறுக்காதே நில் என்று தடுத்தார். தடுத்தவர் இப்பாடல் குற்றமுடையது என்ருர். தருமி மிகவும் மனம் வருந்தியவனுய் இறைவன் சந்நிதியை அடைந் தான். பெருமான் திருமுன்பு பாடலை வைத்தான். பெருமானே! பிழையான இப்பாடலை அடியேனுக்கு எழுதிக் கொடுத்தருளினிரே: அது காரணமாக என் கைக்கு எட்டிய அப்பொருள் வாய்க்கு எட்டாது போயிற்றே என்ன செய்வேன் என்று கூறி முறை யிட்டான்.

உம்மைப் பலநாளும் வழிபட்டு வருகின்ற யான் பொருளை இழந்தமைக்காக வருந்தவில்லை; எவர்க்கும் மேலாகிய உம்முடைய செய்யுளுக்குச் சில்வாழ்நாள்

சிற்றறிவினை உடைய புலவரொருவர் குற்றங்கற்பித்து விட்டாரே; இனி யாரே உம்மை மதிப்பார் ? இந்த இகழ்ச்சி உமக்கேயன்றி எனக்கு அல்ல என்று கூறி மனமிரங்குவானாயினன்.

> வறுமைநோய் பிணிப்பப் பன்னாள்
> வழிபடும் அடியேன் நின்பால்
> பெறுபொருள் இழந்தேன் என்று
> பேசிலேன் யார்க்கு மேலாங்
> கறைகெழு மிடற்றோய்! நின்றன்
> கவிக்குற்றம் சில்வாழ் நாட்சிற்
> றறிவுடைப் புலவர் சொன்னால்
> ஆர்உனை மதிக்க வல்லார்.

தருமியின் மேலேகூறிய முறையீட்டைக் கேட்ட பெருமான் உடன் ஒரு புலவர்வடிவம் கொண்டார். திருநீறு உருத்திராக்கம் முதலியவைகளை அணிந்து கொண்டு சில மாணவர் குடைபிடிக்க, சில மாணவர் சாமரம் இரட்ட, ஏனைய மாணவர்கள் பின்வர, சங்க மண்டபத்தை அடைந்தார்.

இவ்வாறு சங்கமண்டபத்தை அடைந்த புலவர், அங்குள்ள புலவர்களை நோக்கி நமது செய்யுளுக்குக் குற்றஞ்சொன்னவர் யார்? என்றார். இவ்வாறு கேட்கு முன்னர் நக்கீரர் அஞ்சாது நானே சொன்னேன் என்று முன்வந்தார். புலவர் உடன் அச்செய்யுளில் உள்ள குற்றம் யாது? என்றார். நக்கீரர் சொற்குற்றம் இல்லை, பொருட்குற்றம் உளது என்றார். புலவர் பொருட் குற்றம் என்னை? என்றார். நக்கீரர் கூந்தலுக்கு மலரின் சேர்க்கையினால் மணம் உண்டேதவிர இயற்கையில் இல்லையே என்றார்.

புலவர் கற்புள்ள பெண்களின் கூந்தலோ என்றார். நக்கீரர் அதுவும் அத்தன்மையதே என்றார். பின் புலவர் தெய்வப்பெண்களுடைய கூந்தலோ என்றார். நக்கீரர் அதுவும் மந்தாரமலர் சேர்ந்து மணத்தலால் செயற்கை யானதே என்றார். புலவர் நீ நாளும் வழிபடுகின்ற திருக்காளத்தியப்பருடைய சத்தியாகிய ஞானப்பூங் கோதை கூந்தலும் அத்தன்மையதோ என்று வினவி னார். நக்கீரர் அதுவும் அத்தன்மையதே என்றார்.

உடனே புலவர் நெற்றிக்கண்ணைச் சிறிதுகாட்டி னார். நக்கீரர் அதற்கும் அஞ்சவில்லை. இந்திரன்போல உமது உடல்முழுதும் கண்ணானாலும் உமது பாடல் குற்றமுடையதே என்று முடிவாகக் கூறினார். நக்கீரர் இறைவனது நெற்றிக்கண் வெப்பத்திற்கு ஆற்றாது பொற்றாமரையில்விழுந்து அழுந்தினார். வென்ற புலவர் அங்கிலேயே மறைந்தார்.

## 53. கீரனைக் கரையேற்றிய படலம்

---

நக்கீரர் இறைவனது நெற்றிக்கண் வெப்பத்திற்கு ஆற்றாது பொற்றாமரைக்குளத்தில் விழுந்து துயருழந்தார். ஏனைய புலவர்கள் எல்லாரும் கண்டு பொறாது நடுங்கினார்கள். நக்கீரர் இல்லாத சங்கம் சங்கமன்று; அது அரசன் இல்லாத குடியும், நாயகமணி இல்லாத கண்டிகையும், ஞானமிலாதவர் கல்வியும் போன்றது; ஆயினும் இவரோ இறைவனோடு வாதிட்டுச் செய்த பிழையோ பெரிது; இது தீருமாறு யாங்கனம்? என்று எல்லோரும் சிந்திக்கலானார்கள்.

உடன் புலவர்கள் எல்லோரும் இறைவனுடைய பெருங்கருணையை மனத்தினுள் எண்ணலானார்கள். திருக்கயிலாய மலையை எடுத்த இராவணனுக்கும் பெருமான் அவன்பாடலுக்கு இரங்கி அருள்செய்தார்; ஆகவே இப்பிழையும் அவரருளால்தான் தீரவேண்டும் என்று தங்கட்குள்ளேயே கூறிக்கொண்டு இறைவன் சந்நிதியை அடைந்தார்கள். முன்னின்று பலவாறு குறையிரந்தார்கள்.

பெருமானே! மக்கள் அவரவர் செய்த புண்ணிய பாவங்களுக்கு ஏற்ப நல்ல பயனையும் தீய பயனையும் அடைந்தேதிருவார்கள். நீரோ உயிர்களுக்கெல்லாம் தாயும் தந்தையுமாக விளங்குபவர். நக்கீரர் கல்விச் செருக்கினால் அறிவழிந்து உமது பாடலுக்குக் குற்றங் கற்பித்து விட்டார். அதற்கு ஏற்ற துன்பத்தையும் அனுபவித்துவிட்டார். இனி அவர்செய்த பிழையைப்

பொறுத்து, அவருக்கு அருள்செய்யும் என்று வேண்டிக்கொண்டார்கள்.

அவ்வமயம் இறைவர் இறைவியோடு எழுந்து போய், பொற்றாமரை வாவியை அடைந்தார். புலவர் கூட்டத்துள் நின்று தமது அருட்கண்ணால் நக்கீரரைப் பார்த்தார். நக்கீரர் தன்செயலற்று இறைவன் செயலே உடையராய் அவரது அன்புருவமானார்.

உலக அன்னையாகிய ஞானப்பூங்கோதையாரின் கூந்தலுக்குத் தீங்கு சொல்லியருளிய என்னுடைய நாவின் குற்றத்தை அவரேயன்றி யாவர் பொறுப்பார்? என்று எண்ணினார். நேரிசைவெண்பா யாப்பினாலே கைலைபாதி காளத்திபாதி அந்தாதி பாடினார். அதை இறைவன் கேட்டு நேர்நின்று அவருடைய கையைப் பிடித்துக் கரையில் ஏற்றியருளினார்.

நக்கீரர் சோமசுந்தரக்கடவுளையும், மீனாட்சியம்மையாரையும் வணங்கிச் சிவபெருமான் தீமை செய்தவருக்குக் கோபமும், நன்மை செய்தவருக்கு அருளும் அளிப்பவர் என்னும் பொருளைக்கொண்டு கோபப் பிரசாதம் பாடினார்.

*அறனிலான் இழைத்த வேள்வி*
*அழித்தபே ராண்மை போற்றி !*
*மறனிலாச் சண்டிக்(கு) ஈந்த*
*மாண்பெருங் கருணை போற்றி !*
*கறுவிவீழ் கூற்றைக் காய்ந்த*
*கனைகழற் கமலம் போற்றி !*
*சிறுவனுக்(கு) அழியா வாழ்நாள்*
*அளித்தருள் செய்தி போற்றி !*

சலந்தரன் உடலங் கீண்ட
சக்கரப் படையாய் போற்றி!
வலந்தரும் அதனை மாயோன்
வழிபடக் கொடுத்தாய் போற்றி!
அலர்ந்தசெங் கமலப் புத்தேள்
நடுச்சிரம் அரிந்தாய் போற்றி!
சிலந்தியை மகுடஞ் சூட்டி
அரசருள் செல்வம் போற்றி!

அதன்பின் பெருந்தேவபாணியும் திருவெழுகூற்றிருக்கையும் பாடினர். பின்னர் இறைவருடைய திருவடிகளில் விழுந்து வணங்கியெழுந்தார். ஏனைய புலவர்களும் தனித்தனியே துதித்து வணங்கினர்கள். இறைவன் நக்கீரருக்குத் திருவருள்சுரந்து முன்போல் நீ புலவர்கூட்டத்துள் இருக்கக்கடவாய் என்று கூறி மறைந்தருளினர்.

நக்கீரரும் மற்றைப் புலவர்களும் சங்க மண்டபத்தின் முன்னே தொங்கிய பொற்கிழியை அறுத்துத் தருமிக்குக் கொடுத்தார்கள். பாண்டியனும் மேலும் சில வரிசைப் பொருள்களை அளித்தான். புலவர்கள் அனைவரும் மேலும் கல்விச்செல்வம் அடைந்து வாழ்ந் திருந்தார்கள். சம்பகபாண்டியனும் நாள்தோறும் சோமசுந்தரக் கடவுளை வணங்கிப் பல திருப்பணிகள் செய்து அரசாண்டுகொண்டிருந்தான்.

# 54. கீரனுக்கு இலக்கணமுபதேசித்த படலம்

நக்கீரர் சோமசுந்தரக் கடவுளுடைய ஆணையின் வண்ணம் சங்கப்புலவர் கூட்டத்தை அடைந்தார். அன்று தொடங்கி அழுக்காற்றை விடுத்து இறைவனுடைய திருவடிகளில் அன்புடையராய் வாழ்ந்து வந்தார். மன்மதனை இறைவன் எரித்தநிலையில் பிரமன் திருமால் இருவராலும் காப்பாற்ற முடியவில்லை; அவ்விறைவனது நெற்றிக்கண் நம்மைச் சுட்டபொழுது நம்மை அவ்வெப்பத்தினின்றும் காப்பாற்றியது இப்பொற்றாமரை வாவி; நம்மை இருமையினும் இனிக் காப்பாற்றுவது இவ்வாவியே என்று துணிவுகொண்டார். பின்னர் மூன்றுபொழுதும் பொற்றாமரையில் நீராடி இறைவனை வழிபடுவது என்பதை முறையாக மேற்கொண்டார்.

இறைவன் தம்மை நக்கீரர் காலம் வழுவாது வழிபடும் நியமத்தை அறிந்து திருவுளம் மகிழ்ந்தார். இப்புலவனுக்கு இலக்கணம் இன்னும் விளங்கவில்லை; அதனால் இவன் வழாநிலைச் சொல், வழூஉச் சொல் என்பவைகளை அறியவில்லை. இவனுக்கு ஒரு சிறந்த புலவனைக்கொண்டு இலக்கணம் சொல்லிக் கொடுக்க வேண்டும் என்று எண்ணலானார். அவ்வமயம் உமா தேவியார் தம் கை குவித்து இறைவனை வணங்கிப் பின்வருமாறு கூறலானார்.

பெருமானே! தாங்கள் உணராதது ஒன்றுமில்லை. தாங்கள் எண்ணினால் எவ்வுண்மையையும் யாருக்கும்

எடுத்து விளக்கலாம். ஆயினும் ஒன்று நினைவுறுத்து கின்றேன். அது என்னவெனில் பண்டு திருக்கயிலாய மலையில் பிரமன், விட்டுணு, இந்திரன் முதலிய தேவர் களும், சனகன் முதலிய முனிவர்களும், பிறரும் வந்து உம்மைத் தரிசிக்கும்பொருட்டுக் கூடினார்கள். அவ் வமயம் பூமி பொறுக்கமுடியாது வடகிழக்கு எல்லை தாழ்ந்தது. தென்மேற்கு எல்லை உயர்ந்தது. அவ்வ மயம் தேவர்களனைவரும் உம்மை வணங்கி உமக்குச் சமமாவார் ஒருவரை அந்தத் தென்மேற்கு எல்லையில் சென்று தங்கியிருக்குமாறு அனுப்பியருளவேண்டும். அப்பொழுதுதான் பூமி சமமாகும் என்று குறை யிரந்தார்கள்.

தேவர்கள் முறையிட்டைக் கேட்டவுடன் நம்மை ஒப்பவன் அகத்தியனே. நமது உமையை ஒப்பவள் அவன் மனையாளாகிய உலோபாமுத்திரையே என்று கூறி, அம்முனிவனைத் தென்னாட்டிற்கு அனுப்பினீர். அம்முனிவன் தென்னாடுசெல்ல விடை பெறுங்கால் தமிழிலிலக்கணத்தை உம்பால் கேட்டுத் தெளிந்து சென்றான். நீரும் தமிழ் முதல் இலக்கணநூலை அரு ளிச் செய்தீர். இலக்கண அறிவு பெற்ற பின்னரும் உம்முடைய அழகியகோலத்தை எப்பொழுது காண் பேன் என்றான். கடம்பவனத்தில் நம்மைக் கண்டு வழிபட்டு வேண்டிய வரங்கள் பெற்று, பொதியமலை யில்சென்று இரு என்று அனுப்பியருளினீர். அகத்திய னும் உலோபாமுத்திரையோடு பொதியமலையில் தங்கி இருக்கின்றான். நான் கூறியது உமது திருவுள்ளத் திற்கு இசைந்ததாக இருந்தால் அந்த அகத்தியனைக் கொண்டு கீரனுக்கு இலக்கணத்தை விளக்கியருளும் என்று வேண்டிக்கொண்டார்.

உமையின் அருளுரையைக் கேட்ட பெருமான் அவ்வாறே செய்வோம் என்று அகத்தியரை மனத்திடை எண்ணினர். இறைவன் எண்ணியவுடனே அகத்தியமாமுனிவர் உலோபாமுத்திரையோடு விண் வழியே வந்து மதுரைநகரத்தை அடைந்தார். திருக்கோயிலை அடைந்து வலமாக வந்தார். இறைவனையும் இறைவியையும் வழிபட்டு அங்கிருந்தார். அவ்வமயம் பொற்றாமரைவாவியில் நீராடி இறைவனை வழிபடும் பொருட்டு நக்கீரரும் அங்கு வந்துசேர்ந்தார்.

இறைவன் அகத்தியமுனிவர் எதிர்வர அவரை நோக்கி முனிவனே! இக்கீரனுக்கு இயற்றமிழ் விளங்கவில்லை. நீ நம்மிடம் கற்றுக்கொண்டபடி இவனுக்குக் கற்பிக்கக்கடவாய் என்று பணித்தருளினர். அகத்திய முனிவர் இறைவன்பணியைச் சிரத்தினும் மனத்தினுங் கொண்டு நக்கீரருக்கு முதனூலைத் தொகை வகை விரி முறையினாலே, காண்டிகையுரையானும் விருத்தியுரையானும் ஐயந்திரிபறப் போதித்தார். அவர் போதிக்கும் ஆற்றலைக் கண்ட சிவபெருமான் திருவுளமகிழ்ந்து அகத்தியமுனிவருடைய முதுகைத்தடவி வேண்டிய வரங்களையெல்லாம் கொடுத்து இருக்கையில் செல்ல விடுத்தருளினர்.

உலோபாமுத்திரையோடும் அகத்தியமகாமுனிவர் விடைகொண்டு போனபின் உமையானவள் இறைவனை நோக்கி, கீரனுக்கு இலக்கணத்தை நீர் போதிக்காது அகத்தியனைக்கொண்டு போதித்ததென்னை என்று கேட்டார். இறைவன் தம்மை நாளும் இடைவிடாது வழிபடுவோருக்கும், தமக்குப் பொருள் கொடுப்போருக்கும், தம்மிடத்தே பொருமை இல்லாதவருக்கும்,

தமது சொல்லைக் கடவாதவருக்குமே நூல்கற்பித்தல் அறமாகும். இவன் நம்மிடத்தே பொறுமை கொண்டதனால் நாம் கற்பியாது அகத்தியனைக்கொண்டு கற்பித்தோம் என்று கூறியருளினார்.

நக்கீரர் அகத்தியரிடத்து முதல்நூலைக் கற்றுக் கொண்டார். வழுவும் வழாநிலைமுடிபும் உற்றுநோக்கினார். நான் அறியாமையினாலே எல்லாம்வல்ல இறைவனுடைய பாடலில் பொருட்குற்றம் கூறினேன்; வேதசிரசினாலும் தீண்டமுடியாத திருவடிகள் பூமியில் தீண்டும்வண்ணம் எழுந்தருளிவருமாறு பிழை செய்தேன்; என்னுடைய சிற்றறிவு கருவத்தை ஊட்டிவிட்டது; பெருமானுக்கு அடியேன் செய்த தீங்கினால் அடியேனை அவருடைய நெற்றிக்கண் சுட்டது; அடியேனது நெஞ்சமும் சுடுகின்றது என்று எண்ணி எண்ணித் துயரத்திலழுந்தினார்.

பின் இறைவனின் கருணையை எண்ணி, தாய் தனது குழந்தைக்குக் கசப்பு மருந்தைக் கொடுத்து அதன் நோயைப் போக்குதல் போல, எளியேனையும் தண்டித்து அறிவுறுத்திய பெருங்கருணைப் பெருமானுக்கு எளியேன் என்ன கைம்மாறு செய்யலாகும் என்றெண்ணினார். எல்லையற்ற ஆனந்தங்கொண்டார். தமக்கு அகத்தியமுனிவர் போதித்தருளிய முதனூலை ஏனைய புலவர்கட்கும் போதித்துப் பெருமானுடைய திருவடித்தாமரைகளிலே நிறைந்த அன்போடிருந்தார்.

## 55. சங்கத்தார் கலகந்தீர்த்த படலம்

---

கடைச்சங்கப்புலவர் நாற்பத்தெண்மரும் தங்கள் தங்கள் பாடல்களில் எது உயர்வு என்று எண்ணத் தொடங்கினர். அதனால் ஒவ்வொருவரும் செருக்குக் கொள்வாராயினர். அதுகாரணமாக ஒவ்வொருவரும் தங்களைத் தாங்களே மதித்துக்கொள்வாராயினர். அவர்களுடைய ஏற்றத்தாழ்வுகள் தீர்ந்தபாடில்லை. மாறுபட்ட வழக்கை அளக்கவல்ல சோமசுந்தரக் கடவுளின் சந்நிதியை அடைந்தார்கள். பெருமானே! இப்பாடல்களுள் உள்ள உயர்வு தாழ்வுகளை எடுத்துக்காட்டி எங்களுக்கு அருள்செய்யவேண்டும் என்று வேண்டினார்கள்.

இறைவன் மூலலிங்கத்தினின்றும் ஒரு புலவராய் வெளிப்பட்டுவந்தார். புலவர்களை நோக்கினார். புலவர்களே! இம்மதுரைநகரத்தில் தனபதி என்னும் பெயர் கொண்ட வணிகன் ஒருவன் இருக்கின்றான். அவன் மனைவி குணசாலினி. அவ்விருவரும் செய்த பெருந்தவத்தால் ஒரு குமாரன் தோன்றியிருக்கிறான். அவன் பெயர் உருத்திரசருமன் என்பதாம். ஐந்துவயது நிரம்பியவன். ஊமைப்பிள்ளை. பிள்ளையை ஊமை என்று இகழாது அழைத்துக்கொண்டுபோய் அப்பிள்ளையின் எதிரே உங்கள் பாடல்களைச் சொல்லுங்கள். அவனது அறிவுக்கிசைந்தபாடல் எதுவோ அதுவே யாவராலும் நன்கு மதிக்கப்படும் பாடலாகும் என்று அருளினார்.

புலவர்கள் பெருமானே! அந்த மகன் ஊமையானால் அடியேங்களுடைய பாடல்களைக் கேட்டு,

நன்மை, தீமைகளை எவ்வாறு பகுத்துணர்ந்து கூறு வான் என்று குறையிரந்தார்கள். அதற்குப் பெருமான் அந்த ஊமைப்பிள்ளை தனக்குப் பொருந்தச் சொல் லாழமும் பொருளாழமும் உடைய செய்யுட்களைக் கேட்டால் கண்ணீர்வார, உடம்பெல்லாம் மயிர் சிலிர்ப்ப, தலையசைத்து மகிழ்வுறுவான்; அவ்வமயம் உங்கள் பிணக்கெல்லாம் நீங்கிவிடும் என்று கூறி விட்டு உள்ளே புகுந்து மறைந்தருளினர்.

பின்னர் புலவர்களெல்லோரும் உருத்திரசருமரை அழைத்துக்கொண்டுபோய், சங்கப் பலகையின்மேல் இருக்கச்செய்தார்கள். அவருக்கு வெண்சந்தனம் பூசி ஞர்கள். வெண்மலரைக்கொண்டு அவரை அருச்சித் தார்கள். அப்புலவர்கள் அவர் திருமுன் கீழிருந்து தங்கள் தங்கள் பாடல்களைச் சொன்ஞர்கள். உருத்திர சருமர் அவைகளைக் கேட்டுச் சிலருடைய சொல்லமை தியை மகிழ்ந்து ஏற்ருர். சிலருடைய பொருளமைதியை இகழ்ந்தார். சிலரது பாடலின் சொல்லமைதியையும் பொருளாழத்தையும் புகழ்ந்தார். நக்கீரர், கபிலர், பரணர் ஆகிய மூவர்பாடலைக் கேட்டபோது அவ்வா ருகாது சொல்தோறும் பொருள்தோறும் நுழைந்து அவற்றின் இன்சுவையை உண்டு உடம்பு பூரிப்ப, கண்ணீர் வார, மெய்ம்மயிர் சிலிர்ப்ப, தலையசைத்துப் பெருமகிழ்ச்சியுற்ருர். உடனே புலவர்கள் பிணக்கும் தீர்ந்தது. அம்மூவர் செய்யுளும் பாடல்களில் சிறந்து விளங்கின.

# 56. இடைக்காடன் பிணக்குத்தீர்த்த படலம்

பாண்டியநாட்டைச் சீரும் சிறப்புமாக அரசாண்டு சம்பக பாண்டியன் சிவபதவி அடைந்தான். பின்பு பிரதாப சூரியபாண்டியன், வம்மிசத்துவசபாண்டியன், ரிபுமர்த்தனபாண்டியன், சோழ வம்மிசாந்தக பாண்டியன், சேரவம்மிசாந்தக பாண்டியன், பாண்டிய வம்மிசேச பாண்டியன், வம்மிச சிரோமணி பாண்டியன், பாண்டியேசுர பாண்டியன், குலத்துவச பாண்டியன், வம்மிசவிபூடண பாண்டியன், சோமசூடாமணி பாண்டியன், குலசூடாமணி பாண்டியன், இராசசூடாமணி பாண்டியன், பூபசூடாமணி பாண்டியன், குலேச பாண்டியன் என்னும் பதினைந்து பாண்டிய அரசர்களும் வழிவழி வந்து பிறந்து அரசுசெய்தார்கள்.

அப்பாண்டியர்களுள் குலேசபாண்டியன் இலக்கிய இலக்கண நூல்கள் எல்லாவற்றினும் கரைகண்டவன். சங்கப்பலகை அப்பாண்டியன் ஏறி இருக்க இடங்கொடுத்தது. பாண்டியன் மிகச்சிறந்தமுறையில் கல்விகற்று மேம்பட்டு விளங்கினான். இதனை இடைக்காடர் என்னும் புலவர் கேள்வியுற்றார். அவர் கபிலருடைய சிறந்த நண்பர். இடைக்காடர் தாம் பாடிய பாடலுடன் பாண்டியனைக் காணவந்தார். அவனைக் கண்டு பாடலையும் எடுத்துக்கூறினார்.

யாது காரணத்தாலோ பாண்டியன் பொறாமை கொண்டான். சொற்சுவை, பொருட்சுவை அறிய

வல்ல பாண்டியன் அறியாதான்போலத் தலையசைக்காமலும், முகமலர்ச்சி ஒரு சிறிதும் காட்டாமலும், யாதொரு கருத்தும் கூறாமலும் வாளா இருந்தான். இடைக்காடர் தம்மை மானம் பிடர்பிடித்துத் தள்ள, திருக்கோயிலை அடைந்தார். சோமசுந்தரக் கடவுளை வழிபட்டார். திருவாலவாயுடைய பெருமானே! தமிழறியும் தலைவனே! குலேசபாண்டியன் செல்வப் பொருள் போலக் கல்விப்பொருளும் மிக்குடையான் என்று கேள்விப்பட்டேன். அதனால் யான் செய்யுள் செய்து கொண்டுவந்தேன். அச்செய்யுளைக் கேட்டுச் சிறிதும் முடியை அசைக்காது என்னை அவமதித்தான். அல்லாமலும் சடப்பொருள்போல அசைவற்று அமர்ந்திருந்தான். அப்பாண்டியன் அடியேனை இகழவில்லை சொல்வடிவாகிய உமையையும் சொற்பொருள் வடிவாகிய உம்மையுமே இகழ்ந்தான் என்று சொல்லித் தணியாத கோபந்தள்ள வடதிசை நோக்கிச்சென்றான்.

இடைக்காடன் கூறிச் சென்றதைக் கேட்ட சிவபெருமான் அவருக்கும் அவர் நண்பராகிய கபிலருக்கும் மனத்தில் மகிழ்ச்சி எற்படும்பொருட்டுத் தம்முடைய இலிங்க வடிவத்தை மறைத்தார். உமாதேவியாரோடு எழுந்து புறம்போந்தார். தமது திருக்கோயிலுக்கு நேர் வடக்கே வையையாற்றுக்குத் தெற்கே ஓர் கோயில் கண்டார். அக்கோயிலுள் உமையுடன் எழுந்தருளியிருந்தார். சங்கப் புலவர்களும் எழுந்து பெருமான் சென்ற வழியே சென்று அக்கோயிலுள் இருந்தார்கள்.

திருப்பள்ளியெழுச்சிக்காலத்தில் அடியார்களனைவரும் ஆண்டவனை வழிபட ஆலயத்தையடைந்தார்கள். வைகறைப்போதில் சிவலிங்கத் திருமேனியைக்

காணுது வருந்திஞர்கள். இஃது என்ன அதிசயம்? என்று கூறிச் சந்தேகங்கொண்டார்கள். சிலர் ஓடிப் போய் இந்நிகழ்ச்சியை அரசனுக்கு அறிவித்தார்கள். வரும்பொழுது இலக்குமியை நீத்த தாமரைபோலப் பொலிவிழந்த மதுரைமா நகரத்தைக் கண்டார்கள். கண்டு அரண்மனையை அடைந்தார்கள். மனம் நடுங்கிஞர்கள். நாக்கெல்லாம் வரண்ட தன்மையடைந்தார்கள். அரசே! நாங்கள் ஒன்று சொல்ல அஞ்சுகிறேம்; நாங்களெல்லாம் இப்போது சோமசுந்தரக் கடவுளேத் திருப்பள்ளியெழுச்சியில் வழிபடப் போனேம்; அங்கு சிவலிங்கத் திருமேனியைக் காணேம்; நகரமும் பொலிவழிந்துவிட்டது என்று எடுத்துக்கூறிஞர்கள்.

மக்கள் கூறிய சொல் நெருப்பிடைக் காய்ச்சிய வேல்போலப் பாண்டியன் காதில் புகுந்தது. உடன் பாண்டியன் சிம்மாசனத்தினின்றும் கீழே விழுந்தான். உயிரொடுங்க அறிவும் ஒடுங்கிஞன். சிறிது பொழுது அசைவற்றுக் கிடந்தான். சிறிது உணர்வு உண்டாக எழுந்தான். இரண்டு கைகளேயும் தலேமேல் குவித்து அழுது அழுது கண்ணிர் வெள்ளத்துள் ஆழ்ந்தான். பெருமானே! அடியேன் என்ன தவறு செய்தேன்? மகாமேருமலேயோ, சிவபுரமோ, திருக்கயிலாயமோ, உண்மை அடியாரது உள்ளமோ, வேத சிரசோ, தேவரீர் எங்கு சென்றுள்ளீர் என்று கூறி மனம் தளர்ந்தான்.

இந்நிலேயில் சிலர் ஓடோடியும் வந்து அரசே! நாங்கள் ஓர் அதிசயம் கண்டோம். வைகையாற்றின் தென்கரையில் சங்கப் புலவர்களோடும் அம்மையோடும் இறைவர் எழுந்தருளியுள்ளார்; நாங்கள் அதனேக்

கண்டோம் என்ருர்கள். அந்தச் சொல்லைக் கேட்ட பாண்டியன் எழுந்தான். மிக அச்சத்தோடு விரைந்து நடந்தான். வைகையாற்றின் தென்கரை அடைந்தான். உமையோடு பெருமான் எழுந்தருளி இருப்பதைக் கண்டான். வணங்கினான். பேரானந்தப்பெருங்கடலில் அழுந்தினன். நாக்குக் குழறச் சொல் தடுமாறினன். பெருமானே! வேதங்களும் அறியாத உமது திருவடி சிவப்ப, நகரின் அழகு கெட, உலக அன்னையோடும் இங்கு வரக் காரணம் என்னை? அடியேன் யாது பிழை செய்தேன்? அன்றி என்னைச் சார்ந்தவர்களோ, பகைவர்களோ, கள்வர்களோ, விலங்குகளோ பிழை செய்தது உண்டோ? அல்லது நாட்டுக்கு இடையூறு நேர்ந்ததுண்டோ? மக்கள் ஒழுக்கம் தவறினர்களோ? தானமும் தவமும் குறைந்துபோயினவோ? எளியேன் ஒன்றனையும் அறியாது திகைக்கிறேன் என்று கூறிக் குறையிரந்து துதித்தான்.

இவ்வாறு பாண்டியன் துதித்தபொழுது சோமசுந்தரக்கடவுள் பாண்டியனே! உனது தோத்திரத்தை நாம் கேட்டு மகிழ்ந்தோம். தலங்கள் யாவற்றுள்ளும் திருவாலவாயே சிறப்புடையது. இத்தலத்துள் தானே தோன்றியுள்ள இலிங்கங்கள் பல உண்டு. அசுரர், தேவர், முனிவர், மக்கள் ஆகியோரால் நியமித்து வழிபட்ட இலிங்கங்களும் உண்டு. அந்த இலிங்கங்களுள் அறுபத்துநான்கு இலிங்கங்கள் மிகச் சிறப்புடையன. அவற்றுள்ளும் எட்டு இலிங்கங்கள் சிறப்புடையன. அவ்வெட்டு இலிங்கங்களும் அட்டதிக்குப் பாலகர்களால் பூசிக்கப்பட்டன. அவைகளுள் நாம் இப்பொழுது வந்திருக்கும் இலிங்கம் நம்முடைய தோழன் குபேரனல் பூசிக்கப்பட்டது. ஏனைய இலிங்கங்கள்

அழிந்தொழியவும் இது நம்முடைய தோழன் பூசித்த மையால் நாம் இதில் வந்திருந்தோம். இது இன்று முதல் உத்தரவாலவாய் என்று அழைக்கப்படுமென்று அருள்செய்தார்.

பாண்டியனே! நாம் ஒருபொழுதும் கடம்பவனத்தைவிட்டு நீங்குவோம் அல்லோம். நீயும் எவ்விதத் தீமையும் செய்தாயில்லை. அன்பன் இடைக்காட்டுப் புலவன் செய்த செய்யுளை நீ இகழ்ந்தாய். நாம் அவனிடத்து வைத்த கருணையினல் அவ்விகழ்ச்சியைப் பொறுக்கமாட்டாது இங்கேவந்து தங்கினேம் என்று அசரீரியாகக் கூறியருளினர்.

அதுகேட்ட பாண்டியன் பெருமானே! சிறியோர் செய்த சிறுபிழையினைப் பெரியோர்கள் பொறுப்பது என்பது பெருமையுடையது அல்லவா? என்று கூறி வணங்கினன். அவ்வமயம் சோமசுந்தரக்கடவுளும் மீனுட்சியம்மையாரோடும் சங்கப்புலவர்களோடும் தம் திருக்கோயிலை அடைந்து அமர்வாராயினர்.

பாண்டியன் சிவபெருமானுக்குப்பின்னே நடந்து சென்று விடைபெற்ருன். உடன் இடைக்காடரைச் சங்கப்புலவர்களோடும் அழைத்துக்கொண்டு அரண்மனையை அடைந்தான். வாழை, கமுகு, மேற்கட்டி, கொடிமாலை, சாமரை, தீபம், பூரணகும்பம் ஆகியவற்ருல் மண்டபத்தை அலங்கரிக்கச்செய்தான். இடைக்காடரை அலங்கரித்துப் புலவர்களோடும் பொன்னுசனத்தில் இருக்கச்செய்து, தான் சிங்காதனத்தின்மீது அமர்ந்தான். வெண்பட்டு, வெண்பூமாலை, முத்துமாலை ஆகியவைகள் பாண்டியனை அலங்கரித்தன.

பின்னர் இடைக்காடர் பாடிய நூலைக் கேட்டு மகிழ்ந்தான். சங்கப்புலவர்கட்கும் இடைக்காடருக்கும் பொன்னும் பொருளும் விளைநிலமும் கொடுத்து அவர்களை, ஏழடி முன்னடந்து வழியனுப்பினுன். புலவர்களே! நான் இடைக்காடருக்குச் செய்த குற்றங்களையெல்லாம் பொறுத்தருளவேண்டும் என்று கூறி வணங்கினுன். அதற்குப் புலவர்கள் அரசே! உன்சொல்லாகிய அமிழ்தம் எங்கள் கோபமாகிய நெருப்பை அவித்துவிட்டது. சோமசுந்தரக்கடவுளது பெருங் கருணையினுல் உனக்கு மேலும் மேலும் பொன்னும் பொருளும் புகழும் உண்டாவதாக என்று வாழ்த்திப் போவாரானுர்கள்.

குலேசபாண்டியன் தான் செய்த பெருந்தவத்தினுலே அரிமருத்தனபாண்டியனை மகனுக அடைந்தான். பலகாலம் செம்மையாகப் பாண்டிய நாட்டை அரசாண்டபின்னர் அரிமருத்தன பாண்டியனிடத்தே தன் அரசாட்சியை ஒப்படைத்தான். குலேசபாண்டியன் ஒருநன்னுளில் சிவபிரானது திருவடியடைந்தான்.

# 57. வலைவீசின படலம்

சோமசுந்தரக்கடவுள் ஒருசமயம் தனியான ஒரு இடத்தில் அமர்ந்திருந்து மீனாட்சி அம்மையாருக்கு, யாவருக்கும் சொல்லவொண்ணாத வேதப்பொருளின் உண்மையை எடுத்து உபதேசித்து அருள்வாராயினார். அவ்வரிய வேதப்பொருள்களை உமாதேவியார், எந்தக் காரணத்தாலோ கவலை உண்டாக, விருப்பமின்றிக் கேட்பாராயினார். இறைவன் அந்நிலையை அறிந்தார். உமையைநோக்கி 'நீ நம்மிடத்தே பராமுகமுடையவளாய், வேதப்பொருளை விருப்பமின்றிக் கேட்டாய்; அக்குற்றத்தினாலே அறமின்றி மீன்பிடித்து விற்று வாழும் பரதவர் குலத்தில் நீ பெண்ணாகப் பிறக்கக் கடவாய்' என்று சாபமிட்டருளினார்.

உடனே உமையம்மையார் அஞ்சி, பெருமானே! அடியாள் உம்மைப்பிரிந்துவாழ வல்லமையுடையனோ என்று விண்ணப்பஞ்செய்தார். தரையில் விழுந்து வணங்கினார். சிவபெருமான் அந்நிலையறிந்து திருவுளமிரங்கினார். பரதவ மன்னனுக்கு மகளாக அவதரித்து வாழும் நாளிலே நாம் வந்து உம்மை மணஞ்செய்து கொள்ளுகின்றோம் என்று பெருங்கருணையோடு திருவாய்மலர்ந்து உமையைப் போகுமாறு பணித்தருளி, தாம் தனித்து இருந்தார்.

விநாயகர் தாயின் சாபத்தை அறிந்தார். தந்தையாகிய சிவபிரானார்முன் வந்தார். தனது அன்னைக்கு இச்சாபம் ஏற்பட்டதற்குக் காரணம் இப்புத்தகங்கள் அல்லவா என்று எண்ணலானார். அந்தப் புத்தகங்களை

எல்லாம் தன்னுடைய புழைக்கையால் வாரிக் கடலில் எறிந்தார். முருகக்கடவுளும் தந்தையார் திருக்கரத்தி லிருந்த புத்தகத்தைப் பறித்துக் கடலில் எறிந்தார். அவ்வமயம் பெருமான் திருநந்திதேவரை வெகுண்டு நோக்கினர். நம்முடைய சமயமறியாது ஏன் இவர்களை உள்ளே விடுத்தாய் என்று கோபித்தார். இதனால் நீ சுருவுருவமேற்றுக் கடலில் உழலக்கடவாய் என்று சாபமிட்டார். விநாயகருக்குச் சாபம் கொடுத்தால் அது தன்னையே சாரும். அதனால் அவருக்குச் சாபம் கொடுத்திலர். முருகக்கடவுளை விளித்து மதுரையில் வணிகர் குலத்தில் நீ ஊமைப் பிள்ளையாகப் பிறக்கக் கடவாய் என்று சாபமிட்டருளினர்.

பாண்டியநாட்டைச் சார்ந்த கீழைச் சமுத்திரக் கரையில் ஒரு சிற்றூர் உண்டு. அவ்வூரில் ஒருவன் முன்னைப் பிறவியில் பெருந்தவஞ்செய்திருந்தும் சிறிது தீவினை செய்தமையால் பரதவர் சாதியில் பிறந்திருந் தான். அவன் அவ்வூரிலுள்ள பரதவர்கள் கடலிலே பிடிக்கும் மீனைத் திறையாகக்கொண்டு அவர்களுக் கெல்லாம் அரசனுக விளங்கினுன். அவன் இறைவன் திருவடியில் மறவாத அன்பு உடையவன். தனக்குப் பிள்ளைப்பேறில்லாமல் வருந்திக்கொண்டிருந்தான்.

இவ்வாறு அவன் வாழும்நாளில் ஒருநாள் அவன் தன் உறவினரோடும் மீன்பிடிக்கும்பொருட்டுக் கடற் கரைக்குச் சென்ருன். கடற்கரையின் ஒரு பக்கத்தே யுள்ள புன்னைமர நிழலில் ஒரு குழந்தை அழுதுகொண் டிருப்பதைக் கண்டான். உமாதேவியார் ஒரு குழந் தையாய் அழுதுகொண்டு கிடந்தாள். அழுங்குழந்தை யைக்கண்ட பரதவராசன் ‘இது பெருமான் எனக்கு

இரங்கிக் கொடுத்துள்ள குழந்தையே' என்று கூறித் தன் வலம்துடிப்ப மனமகிழ்ந்து அந்தக் குழந்தையை எடுத்துத் தழுவிக்கொண்டான். உடனே கற்பிற் சிறந்த தனது மனையாள்கையில் கொடுத்தான். மனையாளும் பெறுது பெற்ற குழந்தையைக் கையேற்று வாங்கி உச்சிமோந்து மகிழ்ச்சியோடு வளர்க்கலானாள்.

திருநந்திதேவர் சிவபெருமான் கூறியபடியே சுறுமீன் வடிவங்கொண்டு அக்கடலிலே திரிந்தார். அச் சுறுமீன், விநாயகரும் முருகக்கடவுளும் கடலில் எறிந்த நூல்களனைத்தையும் தன் தலைமேற்சுமந்து இறைவன் திருவடியை மறவாமல் அக்கடலில் உழன்றுகொண்டிருந்தது. தோணி படகு முதலியவைகளை நெருங்கி அவை கிழியும்படி முட்டும்; சரக்கோடு கவிழுமாறு செய்யும். தன்மீது சீறிவரும் சுறுமீன்களையெல்லாம் முடுக்கி விரட்டும். இதனுடைய சுழற்சியால் அந்தக் கடலில் மரக்கலங்கள் செல்வதே இயலாததாயிற்று.

இந்நிலையறிந்த பரதவ அரசன் அச்சுறுமீனைப் பிடிப்பதற்கு எண்ணங்கொண்டான். உடன் ஒரு படகின் மேலேறி வலையை வீசினான். அம்மீன் படகைச்சுற்றிப் பாய்ந்து வாயினால் கிழித்தது. பின் ஒரு தோணியில் ஏறி வலை வீசினான். அம்மீன் தோணியையும் உடைத்தது. பின்னர் மரக்கலத்தில் பாய்ந்து வலைவீசினான். வலை முன்பக்கம் வீசினால் பின்பக்கம் எழும். பின்னே வீசினால் முன்னே எழும். இடம் வலம் மாறும். ஒவ்வோர்சமயம் வலையிலும் அகப்படும். வலையை இழுத்தால் நழுவிவிடும். இந்நிலைகண்ட பரதவ அரசன் இம்மீனை எவன் பிடிக்கிறானோ அவனே என் மகளை மணத்தற்குரிய மணமகனாவான் என்று கூறினான்.

சோமசுந்தரக்கடவுள், தம்முடைய கணநாதருள் ஒருவர் வலைஞர்வேடங்கொண்டு பின்வர, தாம் ஒரு பரதவராய் முன்சென்று அந்நெய்தல் நிலத்து ஊரை அடைந்தார். பரதவ அரசன் அப்புதியவரை நோக்கி நீர் யாவர்? என்று கேட்டான். நான் மதுரையிலுள்ள பரதவர்களுக்குத் தலைவனாகிய அரசனின் மகனாவேன் என்றார். அதுகேட்ட பரதவ அரசன் இத்துறையில் ஒரு சுறுமீன் மிகவும் கோபங்கொண்டு திரிகின்றது; அம்மீனை நீ பிடித்தாயாயின் நான் என் அருமை மகளை உனக்கு மணஞ்செய்து தருவேன் என்றான். அது கேட்ட பரதவ வேடங்கொண்ட சிவபெருமான் ஒரு படகில் பாய்ந்து சென்று வலையை வீசினார். சுறுமீன் அவ்வலையில் அகப்பட்டது. அகப்பட்டவுடன் சிவ பெருமான் வலையைச் சுருக்கி இழுத்துக் கரையில் போட்டார். வலைஞர்கள் எல்லாம் அச்செயலைக்கண்டு வியந்தார்கள். பரதவ அரசன் மனம் மகிழ்ந்தான். தான் கூறியபடி தன் மகளைப் பரதவ வேடங்கொண்ட சிவபெருமானுக்கு மணஞ்செய்து கொடுத்தான்.

திருமணக்கோலம்கொண்ட பெருமான் உமை யோடு இடபாரூடராய்த் தனக்குரிய கோலத்தோடு ஆகாயத்தில் தோன்றினார். சுறவு வடிவங்கொண்ட திருநந்திதேவர் முன்னைய வடிவத்தைக் கொண்டார். பரதவ அரசனும் இக்காட்சியைக்கண்டு அறிவுபெற்று இறைவன் திருவடிகளில் விழுந்து வணங்கித் துதிப்பா னாயினான்.

இவ்வாறு வழிபட்டுநின்ற பரதவ அரசனைநோக்கி, சிவபெருமான் அன்பனே! நீ நெடுங்காலம் மக்கட் பேறின்றி வருந்தினாய்; அதுகண்டு இரங்கி உமையை

உனக்கு மகளாகத்தந்து அருள்செய்தோம்; பின் நாமே வந்து மணஞ்செய்துகொண்டோம்; நீ இன்றுமுதல் இவ்வுலகத்தில் குபேரன்போலப் பலபோகங்களை அனுபவித்து வாழ்ந்து பின்னர் நம்முடைய உலகத்தை அடைவாயாக என்று திருவருள்புரிந்தார்.

பின்பு பெருமான் திருநந்திதேவரோடும் அடியார் கூட்டத்தோடும் திருவுத்தரகோசமங்கை என்னும் தலத்தை அடைந்தார். அத்தலத்திலிருந்து உமையம்மையார் வணங்கிக் கேட்ப வேதத்தின் இரகசியப் பொருள்களையெல்லாம் ஒன்றுசேர்த்து உபதேசித்தார். அன்பர்கள் அறுபதினாயிரம்பேர்கட்கு அருள்செய்து முத்தியும் கொடுத்தார். பின்னர் உமாதேவியாரோடு மதுரையை அடைந்தார்.

## 58. திருவாதவூரடிகளுக்கு உபதேசித்த படலம்

பாண்டியநாட்டில் வைகையாற்றின் கரையில் உள்ளது திருவாதவூர். அவ்வூரில் அமாத்தியப் பிராமணர் குலத்தில் வைதிகமார்க்கமும் சைவமார்க்கமும் விளங்க ஒருவர் தோன்றினர். அவருடைய தோற்றத்தால் பௌத்தமதமாகிய இருள் ஓடிற்று. சிவபெருமானுடைய திருவருளால் தோன்றிய குழந்தைக்குப் பெற்றோர்கள் திருவாதவூரர் என்று பெயரிட்டார்கள். அந்தக் குழந்தையைப் பெற்றோர்கள் நன்முறையில் வளர்க்கலானார்கள். அக்குழந்தையும் பதினாறாண்டு நிரம்புவதற்குள் வேதம் முதலாய அறுபத்துநான்கு கலைகளும் கற்று வல்லமையுடையதாய் விளங்கிற்று.

திருவாதவூரரின் கல்வித் திறமை முதலியவற்றை அரிமர்த்தனபாண்டியன் கேள்வியுற்றான். அவரைத் தன்பால் அழைத்து வேண்டும் பரிசில்கள் கொடுத்து அவரைத் தனக்கு மந்திரியாகவும் ஆக்கிக்கொண்டான். திருவாதவூரரும் படைக்கலப் பயிற்சிபற்றிய நூல்கள், மனுநீதி நூல்கள் ஆகியவற்றை ஐயந்திரிபறக் கற்று விளங்கினர். அதனால் பாண்டியன் அவருக்கு முதன்மந்திரி உத்தியோகம்கொடுத்து, பெருஞ்சிறப்புச் செய்தான். திருவாதவூரரும் அரிமர்த்தனபாண்டியனுக்குக் கண்ணும் கவசமும்போல் விளங்கி உலகத்தைக் காத்து முறைசெய்து வாழ்ந்தார்.

இவ்வாறொழுகும் நாளிலே பொருள்களின் உண்மையையும் இன்மையையும் ஆராயவேண்டும் என்ற

எண்ணம் இவர் மனத்திடை எழலாயிற்று. எழவே நிலையுதல் இல்லாத இம்மை மறுமை இன்பங்களில் உவர்ப்பு ஏற்பட்டது. செம்மையான மனப்பண்பு தானே வந்தடைந்தது. அந்நிலையில் திருவாதவூரர் வீடு பேறடைவதற்குரிய வழியை ஆராயலானுர்.

பௌத்தம் முதலாய புறச்சமய நூல்களும், நித்த மாகிய வேதத்தைத் தழுவிய அகச்சமய நூல்களும் மனத்திடையுள்ள அழுக்கைப் போக்கி அரனருளை அறிவியா ; அதனுல் சடமாகிய ஆணவப் பிணிப்பு நீங்காது ; ஆகவே வீடுபேறு அடைதல் இல்லையாம். அன்பு செய்து இறைவன் திருவருளைப்பெற்ற அடிய வர்க்கன்றி ஏனையோருக்கு முத்திப்பேறு கிடைப்பது அரிதாம் என்று வேதம் முதலிய நூல்கள் கூறும் ; அவ்வேதத்தின் உண்மைப் பொருள்களையெல்லாம் சத்திநிபாதமடைந்த பக்குவான்மாக்கட்கு, சிவாகமம் உய்த்துணர்த்தும் என்று உண்மை உணர்ந்தோர்கள் கூறுவர். வேதம் ஆகமம் கூறும் பொருள்களுள் வேற்றுமை எதுவும் காண முடியவில்லை. அவைகளை வேறுபடுத்திக் காட்டுகின்ற வேற்றுமையை நீக்கி, மலமாகிய ஆணவத் தொடர்பறுத்து, உடையானுகிய தன்னையும், உடைமைப் பொருளாகிய என்னையும் அறிவிக்கின்ற நல்ல குருவினை அடைவது எவ்வாறு ? என்று எண்ணினுர். உண்மை அன்பினுக்கு எளிமை யாகத் தோன்றும் பெருங்கருணையினை உடைய ஞான குருவின் அருளாலன்றிக் கல்வியினுலே இப்பாசமாகிய கடலைக் கடக்க எண்ணுவது, கடலைத் தெப்பத்தால் அன்றிக் கையால் நீந்திக் கடத்தற்கு ஒப்பாகும் என்று எண்ணினுர். இந்த எண்ணம் காரணமாக அறிஞர் பலரை அண்டி உண்மைப்பொருளை ஆராயலானுர்.

இவ்வாறு உண்மைப்பொருளைப் பலரிடத்தில் ஆராய்ந்தும் ஞானகுருவானவர் கிடைக்கப் பெறாது மனம் மாழ்கினார். உண்ணீர் வேட்டவன் உவர்நீர் உண்டு அமையாதது போலவும், சோரநாயகனிடத்தில் அன்புகொண்டொழுகும் ஒரு பெண் போலவும், இறைவனிடத்திலே உண்மையான அன்புகொண்டு அரசனுடைய அமைச்சுரிமைத் தொழிலையும் விடாது மேற்கொண்டு வந்தார்.

திருவாதவூரர் இவ்வாறு ஒழுகும்நாளிலே, பாண்டியன் அவையில் அரசியலின் அலுவல் காரணமாகச் சென்று அமர்ந்திருந்தார். அவ்வமயம் குதிரைப்படைக் காவலர்கள் அரசன்முன் சென்று வணங்கிப் பின்வருமாறு கூறலானார்கள். அரசே! நமது குதிரைப்படைகளில் இறந்தனபோக, உள்ள குதிரைகள் நோயும் மூப்பும் உடையனவாயின; நல்லதாக ஒரு குதிரையுமில்லை என்று எடுத்துச் சொன்னார்கள். அதுகேட்ட அரசன் திருவாதவூரரை நோக்கி, 'நீர் நமது பண்டாரத்தைத் திறந்து வேண்டும் பொருள்கொண்டு நல்ல குதிரைகள் வாங்கி வருவீராக' என்று கூறினார்.

திருவாதவூரரோ மனம் வேறுபட்டு அமைச்சியல் பூண்டொழுகுகின்றார். கருவூலத்தைத் திறந்து குதிரை வாங்குவதற்கு வேண்டிய பொருள்களை எடுத்துக்கொண்டு அரசனிடம் விடைபெற்றுப் புறப்பட்டார்; பொற்சுமைகளையெல்லாம் ஒட்டகத்தின்மேல் ஏற்றி முன் அனுப்பினார்; பொற்றாமரை வாவியில் நீராடினார்; சித்திவிநாயகரையும் மீனாட்சியம்மையாரையும் வணங்கினார்; சோமசுந்தரக் கடவுளுடைய திருவடிகளை வணங்கினார்; அவர் சந்நிதியில் நின்று பெருமானே!

இப்பொருள்கள் எல்லாவற்றையும் உமக்கும் உம் முடைய அடியார்களுக்கும் ஆக்க விழைகின்றேன்; அடியேனுடைய குறை இதுவே என்று விண்ணப்பஞ் செய்தார்.

அச்சமயம் சோமசுந்தரக்கடவுளுடைய திருவருள் போல, அருச்சகராகிய ஆதி சைவரொருவர் எதிரே வந்து திருநீறு கொடுத்தார். அதனைத் திருவாதவூரர் 'நமக்கு இதுபோன்று நற்சகுனம் வேறில்லை; இது நன்மைக்கு ஏதுவே' என்று இருகரங்களாலும் ஏற்று அணிந்துகொண்டார். பின்பு பலவகை வாத்தியங்கள் முழங்க, சேனைகள் புடைசூழச் சிவிகைமேற்கொண்டு செல்வாரானார்.

இவ்வாறு திருவாதவூரர் வழிக்கொண்டு செல்லு முன், சோமசுந்தரக் கடவுள் இவருடைய இருவினை யொப்பையும் மலபரிபாகத்தையும் கண்டு இவரை வலியவந்து ஆண்டுகொண்டருள வேண்டும் என்று திருவுளங்கொண்டார். உடனே பெருமான் ஞான குருவாக மாணவர்கள் புடைசூழத் திருப்பெருந் துறையை அடைந்து குருந்தமர நிழலில் வீற்றிருந்தார்.

திருவாதவூரர் பிறவியாகிய கடலைக் கடக்கவேண் டும் என்ற எண்ணத்தோடு அளவிறந்த சேனைகளோடு காட்டுவழிகளையெல்லாம் கடந்து வந்துகொண்டிருக் கின்றார். அவ்வாறு வருகிறவர் ஞானாசாரியர் வீற்றி ருக்கும் திருப்பெருந்துறை அடைந்தார். அவ்வூரை நெருங்க நெருங்க இவருக்கு மகிழ்ச்சி பெருகலாயிற்று. கைகள் தலைக்குமேல் குவிந்தன. கண்கள் ஆனந்தக் கண்ணீரைச் சொரிந்தன. உள்ளம் திருவருள்வயப் பட்டது. இவருக்கு உன்மத்தர் என்று எண்ணத்தகும்

அதிதீவிர பக்குவமாகிய நான்காம் சத்திநிபாதம்வந்து சேர்ந்தது. உண்மை ஞானத்தினை மறைக்கும் மலம் நீங்கிற்று. நீங்கியநிலையில் ஞானாசாரியர் எழுந்தருளி யுள்ள இடம் இதுவே என்று துணிந்தார்.

இவ்வாறு துணிந்த திருவாதவூரர் நகரத்தினுட் புகுந்தார். திருக்கோயிலை அடைந்தார். அங்குள்ள தீர்த்தத்தில் நீராடினார். சந்நிதியை அடைந்து சிவ பெருமானை வழிபட்டார். துதிசெய்தார். திருக்கோயிலை வலமாகவந்தார். வரும்பொழுது ஞானாசாரியர் எழுந் தருளியிருக்கின்ற குருந்தமரத்தை எதிரே கண்டார். வேதங்கள் சிவாகமங்கள் புராணங்கள் பல சமயசாத் திரங்கள் ஆகியயாவும் பேரொலிசெய்ய, சரியை முதலிய வற்றால் சிறந்த அடியார்கள் புடைசூழக் குருந்தமர நிழலிலே சிவஞானபோத நூலினைக் கையில் ஏந்தி, யோகாசனத்தின்மீது எழுந்தருளியிருக்கும் பெருங் கருணைத்தடங்கடலாகிய பெருமானைக் கண்டார்.

உடன் பொன்னம்பலத்தில் அனவரதமும் ஆனந்த தாண்டவம் செய்யும் திருவுருவமும் கல்லாலநிழலில் சனகர் முதலிய நான்கு முனிவர்களுக்கு ஞானோப தேசம் செய்த திருவுருவமும் இன்று எளியேனுக்கு எளிதில் காட்சிதந்த இத்திருக்கோலமே என்று இறைவ னுடைய திருவருள் உணர்த்த உணர்ந்து வணங்கிக் கைகளைத் தலைமேற்குவித்து, மனம் நெகிழ வணங்கி, ஞானாசாரியராகிய இறைவனுடைய திருவருளாகிய வலையில் அகப்பட்டுக்கொண்டார். அந்த நிலையிலே திருவாதவூரர் முழு அறிவும் பெற்ற மெய்யடியாராக விளங்கினார். இறைவனுடைய திருவருள் முழுதும் வாய்க்கப் பெற்றவராகவும் ஆயினார்.

குருந்தமரநீழலில் வீற்றிருந்தருளிய ஞானுசாரியர் திருவாதவூரருக்குத் திருவடிதீட்சை செய்து, தன்னுடைய திருக்கரத்தைத் தலைமேல் வைத்துச் சூக்கும பஞ்சாட்சரத்தை உபதேசித்தருளினுர். திருவாதவூரருடைய அன்பையும் ஒழுக்கத்தையும் கண்டு மிகவும் பாராட்டினுர். திருவாதவூரரோ தமது உடல் பொருள் ஆவி இந்த மூன்றையும் அவருக்கே அர்ப்பணித்தார். அந்நிலையில் பெருமான் அவரைச்சிவசொரூபமாக்கினுர்.

திருவாதவூரர் இறைவனுடைய திருவருள்நோக்கினுலே இரும்புண்ட நீர்போல் மலம் நீங்கப்பெற்றுர். அது நீங்கியநிலையில் தன்வசமாக்கிய ஞானுசாரியரையும், அவர் தனக்கு உபதேசஞ்செய்த தன்மையையும், தம்மை மறைத்த பாசத்தையும், தம்மையும் மறந்து உண்மையாகிய ஞான உருவினைப் பெற்றுர். அதனுல் ஒன்றும் அறியாதவரானுர். வாதவூரருடைய நாவில் ஞானக்கலைமகள் வந்து தங்கினுள். அந்நிலையில் அவர் தன்வசமழிந்து இறைவனைத் துதிக்கலானுர். பழுதில்லாத சொற்களைக் கொண்டு பாமாலை சாத்தலானுர். இறைவன் உண்மையன்பராகிய திருவாதவூரருக்கு மாணிக்கவாசகன் என்னும் பெயரினைச் சூட்டினுர்.

உடன் திருவாதவூரர் தம்மை உபதேசஞ்செய்து ஆண்டுகொண்ட ஞானுசாரியரது திருவடியை ஆனந்தக் கண்ணீரால் திருமஞ்சனமாட்டினுர். பாக்களாகிய மலரால் அருச்சித்தார். சிவபோதமாகிய அமுதினை நிவேதனஞ்செய்தார். சிவஞானமாகிய ஓமாக்கினியை மூட்டினுர். இம்முறையில் ஞானபூசை செய்தார். பின்னர் அங்குள்ளோர் கூறும் ஆகமப்பொருள்களைக் கேட்டு மனமகிழ்ந்திருந்தார்.

இறைவன் இவரது அன்புமுதிர்ந்த நிலையைக்கண்டார். தேனினும் இனிய அவரது தீந்தமிழ்ப்பாடலைத் திருச்செவிமடுக்கத் திருவுளங்கொண்டார். அவர்பால் பேரன்புகாட்டினார். அவர் கொண்டுவந்துள்ள பொன் யாவற்றையும் நற்பணியில் செலவிடத் திருவுள்ளங் கொண்டார். இப்பணியால் அரிமர்த்தனபாண்டியன் திருவாதவூரரின் பெருந்தகைமையை அறிந்து முத்தியினைப் பெறுவான் என்றும் எண்ணினார். மேலும் இவரைக்கொண்டே புத்தரை வாதில்வெல்லவேண்டும் என்றும் திருவுளங்கொண்டார். இதனால் மாணிக்க வாசகரை நோக்கி நீ இங்கே செய்யவேண்டியசெயல் சிறிதுண்டு; ஆகையால் சிலகாலம் இங்கிருப்பாயாக என்று உத்தரவிட்டுத் தன் அடியார்களோடு மறைந்தருளினார்.

இறைவனனவர் கனவுபோலத் தம்மைக்காட்டி மறைந்தார். மாணிக்கவாசக சுவாமிகள் மனத்திடை எண்ணலானார். பெருமானே! நீர் நாய்க்குத் தவிசிட்டதுபோல நாயினேனுக்கு உமது அரிய திருமேனியைக் காட்டி மறைத்துவிட்டீரே: இது கனவோ நனவோ என்று ஐயுற்றார்; பின் ஒருவாறு மனம் தெளிந்தார். இறைவரைப் பிரியலாற்றாது வருந்தினார். பெருமானே! உம்முடைய அடியார்கூட்டத்தோடு கூட்டாது எளியேனையும் எளியேனுடைய வினையையும் இங்கிருக்கச் செய்து மறைந்திரோ என்றுகூறி ஏங்கினார். இருவினைக்கீடாகிய உடலைத் தீயிலிட்டும் தீய்க்கமுடியவில்லை. மலையினின்றும் உருண்டும் மாய்க்க அஞ்சுகின்றேன்; வாளால் குறைக்கவும் ஆற்றகில்லேன்; காரணம் இவ்வுடலும் உம்முடைய உடைமையாயிற்றே? ஆகையால் இச்செயல்கள் செய்ய அஞ்சுகின்றேன். மேலும்

என்னுயிரானது தானே உடலைவிட்டுப் பிரியவுமில்லை. பெருமானே! உம்மைப் பிரிந்து வாழ ஒருப்படேன். என்ன செய்வேன்? என்று கூறிப் பலவாறு அழுது அரற்றினர். புலம்பித் துதித்தார்.

இவ்வாறு எண்ணி இரங்கித் துதித்தவர் கன்றை விட்டுப் பிரிந்த தாய்ப்பசுவைப்போல் மனம் கரைந்து, கோபுரவாயிலின் புறத்தேவந்து, தன்னை எதிர்பார்த்து நின்று கொண்டிருந்த படைவீரர்களை நோக்கினர். வீரர்களே! நீங்கள் முன்னுகப் பாண்டிய நாட்டினை அடைந்து பாண்டிய மன்னனிடம் ஆடிமாதத்தில் குதிரைக்கூட்டங்கள் வரும் என்று சொல்லுங்கள் என்று சொல்லி அனுப்பினர். அவ்வீரர்கள் சென்று பாண்டிய மன்னனிடம் நிகழ்ந்தவற்றைக் கூறி வணங்கினர்கள். அரசன் ஒன்றுங்கூருது குதிரையின் வரவை எதிர்பார்த்திருந்தான்.

மாணிக்கவாசக சுவாமிகள் பாண்டிய அரசன் குதிரை வாங்குமாறு கொடுத்த பொருள்களெல்லாவற்றையுமே தம்மை ஆண்டருளிய ஞானுசாரியராகிய இறைவனுடைய பூசை திருவிழாக்களுக்கும் ஆலயப் பணிக்கும் அடியார்கட்கும் கொடுத்துவிட்டுத் திருப்பெருந்துறையிலே தங்கியிருந்தார். மாணிக்கவாசகர் கூறிய ஆடிமாதம் நெருங்கியது. பாண்டியமன்னன் இன்னும் ஏன் குதிரைகள் வந்துசேரவில்லை? என்று மாணிக்கவாசகருக்குத் திருமுகம் எழுதிவிடுத்தான்.

மாணிக்கவாசகர் அந்தத் திருமுகத்தை ஏற்றுப் படித்தார். இனிச் செய்வதென்ன என்று சிந்தித்தார். மனம் அயர்ந்தார். தமது ஞானுசாரியராகிய இறைவன்

விற்றிருக்கின்ற திருக்கோயிலை அடைந்தார். என்னை வலிய ஆண்டுகொண்ட பெருமானே! இடபக்கொடியினை உடையவரே! திருப்பெருந்துறையில் விற்றிருந்தருளிய அருமணியே! நான் அரசன் அளித்த பொருள் அனைத்தையும் உம்முடைய ஆலயத் திருப்பணிக்கும் உமது அடியார்களுக்குமாகச் செலவு செய்து தீர்த்து விட்டேன். இனி நான் அரசனுக்கு எந்தப்பொருளைக் கொண்டு குதிரைகள் வாங்கிக் கொடுப்பேன் என்று கூறி வணங்கிக் குறையிரந்தார். அவரெதிரே பெருமானும் அசரீரிவாக்காகப் பின்வருமாறு கூறினர். பாண்டியனுக்குக் குதிரைகள் வந்துசேருமென்று நீ ஓலை எழுதி அனுப்புவாயாக என்று அருள்செய்தார். மாணிக்கவாசகசுவாமிகள் அதுகேட்டு மனமகிழ்ந்து அவ்வாறே அரசனுக்குத் திருமுகம் எழுதியனுப்பினர். அத்திருமுகத்தை ஏற்ற பாண்டியன் மிக மகிழ்ந்து குதிரையின் வரவை எதிர்நோக்கி இருந்தான்.

அன்றிரவு மாணிக்கவாசகர் கனவில் பெருமான் தோன்றினர். குருந்தமரநிழலில் வலிய ஆண்டுகொண்ட குருவின் திருக்கோலத்தைக் காட்டினர். பாண்டியன் மனத்தைக் கவரத்தக்க குதிரைகளுடன் நாம் வருகின்றேம்; நீ இன்றைக்கு முன்பாகச் செல்லுக என்று கூறியருளினர். உடனே மாணிக்கவாசகர் உறக்கத்தினின்றும் எழுந்தார். தேவர்களால் கனவிலும் காணவொண்ணாத பெருமானுடைய கருணைவடிவு நமக்குக் கனவிலும் நனவிலும் எளிதாயிற்றே என்று எண்ணி மகிழ்ந்தார். இந்நிலையில் கதிரோனும் உதயமானன். உடன் அடிகளார் திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருக்கும் இறைவனுடைய திருவடிகளை வணங்கினர். விடைபெற்றர். மதுரையை அடைந்தார். அரசனிடம்

சென்று தாம் செய்யவேண்டிய முறையில் அவனுக்கு வழிபாடு செய்தார். அரசன் திருமுன் நின்றூர். அரசன் அவரை நோக்கி எவ்வளவு பொன் கொண்டுபோய் எவ்வளவு குதிரைகள் வாங்கினீர்? என்று வினவினுன்.

இதனைக் கேட்ட மாணிக்கவாசகர் மன்னனை நோக்கி, அரசே! நான் குதிரை வாங்கும்படி கொண்டு போன பொன்னும் அளவில்லை; வாங்கின குதிரைகளும் அளவில்லை; அக்குதிரைகள் யாவும் பின்னே வருகின்றன; கண்டு அருள்செய்வாயாக என்று கூறினுர். இந்தக் குதிரைகளைப் பெறுதலால் நீ துரங்கபதி என்னும் பெயரினைப் பெறுவாய் என்றூர். பாண்டியன் அவருக்குப் பல வரிசைகள் நல்கி அவரை அவரது மாளிகைக்கு அனுப்பினுன்.

மாணிக்கவாசகர் திருக்கோயிலை அடைந்தார். பொற்றாமரை வாவியில் நீராடினுர். சித்தி விநாயகர், மீனுட்சியம்மையார், சோமசுந்தரர் இவர்களை முறையாக வணங்கினுர். பெருமானே! அடியேனை ஆண்டு கொண்ட வள்ளலே! குதிரை வருமாறு யாங்ஙனம்? என்று கூறிக் குறையிரந்தார். அவ்வமயம் இறைவனுடைய திருவாக்கானது உண்மையன்புடையாய்! அஞ்சற்க; நீ விரும்பியபடி உயர்ந்த குதிரைகளைக் கொண்டுவருகின்றோம் என்று அசரீரியாக எழுந்தது. மாணிக்கவாசகர் பரமசிவனுடைய கருணையைத் துதித்துத் திரும்பினுர்.

திருவாதவூரரை அவரது உறவினர்களும் நண்பர்களும் ஒன்றுசேர்ந்துவந்து வரவேற்று, பல புத்திமதிகளை எடுத்துக் கூறலானுர்கள். அமைச்சராக இருந்து அரசகாரியங்கள் செய்தல் பிராமணர்க்குரிய அறமன்று.

அரசர்க்குரிய அமைச்சராக இருந்தாலும் அவர்கட்கு உடன்பட்ட காரியங்களைச் செய்வதே சிறந்தது என்று மனுநூலில் வல்லோர் எடுத்துக்கூறுவார்கள். நீரோ அரசியலும் அமைச்சியலும் நன்ருக அறிந்தவராதலின் உமக்கு நாங்கள் ஒன்றும் சொல்லுவதற்கு இல்லை. இருப்பினும் நீர் செய்துவருகின்ற செயல்கள் எதுவும் அறிவுடையோர் ஒத்துக்கொள்ளக்கூடிய நல்ல செயல்களாக இல்லை என்று இடித்துக் கூறலானுர்கள்.

மேலும், அவர்கள் நீர் அரசனிடம் குதிரைகள் இன்று வந்துசேரும் என்று முடிவாகச் சொன்னிரே? வாராதொழியின் நாளை அவ்வரசனுக்கு என்சொல்வீர்? என்று கேட்டார்கள். நீர் அரசனிடம் நன்முறையில் நடந்து கொள்ளாமையால் உமது உறவினரும் நட்பினருமாகிய நாங்கள் எப்படி வாழ்க்கை நடத்துவது என்று ஏங்குகின்ருேம் என்று இரங்கிக் கூறினுர்கள். எங்களைக் காப்பாற்றவேண்டும் என்னும் எண்ணம் உமக்கு இல்லை; உம்முடைய செய்கை உமக்குத்தான் மிகவும் நன்ருயிருக்கும் என்றும் கூறினுர்கள்.

இவற்றைக் கேட்ட மாணிக்கவாசகர் மனத்துள் சிந்திக்கலாயினுர். என்று சிவபெருமான் நம்மைக் குருவடிவமாக வந்து அடிமைகொண்டாரோ அன்றே நாம் நமக்கென்றிருந்த யாவற்றையும் விட்டொழித்தோம். சுற்றம் சுற்றத்தொடர்பு இவைகளையும் நீக்கி ஒழிந்தோம். துன்பமும் இன்பமும் நமக்குச் சமமாயிற்று. உடலிடை ஆசை ஒழிந்தோம். பொன்னை வெறுத்தோம். கோபமோ செருக்கோ நம்மிடத்து இல்லாதொழிந்தது. நம்மைப் பற்றி இருந்த இருவினையும் நீங்கிற்று. சிவபெருமானே எமக்குத் தந்தையும்,

தாயும், ஞான குருவும், வித்தியா குருவும் ஆனார். பெண்ணாசை அன்றே ஒழிந்தது. மக்களிடமுள்ள ஆசையும் அற்றது. எனக்கு உறவினராவார் சிவனடியார்களே. பகைவராவார் எழுவகைப் பிறவிகளே. ஊரெங்கும் ஆக்கிய சோறு நம்முடையதே. உலகமே நமது படுக்கையாகும். நாம் உடுத்தக்கூடிய உடை தைத்த கோவண உடையே. நமக்கு நறுஞ்சாந்து திருநீறே. திருவாபரணம் உருத்திராக்கமே. நாம் இன்றே இறக்கினும் கவலையில்லை. என்றும் இருக்க வேண்டும் என்ற எண்ணமும் இல்லை. அரசன் நம்மை ஒறுத்தாலும் அதுபற்றி வருந்தமாட்டோம். அவன் மகிழச் செய்தாலும் மகிழ்ச்சி அடைய மாட்டோம். இரண்டும் நமக்கு ஒன்றே. சுவர்க்கம் நரகம் எது கிடைப்பினும் அதனை மகிழ்ந்து ஏற்றுக்கொள்வோம். எந்நிலையடையினும் இறைவனை மறக்கமாட்டோம். முன்வினைப் பயன் அனுபவிக்கவேண்டி நேரிட்டால் அதனை எவரால் தடுக்கமுடியும்? என்று கூறி, சுற்றத்தார் கூறியவற்றை ஏற்க மறுத்துத் தனது திருமாளிகையில் இருந்தார்.

# 59. நரி பரியாக்கிய படலம்

பாண்டியமன்னன் மறுநாள் மாணிக்கவாசகரை அழைத்துவரச் செய்தான். இன்னும் குதிரைகள் வந்து சேரவில்லையா? என்று விசாரித்தான். அதற்கு அவர் இன்னும் மூன்று நாட்களிலே வந்து சேர்ந்துவிடும் என்றார். அவ்வாறு வந்தால் அவைகள் தங்குவதற்கு வேறு அகன்ற பந்திகள் அமைக்கவேண்டும் என்றார். மேலும் அவைகள் தண்ணீர்குடிக்க வேறு குளங்கள் தோண்டவேண்டும் என்றார். நகரத்தை அலங்காரம் செய்யுமாறு உத்தரவிட்டார். அரசனுடைய ஏவலர் களும் அவ்வண்ணமே செய்யலானார்கள்.

இவ்வாறு மதுரைநகர் அலங்கரிக்கப்பட்டிருக்கும் நிலையில் மாணிக்கவாசகர் குதிரைகள் வந்து சேரும் என்று கூறிய மூன்று நாட்களும் கழிந்தன. பாண்டி யன் மற்றைநாள் மாணிக்கவாசகரை அழைத்தான். தண்டஞ்செய்பவன்போல் சீறினான். ஏவலரை அழைத் தான். இக்கள்வனைக் கொண்டுபோய் தண்டஞ்செய்து நமது பொன் முழுதையும் வாங்குங்கள் என்று உத்தர விட்டான். அரசனின் கோபமிகுதியைக்கண்ட ஏவலர், அவனெதிர் நில்லாது அஞ்சித் திருவாதவூரடிகளைப் பின்தொடர்ந்து சென்று இனிப் பொன்னுக்கு வகை யேது கூறும் என்று கேட்டு அவர்மீது கல்லையேற்றித் துன்புறுத்தினார்கள்.

தன்னுடைய அன்பர்கள்மேல் ஏற்றும் பாரங்களை யெல்லாம் தாங்குகிற சிவபெருமான் மாணிக்கவாசகர் மேல் ஏற்றிய பாரம் முழுவதையும் தாங்கியருளினார்.

ஏற்றிய கல்லின்பாரந்தெரியாது இறைவனை வணங்கிக் கொண்டுநின்ற வாதவூரடிகளின் நிலைமையைத் தண்ட லாளர்கள் நோக்கினார்கள். இது ஏதோ மாயம் என்று எண்ணலானார்கள். அவருடைய கைகளிலும் கால் களிலும் கிட்டியை மாட்டி நெரித்தார்கள். அவர் இவர்கள் செய்கின்ற கொடுமைகளுக்கு அஞ்சாமல் இறைவன் திருவடியைத் துதிசெய்துகொண்டிருந்தார். கதிரோனும் அந்நிலையில் மறைந்தான்.

அன்றிரவு அரசனது ஏவலர்கள் அவரை இருள் நிறைந்த சிறையில் அடைத்து விலங்கினைமாட்டி மிக்க துன்பம் விளைத்தார்கள். அவ்வமயம் அவர் சிவபிரா னது திருவடியாகிய புணையைத் துணையாகக்கொண்டு துன்பமாகிய கடலைக் கடந்தார். வைகறைப்போதிலே அடியார்கள் இறைவனையும் இறைவியையும் திருப் பள்ளியெழுச்சிபாடி வழிபடுகின்ற ஆரவாரத்தையும் சங்கின் முழக்கொலியையும் வேதம் ஓதுதலையும் கேட்டார். சூரியனும் கிழ்த்திசையில் தோன்றினான். வாதவூரரும் இறைவனும் இறைவியும் வீற்றிருக்கும் திருக்கோயிலின் சிகரத்தை நோக்கிக் கைகூப்பித் துதிப்பாராயினார்.

இவ்வாறு சிறையில் இருந்தவண்ணம் இரங்கு கின்ற திருவாதவூரருடைய அழுகையொலி இறைவன் திருச்செவியில் எட்டிற்று. சேயைக்கண்ட தாயின் நிலைபோல இறைவர் எண்ணுவாராயினார். உடனே திருநந்திதேவர் முதலாய சிவகணங்களை அழைத்துத் திருவாதவூரருடைய சிறைவாசத்தை நீக்கத் திரு வுளங்கொண்டார். அந்நிலையில் ஆவணி மாதத்து மூலநட்சத்திரம் வந்துவிட்டது. நாம் முந்திக்கொண்டு

இன்று பாண்டிய அரசன் கோபங்கொள்ளுதற்குமுன் குதிரைகள் கொண்டுபோய்க் கொடுத்தல்வேண்டும் என்று மனத்துள் எண்ணினர்.

உடன் திருநந்திதேவரைப் பார்த்து, காட்டிலிருக்கின்ற நரிகளைக் குதிரைகளாக்கி நீங்கள் அனைவரும் குதிரைச் சேவகர்களாகி அதன்மேல் ஏறிக்கொண்டு முன்னே செல்லுங்கள். நாமும் அவ்வாறே குதிரைச் சேவகராகப் பின்னல் வருகிறேம் என்று கூறியருளினர். இறைவன் இட்ட கட்டளையை ஏற்றுக் கணநாதர்கள் நரிகளையெல்லாம் பரிகளாக்கி, தாம் பரிப்பாகர்களாய் அதன்மீதேறி மேற்குத்திசை நோக்கிச் செல்லலானர்கள்.

சோமசுந்தரக் கடவுளானவர் அடியவர்களின் துன்பத்தைப் போக்கும்பொருட்டு, காலில் வீரக்கழல் அணிந்தார். கையில் வாட்படையை ஏந்தினர். சாய்ந்த கொண்டை, திருமுடிச்சாந்து, கண்டிகை, வாகுவலயம், குண்டலம், திருநீறு ஆகிய இவைகள் அணிந்து கொண்டு விளங்கினர். அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு கால்களையும், ஞானகாண்டம் கருமகாண்டம் என்னும் இரண்டு காதுகளையும், பரஞானம் அபரஞானம் என்னும் இருகண்களையும், விதியாகிய முகத்தையும், விலக்காகிய வாலையும், ஆகமங்களாகிய புறவணிகளையும், மந்திரங்களாகிய மணிமாலைகளையும், சந்திர சூரியர்களாகிய அங்கவடியையும், பிரணவமாகிய கடிவாளத்தையும், உபநிடதமாகிய கலனையுங் கொண்ட வேதமாகிய குதிரையின்மேற்கொண்டார். சாமரம் வீச, வெண்குடை நிழற்ற, பலவகை வாத்தியங்கள் ஒலிக்கச் சென்றருளினர்.

நினைத்த மாத்திரத்தில் வேண்டிய வடிவங்கொள்பவர் சிவபெருமான். இவரது நிலையைக்கண்ட ஆண்களும் பெண்களும் பலவாறு வியந்து பேசினுர்கள். இந்திரசாலவித்தை காட்டுவார்போல மதுரைநகருக்கு அரைக்காவததூரத்தில் வந்தார். இவ்வாறு குதிரைகள் வருவதைக் கண்டவர்கள் சிறைச்சாலைக்கு ஓடோடியும் சென்று திருவாதவூரருக்கு அறிவித்தார்கள். குதிரைகள் வெள்ளம் போன்று வந்துகொண்டிருக்கின்றன. கோபுரவாயிலை அடைந்துவிடும். விரைந்து சென்று அரசனிடம் சொல்லுங்கள் என்று கூறினர். திருவாதவூரரும் பாண்டியனை அடைந்து குதிரையின் வருகையை அறிவித்தார்.

அவரது கூற்றைக் கேட்ட பாண்டியன் உடம்பு பூரிக்க மிகவும் மகிழ்வடைந்தான். விலை மிக்க முத்து மாலைகளையும் பீதாம்பரங்களையும் அவருக்கு அளித்தான். திருவாதவூரரை மகிழ்வித்தான். அரியணையினின்றும் இழிந்தான். அமைச்சர் முதலாயினுர் புடைசூழக் கோபுரவாயிலை அடைந்தான். குதிரையின் வரவை எதிர்கொள்வானுய் அங்குள்ள ஒரு மண்டபத்திலே சிங்காதனத்தில் விற்றிருந்தான்.

சோமசுந்தரக் கடவுள் தமது திருவிளையாடலைக் காட்டத் திருவுளங்கொண்டு குதிரையின் வரவைச் சிறிது தாமதித்தார். பாண்டியன் குதிரைகளைக் காணுமல் மனம் மாறுபட்டான். நமது மந்திரி சொல்லியது பொய் என்று எண்ணிக் கோபங்கொண்டான். தண்டலாளர்களைக் கோபத்தோடு நோக்கினுன். அக்குறிப்புத் திருவாதவூரரைத் தண்டிக்குமாறு தூண்டிற்று. அவர்களும் அரசன் குறிப்பின்படி திருவாதவூரரை அஞ்சாது

தண்டித்தார்கள். உத்தமராகிய திருவாதவூரர் இறைவன் திருவடியை எண்ணி முறையிட்டார்.

திருவாதவூரர் முறையிட்டிரங்கும்போது அவரது காதுகளில் பலவகை ஒலிகளோடுகூடிய குதிரையின் வருகை நுழைந்தது. பாண்டியனும் குதிரைகளின் வரவை அறிந்தான். வாதவூரரை அழைத்தான். மனம் மிக மகிழ்ந்தவனாய் அவரோடு உரையாடிக்கொண்டிருந்தான். அவ்வமயம் அழகே உருவாய குதிரைகள் எல்லாம் வந்துநின்றன. தன் முன்னோர்களும் தானும் இதுவரை கண்டறியாத அழகிய குதிரைகளைக் கண்டு ஆச்சரியமடைந்தான். ஆயிரங்கண்களைப் பெற்றாலும் இவற்றின் அழகினைக் காணமுடியாது என்று மனத்துள் எண்ணினான். உடன் குதிரைவீரர்களையெல்லாம் பலவாறு பாராட்டினான். திருவாதவூரரை நோக்கி இவருள்ளே தலைவர் யாவர்? என்று வினவினான். யாவற்றையும் அறிந்து கூறும் அமைச்சர் அரசனே! நான் அதனை அறியேன் என்றார்.

அவ்வமயம் சுந்தரேசராகிய குதிரைவீரர் தமது திருவடி அசையக் கடிவாளத்தைப் பிடித்து வேதமாகிய குதிரையைப் பாண்டியன் எதிரே நடத்திச் சென்றுநின்றார். அரசே! எங்கள் குதிரையேற்றத்தைச் சிறிது காண் என்றுகூறி அங்குள்ள அனைவரும் காணுமாறு, ஐங்கதியும் பதினெண்வகைச் சாரியும் செய்து காட்டினார். பாண்டியன் வீரர்களை நோக்கி உங்களுள் தலைவர் யாவர்? என்றார். அவர்கள் சுந்தரேசராகிய குதிரைவீரரைச் சுட்டிக் காட்டினார்கள். அவரும் வேதமாகிய குதிரையை நடத்திக்கொண்டு பாண்டியனெதிரே வந்தார்.

எதிரில் வந்த குதிரைவீரரைக் கண்ட பாண்டியன் அவருடைய பெருங்கருணைக்கு இலக்காயினன். அறிவு மயங்கத் தன்னை மறந்தான். இருக்கைவிட்டெழுந்தான். தன் இரு கைகளையும் தலைமேல் குவித்துக்கொண்டு நின்றான். பின்பு இறைவனுடைய ஆணையால் மறைப் புண்ட அறிவு தன் உள்ளத்தில் தோன்றிற்று. தான் இன்று ஒருகுதிரைவீரனைக் கண்டு எழுந்து கைகுவித்து வணங்கி நின்றதன் காரணம் என்ன என்று அறியாது வெட்கமுற்றான். தலைகுனிந்தவண்ணம் ஆசனத்தில் அமராமல் நின்றான். நாணம் பெரிதும் வருத்திற்று.

அவ்வாறு நிற்கின்ற பாண்டியனைக் குதிரைவீரர் உற்று நோக்கினர். அரசே! உனது அமைச்சரானவர் உன் பொருள் முழுவதையும் கொண்டுவந்து நமக்கும் நம்மைச் சார்ந்தவர்கட்கும் கொடுத்தார். ஆதலால் உனக்கு ஒன்றும் குறைவில்லாத நல்ல இலக்கணம் அமைந்த குதிரைகள் கிடைத்தன. இக்குதிரைகளை என்னிடமிருந்து கயிறுமாறி வாங்கிக்கொள்வதால் உனக்குச் சொந்தமாகிவிடுகின்றன. அக்குதிரைகள் நாளைக்கு என்ன நிலையை அடைந்தாலும் எனக்கும் உனக்கும் அதைக்குறித்து ஒருவித பேச்சும் இல்லை. குதிரை வாணிகத்தின் நடைமுறை இது என்றார். அது கேட்டுப் பாண்டியனும் மனமகிழ்ந்து அதற்கு உடன் பட்டான். மேலும் எமது முதலமைச்சர் ஒப்பில்லாத வராய் உம்மிடம் கொண்ட நண்பினாலே மிகவும் பரி சுத்தமுடையவரானார் என்று கூறிப் புகழ்ந்தான்.

குதிரை வீரராக வந்த பெருமான் குதிரைகளைப் பாண்டியனுக்குக் கயிறுமாறிக் கொடுப்பதற்கு முன்பு குதிரைகளின் சாதி பேதங்கள், அவைகளின் வயசுகள்,

நல்லிலக்கணங்கள் யாவற்றையும் எடுத்து விளக்கிச் சொன்னார். பின்னர் குதிரை வீரர்களின் முகத்தினை உற்றுநோக்கினார். அவரது குறிப்பறிந்த வீரர்கள் தாம் தாம் ஏறிவந்த குதிரைகளையெல்லாம் வேகமாகச் செலுத்திக் காட்டினார்கள். பாண்டியன் அவற்றினைக் கண்டு வியந்தான். அருகிலிருந்த அமைச்சர்களைப் பார்த்து நகைமுகத்தினனாய் மகிழ்ந்தான்.

இறைவன் பாண்டியமன்னனும் நகரவாசிகளும் கண்டு மகிழும்படித் தமது குதிரையைச் செலுத்திக் காட்டி, பாண்டியன் எதிரேவந்து குதிரையினின்றும் இறங்கினார். இறங்கியவர் குதிரையின் பிறப்பிடம், நிறம், சுழி முதலியவைகளை எடுத்துக்கூறி விளக்கினார். மேலும் அரசே! அரசர்கள் இக்குதிரைகளைப் பூசை செய்து வாங்கிக் கயிறு மாறுவர் என்று கூறினார். அது கேட்ட பாண்டியன் அக்குதிரைகளுக்கு மணிமாலை முதலியன அணிவித்தான். சந்தனம் மலர் முதலியன கொண்டு அருச்சித்தான். வணங்கி எதிர்நின்றான். குதிரை வீரராகிய கடவுள் திருவாலவாயுடையாரை வாழ்த்தி, தாம் ஏறிவந்த வேதமாகிய குதிரைதவிர ஏனைய குதிரைகளையெல்லாம் பாண்டியன் கையில் கயிறு மாறிக் கொடுத்தார். பாண்டியன் பாகர்கள் கையில் கொடுக்க அவர்கள் அவைகளைப் பக்தியால் பந்தியில்கொண்டு சேர்த்தார்கள்.

குதிரைவீரராகவந்த கடவுளுக்குப் பாண்டியன் வெண்பட்டு ஒன்றைப் பரிசாகக் கொடுத்தான். அவர் குதிரையினின்றும் கீழிறங்கி அதனை ஏற்றார். தனது திருமுடியின்மீது தரித்தருளினார். இச்செயலைக்கண்ட கணநாதர்கள் அதிசயித்தார்கள். பாண்டியன் ஏனைய

வீரர்களுக்குப் பட்டாடை அளித்தான். அவைகளைப் பெருமானாகிய குதிரைவீரர் ஏற்றுக்கொண்டு வேத மாகிய குதிரையோடு மறைந்தருளினர். கணநாதராகிய குதிரை வீரர்களும் மறைந்தார்கள். பாண்டியனும் இருமைக்கும் துணையாகிய வாதவூரருக்கு வரிசைகள் பல நல்கித் திருமாளிகையில் செல்லவிடுத்தான். பாண் டியனும் அங்குநின்றெழுந்து உச்சிப்பொழுதில் தன் கோயிலை அடைந்தான். ஏனைய மந்திரிமார்களும் நகர மாந்தர்களும் தத்தம் மனை புகுந்தார்கள். குதிரை வீரராய்வந்த சோமசுந்தரக்கடவுளும் திருக்கோயிலை அடைந்து தம்முடைய திருவிளையாடல்களையெல்லாம் மீனாட்சியம்மையாருக்கு எடுத்துச்சொல்லி எழுந்தருளி யிருந்தார்.

# 60. பரி நரியாக்கி வைகையழைத்த படலம்

பாண்டியமன்னன் கொடுத்த வரிசைப்பொருள் களோடு தமது திருமாளிகையில் புகுந்த வாதவூரர் உறவினர் முதலாயினர்கள் வந்து வினவ அவரவர் கட்குப் பொருந்த உபசாரமொழியும், மகிழ்ச்சியும் வழங்கி அவர்களை விடுத்தார். திருவாலவாயுடையார் நாம் அன்று இரந்தவண்ணமே குதிரைவாங்கும்படி நாம் கொண்டுசென்ற அப்பொருள்களையெல்லாம் தம் முடைய அடியார்களும் தாமும் கைக்கொண்டு, எம் மையும் ஆட்கொண்டு பிறவித்துன்பத்தை யொழித் தருளினர்; அதுவுமன்றி பாண்டிய மன்னனுடைய மனம் மகிழ நல்ல குதிரைகளைச் செலுத்திவந்து நம் கவலையையும் போக்கியருளினர். இனி இவ்வுலகத்தை வெல்லும் வண்ணம் தம்முடைய சிவானுபவத்தில் இடைவிடாது இருக்கும்படி நம்மைச் செய்தருளவும் வேண்டும் என்று எண்ணினர். இக பர ஆசை ஒரு சிறிதுமின்றி, சோமசுந்தரக்கடவுளுடைய திருவடிகளை மறவாது ஓர் தனியிடத்திலே வீற்றிருந்தருளினர். கதிரோனும் மறைந்தான்.

அன்று நடு இரவில் இறைவனுடைய திருவிளை யாடலால் குதிரைகளாகவந்த நரிகளெல்லாம் தங்கள் சுயவடிவங்கொண்டன. சங்கினோசை, பிணப்பறை யோசை, பெண்கள் மார்பிலடித்துக்கொண்டு அழும் ஓசை ஆகியவைகளே நமக்கு மகிழ்வை ஊட்டுவன;

இன்று பகல்முழுவதும் நாம் மனிதரைச் சுமந்து பல வாறு துன்புற்றோம்; சவுக்கிஞல் அடியும்பட்டோம்; இப்பொழுது நம்முடைய நல்விதிவசத்தால் சுயவடி வினைப் பெற்றோம்; நாம் காட்டில் வாழ்ந்த காலத்தில் இத்தகைய கொடிய துன்பங்களுக்கு ஒருநாளுமே ஆளானதில்லை; ஆதலால் இன்றிரவே இவ்விடத்தை விட்டு ஓடிவிடவேண்டும் என்றமுடிவிற்கு வந்தன. நம் உணவாகிய நத்தை ஞெண்டு இங்குக் காணப்பட வில்லை. புல்லும் கொள்ளும் நாம் தின்னுதல் கூடாது. இந்த முடிவிற்கு வந்தவுடன் சங்கிலித் தொடர்களை அறுத்து ஊளையிடத் தொடங்கிற்று. அல்லாமலும் அங்குள்ள ஏனைய குதிரைகளைத் தாவிக் கடித்துப் பல வாறு ஊறுசெய்யவும் தொடங்கிற்று.

குதிரைப்பந்தி காக்கும் வீரர்கள் ஊளையோசை கேட்டு உறக்கத்தினின்றும் எழுந்தார்கள். நரிகள் யாவும் அங்குநின்ற குதிரையின் குடர்களைப் பறித்து உண்பதைக் கண்டார்கள். கண்டவுடன் வலுவுடைய சில நரிகள் மதிலைத்தாண்டி ஓடின. சில சாளர வழி யாகவும், சுருங்கை வழியாகவும் ஓடின. முடம் மூப்பு குருடு நோய் ஆகிய இவைகள் உடைய நரிகள் ஓட முடியாமல் பந்தியில் ஏக்குற்றுக் கிடந்தன. வேறுசில நரிகள் எதிர்ப்போரைத் தாக்கிவிட்டு ஓடின. இவ்வாறு ஓடிய நரிகள் நகரை அடுத்த சோலைகளை அடைந்து ஊளையிட்டுத் திரியலாயின. நரியோசை எவ்விடங்களி லும் மிகுந்து கேட்டலால் நகர மாந்தர்களும் கண் விழித்தார்கள். இரவு முழுவதும் நகரிலுள்ளார்க்குப் பலவித துன்பங்களைக் கொடுத்த நரிகள், பொழுது புலர்ந்து வாயில்கள் திறக்கப்பட்டதும் விரைந்து ஓடி, காடுகளை அடைந்தன.

குதிரைவீரர்கள் இந்தச் செயலைத் தம் அரசனுக்கு எவ்வாறு எடுத்துச் சொல்வது என இரவு முழுவதும் எண்ணலானார்கள். பொழுதும் புலர்ந்தது. அச்சத்துடன் விரைந்து அரண்மனையை அடைந்தார்கள். பாண்டியனுடைய அரசிருக்கையை அடைந்து அவனை வணங்கினார்கள். ஒருபுறத்தே ஒதுங்கிநின்று அரசே! நேற்று வந்த அழகிய குதிரைகளெல்லாம் நரிகளாகி, பந்தியில் முன்நின்ற குதிரைகளை ஊறு செய்துவிட்டுக் காட்டிற்கு ஓடிவிட்டன என்றார்கள்.

இச்சொல்லைக் கேட்டவுடன் பாண்டியனுடைய கண்கள் சிவந்தன. தீப்பொறிகள் பறந்தன. கோபத்துடன் அருகேயிருந்த அமைச்சர்களை நோக்கினான். அவர்களும் பயந்து ஒருபுறமாக ஒதுங்கினர். முன்னாள் குதிரையினைக் கண்டு மகிழ்ந்த பாண்டியன் இன்று அவை நரிகளாயின எனக்கேட்டு அமுது உண்டவன் மீள நஞ்சு உண்டாற்போல் துயரமடைந்தான். அருகிலிருந்த அமைச்சர்களைநோக்கி வாதவூரரது இழிசெயலை எடுத்துக்கூறினான். செய்ந்நன்றிமறந்த வாதவூரரின் பொருட்டு இனி நாம் யாது சொல்லக்கடவேம் என்று தலைகவிழ்ந்து ஒன்றுங்கூறாது வாளாவிருந்தான்.

அவ்வமயம் திருவாதவூரர் பாண்டியனுக்கு அவன் எண்ணியபடி குதிரைகளைக் கொடுத்து அவன்செயலை இனிது முடித்து விட்டோம்; இனி நமக்கு எவ்வித கவலையுமில்லை என்று எண்ணியவராய் மிக்கமகிழ்ச்சியோடு அங்கு நடந்ததொன்றையும் அறியாமல் அரசனிடத்து வந்தார். அரசன் அவரைக் கண்டவுடன் அளவிலாக் கோபங்கொண்டான். அளவற்ற பொருள் கொண்டுபோய் நீ நல்ல குதிரைகளைக் கொண்டுவந்து

கொடுத்தாய்; இராசவிசுவாசமுள்ளவர் உன்னைப்போல் உலகத்து வேறெவருமில்லை என்று கூறினன். வாதவூரர் ஒன்றுமறியாதவராதலால் அந்தக் குதிரைகட்கு என்ன குற்றம் என்றார். உடன் பாண்டியன் குற்றம் ஒன்றுமில்லை; நள்ளிரவில் அவைகள் நரிகளாகி முன்பு இருந்த குதிரைகளைக் கடித்துத்தின்று மனிதர்கட்கும் இடர் விளைத்து, ஊரைக் கலங்கச்செய்து காட்டிற்கு ஓடிப் போயின. இவ்வளவு காலமும் நீ கண்ணும் கவசமும்போல நம்மைக் காத்தது சமயமறிந்து நம்முடைய பொருளைக் கவர்தற்கோ? உமது அமைச்சியல் மிக நன்று; உமது நீண்டகால சேவையை எண்ணி உடன் தண்டியாது விடுத்தோம்; ஏவலர்களே! இவனைக் கொண்டுபோய் எத்தண்டனை கொடுத்தாயினும் நமது பொருள் முழுவதையும் வாங்குங்கள் என்று கூறி விடுத்தான். ஏவலர்களும் உச்சிப்பொழுதில் கடும்வெய்யிலில் நிறுத்திப் பலவாறு ஒறுத்தார்கள். வாதவூரர் இறைவனைத் துதிப்பாராயினர்.

பலவாறு புலம்பும் வாதவூரரது துதியைக் கேட்ட சோமசுந்தரக் கடவுள் அவருடைய செய்கைகளை அரிமர்த்தனபாண்டியன் அறியவும், தமது திருமுடியில் மண் சுமக்கவும், வந்தியென்ற முதியாளைச் சிவலோகத்தில் சேர்க்கவும் திருவுளங்கொண்டார். வைகையை நோக்கி ஊழிக்காலத்துப் பெருங்கடல்போல் பெருகுவாயாக என்று ஆணையிட்டருளினர். வைகையும் பெருக்கெடுத்து மதுராபுரியின் மதிற்புறத்தே போய் மதிலை வீழ்த்தி நகரத்தையும் அழித்தது.

வெள்ளப்பெருக்கைக் கண்ட நகரமக்கள் மனைவி மக்களைக் கையில் பற்றிக்கொண்டும், ஆபரணங்களை

எடுத்துக்கொண்டும், எங்குசெல்வதென்று தெரியாமல் இதுவும் இறைவன் திருவிளையாடலோ என்று ஏங்கு வாரானார்கள். நேற்றுக் குதிரைகள் நரிகளாகி ஊறு செய்தன. இன்று வெள்ளம் பெருக்கெடுத்து ஓடு கின்றது. இறைவனை ஒழிய வேறு எவரும் இதனைத் தடுக்கவொண்ணாது என்று கூறலானார்கள்.

அவ்வமயம் வாதவூரரை ஒறுத்த ஏவலர்கள் தம் பொருள்களைப் பேண இல்லத்திற்குப் போனார்கள். வாதவூரரும் ஆலயம் அடைந்து இறைவனுடைய திருவடிகளை வணங்கி ஆனந்தத்தில் மூழ்கி, சித்திரம் போல அசைவற்று இருந்தார்.

# 61. மண்சுமந்த படலம்

மதுரைநகர மக்கள் அனைவரும் வைகையின் நீர்ப் பெருக்கைக்கண்டு மனம் கலங்கினார்கள். இந்நிலையைப் பாண்டியன் அறிந்தான். அமைச்சர்களை அழைத்து நீங்கள் சென்று வைகையின் வேகத்தைத் தணித்து வாருங்கள் என்று கூறியனுப்பினான். அமைச்சர்களும் சென்று, வீட்டிற்கு ஒருவராகவந்து அவரவர்களுக்கு உரிய பங்கை அடைக்கவேண்டும் என்று பறைசாற்றச் செய்தார்கள். பறையொலி கேட்ட மக்கள் தங்கள் தங்களுக்கு உரிய பங்கைச் சென்று அடைப்பதற்குத் தொடங்கினார்கள்.

மதுரைநகரில் வந்தி என்னும் பெயரினையுடைய பிட்டு வாணிச்சி ஒருத்தி இருந்தாள். அவள் தவத்தாலும் சீலத்தாலும் மேம்பட்டு விளங்குபவள். தான் பிட்டுச் சுடும்பொழுது முதற்பிட்டைச் சோமசுந்தரக் கடவுளுக்கு ஆக்குவாள். வயதுமுதிர்ந்த அவள் தனக்கு அளந்து விடப்பட்ட பங்கை அடைப்பதற்குக் கூலி யாளின்றி வருந்தினாள். அரசனுடைய தண்டனைக்கு அஞ்சிச் சோமசுந்தரக்கடவுளை எண்ணி வழிபட்டாள். பெருமானே! நான் இதுவரை துன்பம் இன்னது என்று அறியாமல் வாழ்க்கையை நடத்திவிட்டேன்; கூலியாள் இல்லாதபடியால் என்னுடைய பங்கை அடைக்க முடியவில்லை; எனக்குக் கணவனோ குழந்தைகளோ உறவினர்களோ யாரும் இல்லை; அப்படிப் பட்ட அநாதையாகிய எனக்கு இந்தத் துன்பம் நேர லாகுமோ என்று புலம்பினாள்.

அவ்வமயம் அருட்பெருங் கடலாகிய பெருமான் வந்தியிடும் பிட்டை உலகினர் காணத் திருவுளங் கொண்டார். அழுக்குப்படிந்த ஆடையை இடையில் உடுத்தி, தட்டு மண்வெட்டியோடு வந்தியிருக்கும் வீதியை அடைந்தார். கூலிகொடுத்து வேலை கொள்வாருண்டோ? என்று கூவினர். இவ்வொலிகேட்ட வந்தி வெளியே வந்தாள். கூலியாளை அழைத்தாள். எனக்கு உரிய கரையை அடைத்துத் தருவாயா? என்று கேட்டாள். அம்மையே! அடைத்துத் தருகிறேன் என்று கூறினர். வந்தியும் நான் விற்கும் பிட்டைக் கூலியாகத் தருகின்றேன் என்றுள். இறைவராகிய கூலியாளும் அதற்கு உடன்பட்டார். தாயே! நான் மிகுந்த பசியால் வருந்துகிறேன். முன்னர் உதிர்ந்த பிட்டினை எனக்குக் கொடு: நான் அதனை உண்டு இளைப்பாறிப் பின் உனக்கு உரிய பங்கினை அடைக்கிறேன் என்று கூறிப்போனர். வைகைக்கரையையடைந்து வந்தியின் கூலியாளென்று தன் பெயரைப் பதிந்துகொண்டார். கரையை அடைந்தார். ஆடிப்பாடி மகிழ்ந்தார். பல முறை வந்தியிடம் சென்று பிட்டுவாங்கி உண்டார். அரசியல் அதிகாரிகள் கரை அடைபட்டமையைப் பார்த்துக்கொண்டு வந்தனர். வந்தியின்பங்கு அடைபடாமையைக்கண்டு மிகவும் கோபங்கொண்டார்கள். உடன் கூலியாளை அழைத்துக் காரணம்கேட்டார்கள். அவர் ஒன்றுங்கூருது இறுமாப்பு உடையவர்போலத் தலைநிமிர்ந்து நின்றுர்.

ஏவலர்கள் கூலியாளின் அழகிய தோற்றத்தைக் கண்டு ஐயங்கொண்டார்கள். இவரைப் பார்த்தால் கூலிவேலை செய்தவராகத் தோன்றவில்லை. இவரை அடிப்பதற்கு மனமும் அஞ்சுகின்றது. ஆதலின் நாம்

இதனை அரசனிடம் சென்று அறிவுறுத்துவோம் என்று எண்ணிச் சென்றார்கள். சென்றவர்கள் அரசனை வணங்கினார்கள். அரசே! எல்லார் பங்கும் அடைக்கப்பட்டு விட்டது. வந்தியின் பங்குமாத்திரம் அடைபட்டிலது. அவளுக்குவந்த வேலையாள் மிக்க கட்டழகு உடையவனாய் விளங்குகின்றான். அவன் அழகைக் கண்டு நாங்கள் அவனை அடிக்க அஞ்சி இங்கு வந்துள்ளோம் என்றார்கள்.

அதைக் கேட்ட பாண்டியன் அமைச்சர்களோடு வைகைக் கரையை அடைந்தான். வந்தியின் கரை அடைபடாமல் வெள்ளம் பெருக்கெடுத்தோடுவதைக் கண்டான். இந்தக் கரையடைக்கும் கூலியாள் எங்கே என்று வினவினான். உடன் ஏவலர்கள் கூலியாளை இழுத்துக் கொணர்ந்து அரசன்முன் நிறுத்தினார்கள். அரிமர்த்தன பாண்டியன் கோபமிகுதியால் அவரைப் பொற்பிரம்புகொண்டு அடித்தான். இறைவரும் தன் தலையில் சுமந்த மண்ணை அவ்வுடைப்பில் கொட்டி மறைந்தருளினார்.

எங்கும் நிறைந்த பரம்பொருளின்மேல்பட்ட அடி சரம் அசரமாகிய எல்லாப் பொருள்களிலும் பட்டது. அரசன், அரசி, அமைச்சர்கள், ஏனைய பொருள்கள் யாவற்றிலும் பட்டது. இந்திரன் முதலிய தேவர்கள் எல்லாம் நடுங்கினர். இச்செய்தியை ஏவலர்கள் ஓடிச் சென்று வந்தியினிடம் கூறினார்கள். அந்த நிலையில் வந்தியைச் சிவகணங்கள் தேவவிமானத்துடன் வந்து சிவலோகத்திற்கு அழைத்துக்கொண்டு போனார்கள்.

பாண்டியன் கூலியாளர் மறைந்ததையும், கரை உயர்ந்ததையும் கண்டான். அடி தனது உடம்பில்

பட்டதையும் உணர்ந்தான். ஏனையோரும் தாம் தாம் அடிபட்டமையைக் கூறினர்கள். பாண்டியமன்னன் செய்வதறியாது திகைத்துநின்ருன். உடன் இறைவர் அசரிரியாக, பாண்டியனே! உன்பொருள் அறவழியில் ஈட்டப்பட்டது. அந்தப் பொருள்களையெல்லாம் வாதவூரன் நம் அன்பர்க்கு நம்பொருட்டுக் கொடுத்துச் செலவுசெய்தான். அதுகாரணமாக வாதவூரனை நீ துன்புறுத்தினய். அதன்பொருட்டே நாம் நரிகளைப் பரிகளாக மாற்றினேம். அன்றிரவே பரிகளெல்லாம் நரிகளாயின. நீ மீட்டும் வாதவூரனைத் துன்புறுத்தினய். அதனுல் நாமே வைகையைப் பெருக்கினேம். நாமே அவ்வந்திக்குக் கூலியாளாகவந்து உன்னிடம் அடியும் பட்டோம் என்று கூறியருளினர்.

பாண்டியன் இச்சொல்லைக் கேட்டவுடன் மனம் நடுங்கினன். உடன் வாதவூரர் எங்கே என்று தேடித் திருக்கோயிலை அடைந்தான். அங்கே அவரைக் கண்டு விழுந்து வணங்கினன். இறைவனுடைய பெருங் கருணையை எண்ணிப் பலவாறு துதித்தான். உடன் மாணிக்கவாசகர் என்னை இறைவர் ஞானகாசமாகிய தில்லைக்குவருமாறு பணித்துள்ளாராதலால் அடியேனை அங்கே செல்லவிடுக என்று விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டார். பாண்டியனும் மாணிக்கவாசகரை வணங்கித் திருக்கோயிலை அடைந்து வழிபட்டு இறைவனைத் துதிப்பானயினன்.

பின்னர், அரிமர்த்தனபாண்டியன் இறைவன் திருவடிகளை மனத்திடை மறவாமல் அரசாளுவானு ஞன். அந்நிலையில் அவனுக்குச் சகநாதன் என்றபெயருடைய புத்திரன் ஒருவன் பிறந்தான். அவனுக்கு

அரசியலை அளித்து மலநீக்கம்பெற்று இறைவனுடைய திருவடிகளை அடைந்தான்.

மதுரையினின்று புறப்பட்ட மாணிக்கவாசகர் வழியிலுள்ள பல தலங்களையும் வழிபட்டுக்கொண்டு தில்லையை அடைந்தார். தலத்தின் எல்லையிலேயே விழுந்து வணங்கினுர். பின் திருக்கோயிலையடைந்தார். சிவகங்கையில் நீராடினுர். கனகசபையை அடைந்து வீழ்ந்து வணங்கினுர். கிழக்கேயுள்ள ஒரு சோலையை அடைந்து சிவயோகத்திலழுந்தினுர்.

அவ்வமயம் ஈழத்தைச் சார்ந்த புத்தர்கள் சிலர் தில்லையை அடைந்தார்கள். தில்லைவாழந்தணர்களைத் தம்மோடு வாதுசெய்ய அழைத்தார்கள். நடராசப் பெருமான் தில்லைவாழந்தணர் கனவில்தோன்றி, வாதவூரனை அழைத்துவந்து புத்தரோடு வாதிடச் செய்யுங்கள்; உங்கட்கு வெற்றிகிட்டும் எனக்கூறிமறைந்தார்.

தில்லைவாழந்தணர்கள் உடன் உறக்கத்தினின்றும் எழுந்தார்கள். தபோவனத்தையும் அடைந்தார்கள். கண்ட கனவை மாணிக்கவாசகரிடம் கூறி அழைத்தார்கள். மாணிக்கவாசகரோ இறைவன் ஆணைக்கு அஞ்சிச் செல்லவில்லை. தில்லைவாழந்தணர்கள் வருந்திய நிலையில் இல்லினை அடைந்தார்கள்.

இந்த நிலையில் பெருமான் மீண்டும் அவர்கனவில் தோன்றி, நாம் திருப்பெருந்துறையில் வலிய ஆண்டு கொண்டு மாணிக்கவாசகன் என்று பெயரிட்டழைத்த மையைக் கூறி அழையுங்கள் வருவான் என்று அருள் செய்தார். இறைவன் கூறியவாறே அவர்கள் சென்று அழைத்தார்கள். மாணிக்கவாசகரும் இறைவருடைய

அருளை எண்ணி வியந்து எழுந்து சென்றார். கனக சபையை அடைந்து இறைவனை வழிபட்டார். புத்தர்களோடு வாது செய்து வென்றார். பிறவியிலேயே ஊமையாயிருந்த சோழ அரசனது மகளின் ஊமைத் தன்மையை நீக்கியருளினார். சில காலம் திருவாசகம் பாடித் துதிசெய்துகொண்டு அந்தத் தலத்திலேயே இருந்து இறைவன் திருவடிநீழலை அடைந்தார்.

மாசறு மணிபோற் பன்னாள்
வாசக மாலை சாத்திப்
பூசனை செய்து பன்னாட்
புண்ணிய மன்று ளாடும்
ஈசன தடிக்கீ ழெய்தி
ஈறிலா அறிவா னந்தத்
தேசொடு கலந்து நின்றார்
சிவனருள் விளக்க வந்தார்.

## 62. பாண்டியன் சுரந்தீர்த்த படலம்

சகநாதனுக்குப்பின்பு வீரவாகு, விக்கிரமவாகு, பராக்கிரமவாகு, சுரதன், குங்குமன், கருப்பூரன், காருணியன், புருடோத்தமன், சத்துருசாதனன், கூன் பாண்டியன் ஆகிய மன்னர்கள் பாண்டியநாட்டை ஆண்டு வந்தார்கள். கூன்பாண்டியன் மிகுந்த வலிமை உடையவன். சோழநாட்டையும், சேரநாட்டையும் அடக்கி ஆண்டான். சேரன் பொன்னும் பொருளும் கொடுத்துத் தனது நாட்டைப் பெற்றுப் போனான். சோழன் தன் மகளாகிய மங்கையர்க்கரசியாரை மணம் செய்து கொடுத்துவிட்டுத் தன் நாட்டைப் பெற்றுப் போனான். மங்கையர்க்கரசியாரோடு சோழன் அளவற்ற செல்வங்களை அனுப்பியதோடமையாது குலச்சிறை என்பவரையும் கூட அனுப்பினான். குலச்சிறையாரின் அறிவுச்சிறப்பைக் கண்ட பாண்டியமன்னன் அவரைத் தனக்கு அமைச்சராக ஆக்கிக்கொண்டான்.

பாண்டியமன்னன் முன்வினைப்பயன் காரணமாகச் சமணசமயத்தை ஆதரிக்கத் தொடங்கினான். அதனால் நாடு முழுவதும் சமணசமயம் தலையெடுக்கலாயிற்று. மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் சைவராக இருந்தார்கள். இந்நிலையில் மீட்டும் பாண்டியநாட்டை எவ்வாறு சைவசமயம் நிறைந்த ஒரு நாடாக மாற்றியமைப்பது என்று சிந்திக்கலானார்கள். இறைவனிடம் சென்று விண்ணப்பித்தார்கள். அந்நிலையில் சீர்காழியிலிருந்து வந்த அடியவர் ஒருவர் திருஞானசம்பந்தரது பெருமையினைக் கூறக்கேட்டு அவ்வடியவர் கையில் ஒரு ஓலையைக் கொடுத்து அனுப்பினார்கள்.

அந்த அடியார் திருமறைக்காட்டினை அடைந்தார். திருமுகத்தைக் காட்டினார். திருஞான சம்பந்தரும் அதனைக் கையேற்று வாங்கிப் படித்தறிந்தார். உடன் மதுரை நோக்கிப் புறப்பட எண்ணினார். திருநாவுக்கரசர் அதனை அறிந்து சமணர்களது பொல்லாங்கை எடுத்துக் கூறி, செல்ல ஒட்டாது தடுத்தார். இறைவர் நமது சிந்தையைக் கோயிலாகக்கொண்டு வீற்றிருக்கின்றார்; அதனால் நமக்கு யாதொரு தீங்கும் நேராது என்று கூறிக் கோளறுபதிகம் பாடி..மதுரை நோக்கிச் செல்லலானார். சென்ற திருஞானசம்பந்தர் இடையில் தலங்களைப் பாடி வழிபட்டார். பரசமயகோளரி வந்தாரென்ற சின்னம் முன் ஊத, மதுரை நகரினை அடைந்தார். சின்னத்தின் ஒலி கேட்ட சமணர்கள் வந்து தடுத்தார்கள். திருஞானசம்பந்தர் அந்தத் தடையை நீக்கிக்கொண்டு திருக்கோயிலை அடைந்தார். இறைவனை வழிபட்டார். வெளியே வந்தார். ஒரு அடியவர் வேண்டுகோளுக்கிணங்கி அவருடைய திருமடத்தில் அன்றிரவு தங்கியிருந்தார்.

சமணர்கள் பொறாமை காரணமாகத் திருஞான சம்பந்தர் தங்கியிருந்த திருமடத்தில் தீயை மூட்டினார்கள். தீப்பற்றி எரிவதைக்கண்ட அடியவர்கள் திருஞானசம்பந்தரிடம் சென்று முறையிட்டார்கள். திருஞானசம்பந்தரும் அந்நெருப்பை நோக்கிப் பையவே சென்று பாண்டியர்க்காகவே என்று கூறினார். அது அரசனிடஞ்சென்று வெப்புநோயாகப் பற்றியது.

அரசனது சுரநோயைப் போக்கத் தேவியாரும் குலச்சிறையாரும் முயலலானார்கள். மணிமந்திர ஔடதங்கள் ஆகிய எதனாலும் பாண்டியனது சுரநோய்

நீங்கவில்லை. மறுநாள் அவ்விருவரும் அரசனையடைந்து திருஞானசம்பந்தரை அழைத்துத் திருநீறு அணியச் செய்தால் இந்நோய் நீங்குமென்று கூறினார்கள். பாண்டியனும் அதற்கு ஒருப்பட்டான்.

அரசியாரும் அமைச்சரும் திருஞானசம்பந்தர் தங்கியிருக்கும் திருமடத்தை அடைந்தார்கள். முறைப்படி வழிபட்டார்கள். பின்னர் பாண்டியனது வெப்பு நோயைத் தணித்துப் பாண்டியநாட்டைத் திருநீற்றொளி விளங்கும் திருநாடாக ஆக்கியருளவேண்டும் என்று வேண்டலானார்கள். திருஞானசம்பந்தர் அவ்விருவரது வேண்டுகோளுக்கும் இணங்கினார். திருமாளிகையை அடைந்தார். சமண குரவர்களால் தீர்க்க முடியாத பாண்டியனது வெப்புநோயைத் திருநீறு அணிவித்துத் தீர்த்தருளினார். பாண்டியன் வெப்பு நோயுடன் முன்பே தன்னைப் பற்றியிருந்த கூனும் நீங்கப்பெற்று அழகுடன் விளங்கினான். பின் சௌந்தர பாண்டியன் என்னும் பெயரினைப்பெற்று, திருஞான சம்பந்தரிடத்திலே திருவைந்தெழுத்தை உபதேசம் பெற்று, சைவசமயத்தைப் பின்பற்றினான்.

## 63. சமணரைக்கழுவேற்றிய படலம்

திருஞானசம்பந்தர் திருநீறளித்துப் பாண்டியன் வெப்புநோயை மாற்றிய சிறப்பைப் பாண்டிமாதேவி யார் மனத்துள் எண்ணி மகிழ்ந்தார். உடன் மங்கை யர்க்கரசியாரும் குலச்சிறையாரும் அவரது திருவடி களில் விழுந்து வணங்கினார்கள். பெருமானே! இந்தத் தென்னாடு சிவனுடைய நாடாக ஆகத் திருவருள்புரிய வேண்டும் என்று வேண்டினார்கள். இவர்களுடைய கூற்றைக் கேட்ட திருஞானசம்பந்தர் அவர்களையும் உடன் அழைத்துக்கொண்டு கோயிலை அடைந்தார். பொற்றாமரையில் நீராடி இறைவனை வணங்கினார். பெருமானே! சமணரைவெல்ல அடியேனுக்கு அருள் செய்யவேண்டும் என்று வேண்டினார். உடன் இறை வன் பாண்டியனவையில் வாதுசெய்தால் சமணர்கள் தோற்றுக் கழுவேறுவார்கள் என்று அசரீரியாகக்கூறி அருள்செய்தார்.

மறுநாள் பாண்டிமாதேவியார் அரசரிடம் சமணர் களை நாட்டைவிட்டு ஓடுமாறு செய்தால்தான் சைவம் சிறப்படையும் என்று கூறினார். அரசனும் அதற்கு உடன்பட்டான். இந்நிலையில் சமணகுருமார்களை அவர் களது மனைவியர்கள் பலவாறு இகழ்ந்து உரையாடினார் கள். மானம் அவர்களைப் பிடர்பிடித்துத்தள்ளத் திரு ஞானசம்பந்தரோடு வாதிடப்புறப்பட்டார்கள். அவர் களது இல்லில் பலவித தீயநிமித்தங்கள் தோன்றின. அந்த நிமித்தங்களைக் கூறிப் பலவாறு புலம்பினார்கள். சமணர்களும் அரசனுடைய மாளிகையை நோக்கிச்

செல்லுங்கால் பலவித தீய சகுனங்கள் எதிர்ப்பட்டன. அதையும் பொருட்படுத்தாது அரண்மனை அடைந்து பகைவரை வாதில் வெல்லுவோம் என்று அரசனிடம் கூறினார்கள். திருஞானசம்பந்தரும் வந்து அவையில் வீற்றிருந்தார்.

அவ்வமயம் சமணகுருமார்கள் ஞானசம்பந்தரை நோக்கி உம்முடைய செயலால் அரசன் நோயினின்றும் நீங்கினான் என்பதை நாங்கள் ஒத்துக்கொள்வதாக இல்லை; உமது மந்திரம் அடங்கிய ஏட்டையும் எங்கள் மந்திரம் அடங்கிய ஏட்டையும் தீயிலிடுவோம்; எந்த ஏடு எரியாமல் பச்சென்றிருந்ததோ அவர்களே வென்றவர்கள்; இந்தச்செயலினை இவ்வாலவாயைவிட்டு வேறு இடத்திற்செய்வோம் என்றார்கள். பின்பு இருசாரரும் மதுரையின் கீழ்த்திசையை அடைந்தார்கள்.

கீழ்த்திசையை அடைந்த அவர்கள் அங்கு ஒரு கிடங்கு வெட்டித் தீ மூட்டினார்கள். பாண்டியனும், அமைச்சரோடும் பாண்டிமாதேவியாரோடும் அங்கு வந்திருந்தான். உடன் சமணர்கள் தங்கள் மந்திரங்கள் எழுதிய ஏட்டைத் தீயிலிட்டார்கள். அது எரிந்து சாம்பராயிற்று. திருஞானசம்பந்தரும் "போகமார்த்த பூண்முலையாள்" என்ற திருப்பாடலை எழுதித் தீயிலிட்டார். அவ்வேடு எரியாமல் பச்சென்றிருந்தது. அந்த இடத்தை இன்றும் மக்கள் திருஞானசம்பந்தர் பெயரால் சம்பந்தாகத்தம் என்று வழங்கிக்கொண்டு இருக்கிறார்கள்.

பின்னும் சமணர்கள் அரசனிடம் இருவருடைய மந்திரங்களும் அடங்கிய ஏட்டை வைகையாற்றில்

விடுவோம்; யாருடைய ஏடு எதிரேறிச்செல்கின்றதோ அவர்களே வென்றவர்கள்; தோற்றவர் வென்றவர்க்கு அடிமையாகிவிடுவர் என்றும் கூறினர்கள். அன்றியும் சிவநிந்தை செய்த நாங்கள் கழுவிலேனும் ஏறுகின்றேம் என்றும் சூளுரை கூறினர்கள். சமணர்களது கூற்றைக் கேட்ட திருஞானசம்பந்தர் பெருங்கருணையுடையவராய், சமணர்களை நோக்கி நீங்கள் எல்லாம் சைவசமயத்தைப் பின்பற்றி உய்ந்துவாழுங்கள் என்று கூறினர்.

இவ்வுரையைக் கேட்ட சமணர்கள் மிகவும் கோபம் கொண்டவராய், தம்முடைய மந்திரங்கள் அடங்கிய ஏட்டை வைகையாற்றின் வெள்ளத்தில் விடுத்தார்கள். திருஞானசம்பந்தர் 'வாழ்க அந்தணர்' என்ற பதிகத்தை எழுதி இறைவனை எண்ணி வைகையாற்றில் விட்டார். சமணர்கள் இட்ட ஏடெல்லாம் நீரோடு சமுத்திரத்தை நோக்கி ஓடத்தொடங்கின. திருஞானசம்பந்தர் இட்ட ஏடானது திருவருளால் எதிரேறிச் சென்றது. இதனைக் கண்ட மக்கள் அனைவரும் மகிழ்ச்சிக்கடலில் அழுந்தினர்கள். தேவர்கள் மலர்மாரி சொரிந்தார்கள். சமணர்கள் எல்லாம் என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்துநின்றார்கள். அரசரும், அமைச்சரும், பாண்டிமாதேவியும் விரைந்து சென்று திருஞானசம்பந்தரை வணங்கி நின்றார்கள். அந்நிலையில் சமணர்கள் அடியவரெதிரேவந்து நாங்கள் தோற்றேம் நீரே வென்றீர் என்று கூறினர்கள்.

திருஞானசம்பந்தர் பெருங்கருணையோடு சமணர்களை எல்லாம் நோக்கினர். நீங்கள் இனியாவது இறைவருக்கு ஆட்பட்டு உய்யுங்கள் என்று கூறுவாரானர்.

இச்சொல்லைக் கேட்ட சமணர்கள் பொருது தாங்க ளாகவே சென்று கழுவில் ஏறினார்கள். சிலர் திருநீறு அணிந்து சைவரானார்கள். திருநீறு கிடைக்கப்பெறாத வர்கள் கோமயத்தையும் பசுஞ்சாணியையும் அள்ளிப் பூசிக்கொள்ளலானார்கள். கழுவேறிய சமணர்களது உடலினைப் பருந்தும் காகமும் இழுத்துத்தின்றன.

பின்னர், பாண்டியன் திருஞானசம்பந்தர் ஆற்றி லிட்ட ஏடு எங்கே சென்றது என்று ஆராயலானான். அவ்வேடு ஒரு காவததூரத்திற்கு அப்பால் சென்றிருந் தது. அங்கு சென்று அடியவர் இறைவனை எண்ணிப் பாடினார். இறைவரும் ஏட்டினைக் கொடுத்து மறைந் தார். அவ்விடத்தில் பாண்டியன் இறைவனுக்கு எல்லாச் சிறப்புக்களும் பொருந்த ஆலயம் எடுத்தான். அன்றுமுதலாக அந்தத் தலம் திருவேடகம் என்னும் பெயரினைப் பெற்று விளங்கிக்கொண்டிருக்கிறது.

திருஞானசம்பந்தர் சிலகாலம் அந்தத் தலத்தில் தங்கி இறைவனை வழிபட்டார். பின்னர், சோழநாடு செல்ல வேண்டுமென்ற எண்ணம் உண்டாயிற்று. உடனே மதுரையை அடைந்தார். இறைவனையும் இறைவியையும் வழிபட்டு, பல வரங்களைப் பெற்றுக் கொண்டார். அரசன், அரசி, அமைச்சராகிய மூவரும் விட்டுப்பிரிய இயலாதநிலையில் திருஞானசம்பந்தரைப் பின்தொடரலானார்கள். திருஞானசம்பந்தர் அவர்களை நோக்கி, நீங்கள் இங்கிருந்து இறைவனருளால் திருநீற் றொளியைப் பரவச் செய்துகொண்டிருங்கள் என்று கூறியருளினார். அன்றுமுதல் பாண்டியநாடு திருநீற் றொளியில் சிறந்து விளங்கிக் கொண்டிருக்கிறது.

## 64. வன்னியும் கிணறும் இலிங்கமும் அழைத்த படலம்

---

மதுரையின் கிழக்குச் சமுத்திரக்கரையில் உள்ள ஒரு பட்டினத்தில் வணிகனொருவன் வாழ்ந்துவந்தான். அவன் பலவகைச் செல்வங்களையும் பெற்று விளங்கினான். அத்தகைய வணிகனுக்கு மக்கட்செல்வம் கிட்டவில்லை. பலவகை அறங்களைச் செய்தான். அவ்வறத்தின்பயனாக அவன் ஒரு பெண்மகவை அடையும் பேறு பெற்றான். அந்தப் பெண்மகவை அவ்வணிகன் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாகப் பேணி வளர்த்துவந்தான்.

தனது செல்வமகளை அவ்வணிகன் தன் மருமகனுக்கே மணமுடித்துக் கொடுக்கவேண்டும் என்று எண்ணினான். அதனை ஊரவரும், உறவினரும் அறியச் சொல்லிக்கொண்டிருந்தான். சிலநாளில் அவ்வணிகன் இறைவன் திருவடியை அடைந்துவிட்டான். அவன் இறந்தவுடன் அவனுடைய அருந்ததியனைய மனைவியும் இறந்துவிட்டாள். உறவினர்கள், இருவர்களுக்கும் செய்யவேண்டிய கடன்களைச் செய்து முடித்தார்கள். பின் மதுரையிலுள்ள வணிகனுடைய மருமகனுக்கு ஓலையெழுதி அனுப்பினார்கள்.

ஓலையைக் கண்டதும் அவன் அனலிடைப்பட்ட மெழுகைப்போல் மனமுருகிக்கரைந்தான். கிளைஞரும் நட்பினரும் மனம்தேற்றத்தெளிந்தான். பின் உறவினர் சூழ்ந்துவர மதுரையினின்றும் நீங்கி மாமனுடைய

ஊரை அடைந்தான். அங்குள்ளோர் அனைவரும் எதிர் கொண்டு உடன்வரத் தன் மாமன்வீட்டை அடைந்து இருப்பானுனன்.

சிலநாள் கழிந்தது. பின்னர் அவ்வணிகன் தனது மாமன்மகளை மணஞ்செய்துகொள்வது என்ற முடிவிற்கு வந்தான். மாமனுடைய பொருள்களையெல்லாம் எடுத்துக்கொண்டு பெண்ணையும் அழைத்துக்கொண்டு மதுரையை நோக்கிப் புறப்பட்டான். சென்றவன் சூரியன் மறையும் நேரம் திருப்புறம்பயம் என்னும் தலத்தை அடைந்தான். இறைவனை வழிபட்டு அன்று இரவு தங்குவதென முடிவிற்கு வந்தான். வன்னிமரத் தடியில் சமைத்து உண்டு கோயிலின் படி ஒன்றில் படுத்து உறங்கினுன். அவ்வமயம் பாம்பொன்று அவனைத் தீண்டிற்று. உடன் விடம் தலைக்கேற அந்த வணிகன் உயிர் துறந்தான். அதுகண்ட உறவினர்கள் அழுது புலம்பினுர்கள். இச்செயலைக்கண்ட வணிகப் பெண் ஒருபுறத்தில் ஒதுங்கி அறிவிழந்து மயங்கி உயிர் நீத்தவள்போலானுள். துன்பமே இன்னதென அறியாத அவள் சேடியர்கள் தேற்றவும் தேருமல் வாய்விட்டுப் புலம்பலானுள்.

திருப்பதிகள்தோறும் வழிபட்டுக்கொண்டு வருகின்ற திருஞானசம்பந்தர் திருப்புறம்பயத்தில் ஒரு திருமடத்தில் தங்கியிருந்தார். இப்பெண்ணின் அழுகை ஒலி திருமடத்திலிருந்த அவருக்கு எட்டிற்று. உடன் திருக்கோயிலை அடைந்தார். அப்பெண்ணைப் பார்த்து நீ யார்? என்று வினவினுர். அப்பெண் தனக்கு நிகழ்ந்த யாவற்றையும் எடுத்து அவரிடம் கூறினுள். உடன் திருஞானசம்பந்தர் இறந்த வணிகன்பக்கல் சென்று

இறைவன் திருவருளை எண்ணித் துதித்தார். வணிகன் விடம் இறங்கப்பெற்று உயிர்பெற்றுன்; எழுந்தான். கண்டோர் யாவரும் பெருவியப்புற்றனர். அவ்வணிகப் பெண்ணும் அளவற்ற மகிழ்ச்சியுடையவளாய் ஒரு புறத்தே ஒதுங்கி இருந்தாள்.

திருஞானசம்பந்தர் வணிகப் பெண்ணின் கற்பின் திறத்தை அறிந்தார். உடன் அவ்வணிகனை நோக்கி ருர். இவள் உன் மாமனுடைய மகள். சிறந்த கற்பு ஒழுக்கமுடையவள்; இவளை இங்கேயே நீ மணஞ் செய்துகொண்டு மதுரை செல்வாயாக என்று கூறி யருளினுர். அவ்வணிகனும் அவரது அருளுரையைச் சிரமேற்கொண்டான். அடியவரை வணங்கி உறவி னரும் நட்பினரும் ஆகிய சான்று ஒன்றுமின்றி நான் எவ்வாறு மணப்பேன் என்று கூறினுன்.

திருஞானசம்பந்தர், இப்பெண்ணைப் பெற்ற உட னேயே உன் மாமன் உனக்கென்றே முடிவு செய்து இருந்தான் ; இதனை உன்னுடைய உறவினர் அனை வருமே அறிவர் ; அல்லாமல் இந்த வன்னிமரமும், கிணறும், இவ்விலிங்கமும் சான்ருகும் ; நம்முடைய சொல்லையேற்று நீ இங்கேயே மணஞ்செய்துகொண்டு செல்க என்ருர், வணிகனும் உடன் மணஞ்செய்து கொண்டு மனைவியோடு அவருடைய திருவடியில் வணங்கினுன். பின், மனைவியோடு மதுரை அடைந்து உறவினர் புகழப் பெருஞ்செல்வம் பெற்றுக் குபேரனை ஒத்து வாழ்ந்திருந்தான்.

இவ்வணிகன் முன்னமே மணஞ்செய்துகொண் டவன். அவனுக்கு அறிவில்லாத பல பிள்ளைகளுண்டு.

இளையவள் ஒரே மகனை உடையவள். அம்மகனும் சிறந்த அறிவுடையவன். குழந்தைகள் வீதியில் விளையாடும்பொழுது மூத்தவளுடைய பிள்ளைகள் இளையவளுடைய பிள்ளையை அடித்துவிட்டார்கள். இந்நிலையறிந்த இளையாள், மூத்தாளின் பிள்ளைகளைக் கடிந்து கொண்டாள்.

இளையாள் தன்மக்களைக் கோபித்துக்கொண்டாள் என்பதை மூத்தாள் அறிந்தாள். உடன் இளையாளை நோக்கி ஊர், பெயர், சாதி, தாய்தந்தை இன்னரென்று அறியாத நீ; யாரும் காணமல், அக்கினியின் முன்னல் மணஞ்செய்துகொள்ளாத நீ; எனது நாயகனுக்குக் காமக்கிழத்தியாக வந்த நீ; உனக்கேன் வீண் வாய்? சான்று உண்டேல் கூறு என்றுள்.

இளையாள் மூத்தாளின் சுடுசொல்லைக் கேட்டாள். என்னுடைய நாயகர் திருப்புறம்பயத்தில் பாம்பு கடித்து இறந்தார்; இறந்தவரைத் திருஞானசம்பந்தர் எழுப்பினர்; அவரருளியபடி வன்னிமரம், கிணறு, இலிங்கம் இவைகள் சான்ருக என்னை மணந்தார் என்று கூறினுள். அதுகேட்ட மூத்தாள் நகைத்தாள். உண்மையானல் அச்சான்றுகளை இங்கே காணுமாறு செய்; நம்பலாம் என்றுள்.

அச்சொல் கேட்ட இளையாள் பெருமூச்செறிந்து வருந்தினுள். இல்லினை அடைந்தாள். செய்வதறியாது திகைத்தாள். திக்கற்றவருக்குத் தெய்வமே துணை என்பதை எண்ணினுள். சோமசுந்தரக்கடவுளை மனத்திடை வந்தித்து வழிபட்டுக் குறையிரந்தாள். பெருமானே! என்னுடைய பழியைப்போக்கி அருள்செய்க என்று வேண்டினுள். இரவு முழுவதும் உணவும்

உறக்கமுமின்றி இருந்தாள். பொழுது புலர்ந்ததும் திருக்கோயிலை அடைந்தாள். பொற்றாமரைவாவியில் நீராடினாள். இறைவன் சந்நிதியின் முன்னர் நின்று வணங்கிக் குறையிரந்தாள்.

அந்நிலையில் அவளுடைய துன்பத்தைக் கண்ட பெருமான் தனது கோயிலின் ஈசான மூலையிலே அம் மூன்று சான்றுகளும் வருமாறு எண்ணினார். அம் மூன்றையும் அங்கே கண்ட இளையாள் மூத்தவளை அழைத்துக்கொண்டு வந்து காட்டினாள். அவளும் கண்டு வணங்கி நின்றாள். ஊரினர் யாவரும் இளைய வளின் கற்பைப் பெரிதும் பாராட்டினார்கள்.

நாயகனாகிய வணிகன் மூத்தவளின் குற்றத்தை மனத்துட்கொண்டான்; அவளைத் தள்ளிவைத்தான். அதனை அறிந்த இளையாள் நாயகனை வணங்கி, அவளைச் சேர்த்துக்கொள்ளும்படி வேண்டினாள். அவனும் அதனை ஏற்றுக்கொண்டான். இருவரும் மனமொத்து வாழலானார்கள். வணிகனும் அளவற்ற செல்வமும் புகழும் பெற்று வாழலானான்.

மதுரையில் கோயில்கொண்டு எழுந்தருளியுள்ள சோமசுந்தரக் கடவுளுடைய அருளாடல்கள் இன்னும் பலவாகும். ஆயினும், நம் குருவாகிய முருகப்பிரான் நமக்கு அருளிச் செய்தவாறே நாம் இந்த அறுபத்து நான்கு அருளாடல்களையும் உங்களுக்கு எடுத்துக் கூறினோம். எல்லோரும் இன்று முதல் துவாதசாந்தத் தலமாகிய மதுரையைத் திரிகரண சுத்தியோடு வழி பட்டுக்கொண்டு இருங்கள் என்று எடுத்துக் கூறித் தாமும் அவரை மனத்துள் எண்ணி வழிபடுவாரானார்.

## அருச்சனைப் படலம்

---

அகத்தியமுனிவர் மேலே கூறியவாறு முனிவர் கட்கு இறைவனின் அறுபத்துநான்கு அருளாடல்களை யும் எடுத்துச் சொன்னார். முனிவர்கள் அவரையும் அவரது மனைவியாராகிய உலோபாமுத்திரையையும் மலர்கொண்டு அருச்சித்து வணங்கினார்கள். சுவாமி! தாங்கள் கூறிய வரலாற்றைக் கேட்டதனால் பிறவி யெடுத்த பெரும் பயனைப் பெற்றோம்; ஆயினும், அந்த இறைவனைக் கண்டு களிக்க விரும்புகின்றோம் என்றார்கள்.

அகத்திய முனிவர் அகமிக மகிழ்ந்தார். முனிவர் களை நோக்கினார். வாருங்கள். இறைவனை அகக் கண்ணால் கண்டு வழிபடுபவர்களே வீடுபேறடைவார் கள். ஆதலால், நாம் அந்த இறைவனை அருச்சனை செய்து வழிபடுவோம் என்றார். முனிவர்கள் அனைவ ரும் கங்கையில் நீராடித் திருவைந்தெழுத்தை ஓதித் தெய்வவிமானத்தில் ஏறி விண்வழியே செல்லலானார் கள். செல்லுங்கால் அகத்தியர் வழியிடையுள்ள பல தலங்களையும் முனிவர்களுக்குக் காட்டியருளினார். முனிவர்கள் அந்தத் தலங்களை வழிபட்டுக்கொண்டு முடிவில் மதுரையை அடைந்தார்கள்.

மதுரையை அடைந்த முனிவர்கள் கோபுரத்தைக் கண்டதும் விழ்ந்து வணங்கினார்கள். திருக்கோயிலின் உள்ளே சென்றார்கள். அங்கு பொற்றாமரைவாவியில் நீராடினார்கள். முறைப்படி நியமங்களைச்செய்து முடித் தார்கள். ஓம் என்னும் மூலமந்திரத்தை மனத்திடை

எண்ணிச் சித்திவிநாயகரை வணங்கினுர்கள். பின்னர் இறைவியின் சந்நிதியை அடைந்தார்கள். அம்மையின் அருளை அன்பு கொடுத்துப் பெற்றுர்கள். இறைவன் சந்நிதியை அடைந்து வணங்கினுர்கள். அன்று ஒன்றும் உண்ணுது தங்கியிருந்தார்கள்.

மறுநாள் பொழுதுபுலர்தற்கு முன் எழுந்தார்கள். நீராடி நியதிகளைச்செய்து முடித்தார்கள். பின்னர் உரிய பொருள்களைக்கொண்டு இறைவனைத் திருமுழுக் காட்டினுர்கள். மலர்கள்கொண்டு அலங்கரித்து அருச் சனை செய்து வழிபட்டார்கள். பின் பலவாறு தோத் திரித்தார்கள்.

முனிவர்களின் தோத்திரங்களைக்கேட்ட பெருமான் சிவலிங்கத்தினின்றும் வெளிப்பட்டு, முனிவர்களே! நீங்கள் செய்த பூசையை ஏற்று மகிழ்ந்தோம் என்று கூறியருளினுர். உடன் அகத்தியமுனிவரை நோக்கி உன்னை ஒப்பவர் உலகத்தில் ஒருவருமில்லை; உலகத்தில் உனக்கு அரியது ஒன்றும் இல்லை என்றுகூறி அருள் புரிந்தார். அகத்தியர் வசிட்டர் முதலாய முனிவர்கள் அன்று தொடங்கி நாள்தோறும் மூன்று காலமும் இறைவனையும் இறைவியையும் வழிபட்டுக்கொண்டு இருப்பாராஞர்கள்.

